# சிவானந்தரின் சித்தி விளையாடல்கள்

"MIRACLES OF SWAMI SIVANANDA"





ஸ்ரீ சுவாமி சிவானந்தா

சிவானந்தரின்

# சித்தி விளையாடல்கள்

தமிழாக்கம்

ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தா

வெளியிடுவோர் :

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம், சேலம் மாவட்டம்




விலை ரூ.20-00

Translated into Tamil from
"MIRACLES OF SWAMI SIVANANDA"

Ist Edition. 1969
IInd Edition. 1993

PRINTED AT THE ORIENT LITHO PRESS., SIVAKASI.

# பொருளடக்கம்



## முதல் பாகம்

## சீடர்களின் அனுபவங்கள்

### பாகம் இரண்டு

பக்கம்

பக்கம்

## பிரசுரிப்போர் குறிப்பு

அதிசயங்கள் ஒரு யோகிக்கு அதிசயங்களல்ல. அவர் இருக்கின்ற உணர்வு நிலையில் அவைகள் சகஜமானவைகளாக இருப்பதோடு பெரும்பாலும் தவிர்க்கப்பட முடியாதவைகளாகவும் இருக்கின்றன. ஆகவே அவர் தன்னுடைய சொந்த மனோசக்திகள், ஆன்மீக சக்திகளைப் பற்றிக்கூட அறிவதில்லை. நடப்பது, பேசுவது அல்லது பார்ப்பது போன்ற நம்முடைய உணர்விற்கு மேம்பட்டதை நாம் ஒரு அதிசய சக்தி என்கிறோம்.

இருப்பினும், ஒரு முனிவர் அல்லது யோகியினுடைய அற்புத சக்திகளை அனுபவிக்கின்ற ஒரு சாதாரண மனிதன் அவைகளால் மிகவும் உற்சாகப்படுத்தப்படுவதோடு அவனுக்கு அந்த யோகியினிடத்திலுள்ள நம்பிக்கையும், கடவுள் பக்தியும், தெய்வீக வாழ்க்கையின் மீதுள்ள அன்பும் வளர்ச்சியடைகின்றன. அந்த யோகியினுடைய மகத்தான சக்திகளைக் கண்டு அவன் தானாகவே தன்னுடைய ஆச்சரியத்தையும், திகைப்பையும், தான் அடைந்த நன்மைகளுக்காக நன்றி கலந்த விசுவாசத்துடன் தெரிவிக்கின்றான்.

இப் புத்தகத்திலே குறிப்பிடப்பட்டிருக்கும் சுவாமி சிவானந்தரின் அற்புதங்களில், அவைகள், சம்பந்தப்பட்ட பக்தர்களிடம் அந்தரங்க ஆன்மீக மாற்றத்தைத் தவருது ஏற்படுத்தியிருக்கின்றன என்பதை வாசகர்கள் கவனிக்கத் தவற மாட்டார்கள். இதுதான் சுவாமி சிவானந்தரின் மிகப் பெரிய அதிசயம். பக்தருடைய நோய் குணமாக்கப் படுகிறது அல்லது உயிர் காப்பாற்றப்படுகிறது; அந்தக் கணத்திலேயே ஒரு அந்தரங்க மாற்றம், ஒரு உள்ளத் தூய்மை கடவுளை உணர வேண்டுமென்கின்ற ஆவலின் வேகம் உண்டாகின்றது. ஸ்ரீ சுவாமி சிவானந்தருடைய அற்புதம் பக்தருக்கு ஒரு கஷ்டத்தை சமாளிப்பதற்கு

மட்டும் உதவுவதில்லை. ஆனால் துரிதமான ஆன்மீக முன்னேற்றத்தை அடையவும், ஆழ்ந்த தியானத்தை அனுபவிக்கவும், எல்லையற்ற பரம்பொருளோடு இணைந்து வாழவும் செய்கின்றது. ஸ்ரீ சுவாமி சிவானந்தர் மாயா ஜால வித்தையை ஊக்குவிப்பதில்லை; ஆனால் அவருடைய அற்புதச் செயல்கள் அவற்றை அனுபவிப்பவர்களிடம் ஒரு அந்தரங்க ஆன்மீக மாற்றத்தைக் கொடுக்கவல்ல வடிவையே எப்பொழுதும் எடுக்கின்றன.

சித்தி விளையாடல்களில் உள்ள இந்த முக்கியமான அம்சத்தை பொது மக்களுக்கு உணர்த்துவான் வேண்டி இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.

*—பிரசுரிப்போர்.*

# உம்மால் முடிந்தது

உம்மால் முடிந்த நன்மை அனைத்தையும்
உம்மால் முடிந்த எல்லா வழிகளிலும்
உம்மால் முடிந்த எல்லா இடங்களிலும்
உம்மால் முடிந்த எல்லாக் காலங்களிலும்
உம்மால் முடிந்த எல்லா மக்களிடமும்
உம்மால் முடிந்த வரை எப்பொழுதும்

**செய்வீராக !**

—சுவாமி சிவானந்தா

# அற்புதங்களைப் பற்றிய இரகசியம்

( ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தா )

—— (o) ——

அற்புதங்கள் மனத்தின் ஐகாக்ரிய தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது.

மனத்திற்கு அளவு கடந்த சக்தி உண்டு. அது தன்னுடைய சக்தியை ஆத்மனிடமிருந்து பெறுகின்றது.

மனம் எண்ணங்களின் ஒரு தொகுப்பு. மனத்தின் சக்தி, தொல்லை, கெட்ட எண்ணங்கள், கவலைகள், ஆவல்கள், பிரம்மச்சரியக் குறைவு ஆகியவைகளால் விரையமாக்கப்படுகின்றது.

மனமானது பெற்றிருக்கும் அளவு கடந்த சக்தியை, ஐகாக்ரியத்தின் மூலமாகவும், உயர்ந்த எண்ணங்களின் மூலமாகவும் உங்களால் கட்டுப்படுத்த முடியுமானால் நீங்கள் சித்திகள் அல்லது அமானுஷ்யச் செயல்களைச் செய்யும் சக்தியைப் பெறுவீர்கள்.

எட்டு பெரிய சித்திகள் (அஷ்டமா சித்திகள்) ராஜ யோகிகளால் செய்யப்படும் மாபெரும் அற்புதங்களாகும். இவற்றைத் தவிர பல்வேறு சிறு சிறு சித்திகளும் உள்ளன.

சித்திகள், ஐகாக்ரியத்தைப் பழகும்போது வருகின்றன. அவைகள் ஐகாக்ரியத்தின் உப பொருள்கள். நீங்கள் அவற்றை ஈவிரக்கமின்றி ஒதுக்கித் தள்ள வேண்டி இருக்கிறது. இந்த சித்திகளுக்கு நீங்கள் பலியாகி விட்டால் உங்களால் லக்ஷியத்தை அடைய முடியாது.

ராஜ யோகிகளால் செய்யப்படுகின்ற சித்திகள் உண்மையானவை. அவர்களால் ஒரு வஸ்துவின் பரமாணுக்களை (Molecules) மாற்றியமைக்க முடியும். அவர்களால் தங்களுக்கு வேண்டிய சக்தியை ஈதர் எனப் படும் ஆகாசமாகிய தெய்வீக மார்க்கமாகப் பெற்றுத்

தங்களுடைய யோக சக்தியால் எப்பேர்ப்பட்ட பொருளை யும் உண்டுபண்ண முடியும்.

ஒரு ஞானி சத்சங்கல்ப (தூய விருப்பம்) சக்தியின் மூலம் அற்புதங்களை நிகழ்த்துகின்றார். ஒரு ராஜ யோகி சம்யமத்தின் மூலம் (தாரணை, தியானம், சமாதி ஆகிய மூன்றையும் ஒன்று சேர்த்தல் மூலம்) அற்புதங்களைச் செய்கின்றார்.

சூரியனை நோக்கி சம்யமம் செய்வதனால் யோகி யானவர் ஈரேழு உலகங்களின் ஞானத்தைப் பெறுகின்றார்.

சந்திரனை நோக்கி சம்யமம் செய்வதால் அவர் நட்சத்திர மண்டலங்களின் ஞானத்தை அடைகின்றார்.

துருவ நட்சத்திரத்தை நோக்கி சம்யமம் செய்வதால் நட்சத்திரங்களின் சஞ்சார ஞானம் ஏற்படுகின்றது.

யானைகள் முதலியவற்றின் பலத்தின்மீது சம்யமம் செய்வதால் அவர் அந்த ஜீவன்களுக்குச் சமமான சக்தி யைப் பெறுகின்றார்.

சரீர உருவத்தின்மீது சம்யமம் செய்து கிரஹிக்கும் சக்தியைத் தடுந்து நிறுத்தும்பொழுது அவரால் சரீரத்தை மறைந்து போகும்படி அருவமாக்க முடிகிறது

மற்றவர்களின் தோற்றம் முதலியவைகளின் மீது சம்யமம் செய்வதின் மூலம், யோகியானவர் அவர்க ளுடைய உள்ளத்தின் ஞானத்தைப் பெறுகின்றார்.

"விநாடி" (Moment) யின் மீது சம்யமம் செய்வதால் அவர் விவேகத்தைப் பெறுகின்றார்.

காதிற்கும் ஆகாசத்திற்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றி சம்யமம் செய்யும் பொழுது யோகி திவ்யப் பிரசன்ன (Clair audience) சக்திகளைப் பெறுகின்றார்.

ஆகாசத்திற்கும் சரீரத்திற்கும் உள்ள சம்பந்தத்தின் மீது சம்யமத்தைப் பயின்று வரும்பொழுது யோகி சரீர நொய்மையும், ககன மார்க்கமாக சஞ்சரிக்கும் சக்தியையும் அடைகின்றார்.

மனத்தின் மூன்று மாறுபாடுகளின் மீது சம்யமம் செய் வதன் மூலம் கடந்த, எதிர்கால ஞானம் வருகின்றது.

சம்ஸ்காரங்களை சம்யமிப்பதானது பிறவிகளின் ஞானத்தை அவருக்கு அளிக்கின்றது.

புலன்களை சம்யமிப்பதால் இந்திரிய ஜெயம் ஏற்படுகின்றது.

சத்துவத்திற்கும் புருஷனுக்கும் உள்ள தெள்ளிய சம்பந்தத்தின் மீது சம்யமத்தைப் பயிலுவதால் அவர் சர்வ வல்லமை சர்வஞ்ஞத்துவ சக்திகளைப் பெறுகின்றார்.

அந்தரங்க ஒளியை சம்யமிப்பதானது சூக்ஷ்மமானது, தெளிவற்றது, தொலைவில் உள்ளது ஆகியவற்றைப் பற்றிய ஞானத்தைக் கொடுக்கிறது.

தனது சொந்த ஆத்மனையே சம்யமிப்பதானது யோகிக்கு இயற்கையுணர்வின் மூலமாக (Intuition) திவ்யப் பிரசன்னம் (Clair-audience), உயர்ந்த ஸ்பரிசம், திவ்ய திருஷ்டி (Clair voyance), உன்னத ருசி, உயர்ந்த மணம் ஆகியவற்றைக் கொடுக்கிறது. உள்ளறிவின் மூலம் அவர் சகல ஞானத்தையும் அடைகின்றார்.

உண்மையான யோகிகள், மனோவாக்கைக் கடந்த விஷயங்களும், கடவுளும் உண்டு என்பதை சீடர்களுக்கு உணர்த்துவான் வேண்டி அற்புதங்களைச் செய்து காட்டுகின்றனர். அவர்கள் பகிரங்கமாக மேடையின்மீது அற்புதங்களைச் செய்யமாட்டார்கள்.

சூடாலை ராணி தன்னுடைய கணவன் சிகித்வஜனுடைய கண்களைத் திறப்பதற்காக அற்புதங்களை நிகழ்த்தினாள். அவள் பூமிக்கு மேலே நின்றாள். அவள் ஆகாயத்தில் சஞ்சரித்தாள். ஸ்ரீ சங்கரர் திகைக்க வைக்கும் அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்திக் காட்டினார். அவர் காய்ச்சிய ஈயத்தைக் குடித்து ஒரு அரசனுடைய சரீரத்தினுள் நுழைந்தார். (பரகாயப் பிரவேசம்.)

ஸ்ரீ சதாசிவ பிரம்மன் ஒரு மஹா யோகி. அவர் பல உண்மையான அற்புதங்களை நிகழ்த்தினார். அவர் ஒரே சமயத்தில் பல இடங்களில் காணப்பட்டார். அவர் சில மாதங்கள் காவேரி நதிக்கரையில் நிலத்திற்கடியில் புதைபட்டுக் கிடந்தார். அவருடைய கைகள் துண்டிக்கப்

பட்டன. அவர் முழுக் கரத்தையும் திரும்ப வரவழைத்தார்.

ஆகால்கோட் ஸ்வாமி எலும்பைத் தங்கமாக்கினார். மற்றொரு ஸ்வாமி ஒரு கல்லின்மீது சிறுநீர் கழித்தார். அது தங்கமாக மாறியது. ராமலிங்க ஸ்வாமி தண்ணீரை எண்ணெயாக்கினார். ஞானதேவர் ஒரு சுவரை நகரும்படி செய்தார். சங்தேவர் ஒரு கருநாகத்தைச் சவுக்காக உபயோகித்து ஒரு புலியின்மீது சவாரி செய்தார். இம்மாதிரியான அற்புதங்கள் யோகியினுடைய சத்சங்கல்ப சக்தியின் மூலமாக நிகழ்த்தப்படுகின்றன. அவர் இப் பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிக்கின்ற பரம்பொருளின் விருப்பத்தோடு ஒன்ருக இருக்கின்ருர். "நான் ஏகம். நான் அநேகமாக ஆகக் கடவது" என்ற பரம்பொருளின் ஒரே ஒரு சங்கல்பமானது உடனடியாக இப்பரந்த பிரபஞ்சமாக வடிவெடுத்ததைப் போல.

சிலர் பிறவிச் சித்தர்கள். ஸ்ரீ தத்தாத்ரேயர் ஒரு பிறவிச் சித்தர். தொந்தரவு கொடுத்த கூட்டத்திலிருந்து விலகிச் செல்லும் பொருட்டு அவர் ஒரு மங்கையையும் ஒரு புட்டி மதுவையும் உண்டாக்கினார்.

உடலினின்று பிரிந்து சென்ற சில ஆவிகளின் உதவியைக் கொண்டு சிலர் சிறுசிறு அற்புதங்களைச் செய்து காட்டுகின்றனர். இவைகள் எல்லாம் பயனற்றவைகள். இவைகளுக்கும் ஆன்மீகத்திற்கும் ஒன்றும் சம்பந்தமில்லை.

நைட்ரிக் அமிலத்தைக் குடித்தல், ஆணிகளை விழுங்குதல், பாம்புகளையும் கண்ணாடித் துண்டுகளையும் மென்று காட்டுதல், நெருப்பின்மீது நடத்தல் ஆகியவைகள் எல்லாம் ஆன்மீக யோகிகள் செய்யும் உண்மையான சித்திகள் ஆகா. அவைகளுக்கும் யோகத்திற்கும் ஒன்றும் சம்பந்தமில்லை. அவைகள் எல்லாம் மோசடி செய்பவர்களால் பணம் சம்பாதிப்பதற்காகச் செய்யப்படுகின்றன. இந்த வேடிக்கைகளைக் கண்டுபிடித்தவர்கள்கூட ஏமாற்றமடைந்து விடுகின்றனர். மட்டரகமான வேடிக்

லைகக் காட்டுபவர்களைக் கண்டு எச்சரிக்கையாக இருங்கள். ஏமாந்து போய்விடாதீர்கள்.

அற்புதங்கள் பிரார்த்தனையால் ஏற்படுகின்றன. விசுவாசமுள்ள பக்தர்களின் மனப் பூர்வமான பிரார்த்தனைகளுக்கு இறைவன் எப்பொழுதும் செவி சாய்க்கின்றான். அற்புதங்களில் மிகச் சிறந்தது நம்பிக்கையே.

மந்திரங்களுக்கு மாபெரும் சக்தி உண்டு. சப்தத்தை வெளிச்சமாகவும், உருவமாகவும் மாற்ற முடியும். சில ரகசிய சூத்திரங்களுக்கு அபாரமான சக்தி உண்டு. ஒருவனைத் தேள் கொட்டிவிட்டால் மந்திரவாதி ஒரு மந்திரத்தை ஜெபிக்கின்றான். கடிபட்டவனுக்கு வலி நீங்கி விடுகிறது! இது ஒரு அதிசயமல்லவா? இதுதான் மந்திரத்தில் உள்ள சக்தி. அந்தச் சக்திதான் அந்த மந்திரத்தைப் பாராயணம் செய்து அதில் சித்தி பெற்ற மஹா யோகிகளின் ஆன்மீக சக்தியினால் மேலும் பலப்படுத்தப்படுகின்றது. அந்த மந்திரத்தை ஜெபித்து வரும் சாதகனுடைய நம்பிக்கை அதனுடைய தெய்வீக சக்தியை விடுவிப்பதற்கு ஒரு திறவுகோலாக அமைகிறது.

தண்ணீரை மதுவாக்குவது கடினமல்ல. ஆனால் உலகாயத மனம் படைத்த மக்களை தெய்வீக ஜீவர்களாக மாற்றி யோக மார்க்கத்தில் அவர்களைச் செலுத்துவது தான் கடினம். இதுதான் மிகப் பெரிய அதிசயம்.

அற்புதங்கள் தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கின்றன; இன்னும் இந்த உலகம் அழியும் வரைக்கும் தொடர்ந்து இருக்கும்.

அற்புதங்கள் சாதாரண மனிதனைத்தான் திகைக்க வைக்கும். யோகிகளுக்கு இவைகள் எல்லாம் சாதாரணம். இவைகள் அசாதாரணமானவைகள் அல்ல. யோகத்தின் தத்துவங்களையும், விதிமுறைகளையும் அறிந்து, இயற்கையை வென்றவர்களுக்கு இவைகள் சர்வ சாதாரண சம்பவங்களாகும்.

## சாதகர்களின் அனுபவங்கள்

அற்புதங்கள் எல்லாம் பக்தர்களின் மனப்பூர்வமான பிரார்த்தனைகளுக்கு இறைவன் கொடுக்கும் பதில்களாம். உண்மையான சாதகனுக்கு உதவவும், ஒரு வீழ்ச்சியி லிருந்து அவனை மீட்கவும், ஒரு தடையிலிருந்து வெல்லவும் ஒரு முனிவரால் தக்க சமயத்தில் கொடுக்கப்படுகின்ற மறு உறுதிப்பாடே அற்புதங்களாம். அவைகள் ஒரு முனிவரிட மிருந்து சூக்குமமாகக் கிளம்புகின்ற ஆத்ம சக்தியின் பிரவாகங்களாகும். அவைகள் அம் முனிவர் சகல ஜீவ ராசிகளின் பேரிலும் கொண்டிருக்கும் அன்பு, சேவை, ஆர்வம் எனப்படும் இயற்கைகளால் தாங்கிச் செல்லப் பட்டுப் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குத் தக்க சமயத் தில் காப்பாற்றவும், தூக்கிவிடவும், வழிகாட்டவும் போய் அடைகின்றன.

உதவுகின்ற அந்தக் கரமானது நமது பார்வையி லிருந்து மறைக்கப்பட்டுள்ளது- ஆனால் முனிவருடைய பரந்த திருஷ்டிக்கு அப்பாற்பட்டது எதுவுமில்லை. சர்வத் தையும் நோக்கவல்ல அவருடைய கண்ணிற்கு ரகசியம் என்பது எதுவும் இல்லை. நாம் நமது அவயவங்களை உயர்த்துவதைப் போல அவ்வளவு சர்வ சாதாரணமாக அவர் அற்புதங்களை நிகழ்த்துகின்றார்.

ஸ்ரீமத் ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தஜீ மஹராஜ் அவர்களின் பாரெங்குமுள்ள சீடர்கள் அவரிடமிருந்து விசித்திரமான வழிகளில் உடல் நோய்கள், மன வேதனைகள், புத்தி தடு மாற்றங்கள், ஆன்மீக வீழ்ச்சிகள் ஆகியவற்றை நீக்க மாபெரும் உதவியைப் பெற்றிருக்கின்ற சம்பவங்கள் ஏராளம், ஏராளம். பல சம்பவங்கள் ஏற்கெனவே வெளி யிடப்பட்டுள்ளன. பல்வேறு இடங்களில் உள்ள ஆன்மீக சாதகர்களின் பயபக்தியுடன் கூடிய கடிதங்களிலிருந்து பொறுக்கி யெடுக்கப்பட்டவைகளில் மேலும் சில இங்கு கொடுக்கப் பட்டிருக்கின்றன. அவைகள் மானிட சக்தி களுக்கு மேம்பட்டவைகள் என்று நம்மைத் திருப்தி

படுத்தி நம்முடைய உள்ளங்களில் மானிட வாழ்வின் லக்ஷியத்தை அடைய மேலும் சதா வளர்ச்சி பெற்றுவரும் மாபெரும் முயற்சிக்குத் தூண்டிவிடக்கூடிய ஒரு ஆவலே யும், ஒரு நம்பிக்கையையும் மறுபடி கிளறி விடுமேயாகில் அவை நமக்கு ஊக்குவிக்கும் பாடமாக அமையும் என்பது திண்ணம்.

முனிவர்களின் தெய்வீக ஸ்பரிசம் தீராத நோய்களைத் தீர்த்து வைப்பதும், சில வேளைகளில் இறந்தவர்களை மீட் பதும்கூட ஆன்மீக உலகத்தில் பிரத்தியக்ஷ சம்பவங் களாகும். இம்மாதிரியான அற்புதங்கள் பகுத்தறிவைத் திகைக்க வைக்கின்றன; சந்தேகமில்லை; ஆனால் இந்த அற்புதமானது பெரும்பாலும் தெரிந்த விதி முறைகளை பொய்ப்பிப்பதோடு மட்டும் அல்லாது உயர்ந்ததொரு நிய தியை வெளிப்படுத்தி விளையாடியும் காட்டப்படுகிறது. விஷயம் தெரியாதவன் இதைப்பற்றி முற்றிலும் அறியாதவ னாக இருக்கிறான். ஆகவே அவன் அச் சம்பவத்தைக் கண்டதும் ஆச்சரியமும், திகைப்பும் அடைகின்றான். உங்களுடைய காட்சியிலிருந்து காரணம் மறைக்கப்படும் பொழுது சம்பந்தப்படுத்தும் தொடர்பு அற்றுப்போவதால் காரியம் மட்டும் தென்படுகிறது. அப்பொழுது நீங்கள் அதை ஏதோ அமானுஷ்யமானது என்று உணருகின் றீர்கள்.

பாதிரிமார்கள், மருத்துவர்கள், சில விஞ்ஞானிகள் முதலியோர்

## அற்புத சகாப்தம்

### கடந்துபோய் விடவில்லை என்பதை ஒப்புக் கொள்கின்றனர்.

1. டாக்டர் ஜான் ப்ரோபெக், உடற்கூற்றுப் பேராசிரியர், பென்ஸில்வேனியா சர்வகலாசாலை வைத்தியப் பள்ளி (Dr. John Brobeck, Professor of Physiology at the University of Pennsylvania's Medical School.)

கிருஸ்தவ விஞ்ஞானிகள் பைபிளில் கூறப்பட்டிருக்கும் அற்புதங்கள் முடியாதவைகள் என்று கருதவில்லை. அப்பேர்ப்பட்ட விஞ்ஞானிகள் குருடர்கள் பார்வை பெற்றனர், கால் முடமானவர்கள் நடக்கச் செய்யப்பட்டனர் என்பதை இப்பொழுது ஒப்புக் கொள்கின்றனர்.

2. டாக்டர் W. J. மக்நல்லி ஒரு ரோமன் கத்தோலிக்கர், மான்ட்ரீல் மெடிகோ — சிரர்ஜிகல் சொஸைடியின் தலைவர். (Dr. W. J. Mc Nally, President of the Montreal Medico—Chirurgical Society, and a Roman Catholic.)

அற்புதங்கள் பிரத்தியக்ஷமான உண்மைகள். ஒரு அற்புதம் கடவுளால் நிகழ்த்தப்படுகின்ற ஏதோ ஒன்று. அது எப்பொழுது வேண்டுமானாலும் நிகழ்த்தப்படக் கூடும். இயேசுநாதர் உலகில் இருந்தபொழுது அற்புதங்களை நிகழ்த்தினார். கடவுள் குறுக்கிட விரும்பும் பொழுதெல்லாம் மறுபடியும் அற்புதங்கள் நிகழக்கூடும் என்று கத்தோலிக்கர்கள் நம்புகின்றனர்.

3. டாக்டர் J. சிரில் ஃப்லானகன், மான்ட்ரீல் பல் வைத்தியர், ப்ராமினென்ட் சர்ச் ஆப் இங்கிலாந்தின் லே ரீடர். (Dr. J. Cyril Flanagan,

Mont-eal Dentist, and Prominent Church of England lay Reader.)

அற்புதங்கள் ஒரு சக்தியினால் நிகழ்த்தப்படுகின்றன. அவைகளைப்பற்றி விஞ்ஞானிகள் ஒன்றும் அறியார்கள்.

4. ஒரு மனோதத்துவ சாஸ்திரி.

மனம் முதலிலும் பிறகு வஸ்துவும் வருகின்றது என்கின்ற பிளேட்டோவின் கோட்பாட்டிற்கு ஒரு முடிவான பதில் இல்லை. இதுதான் அற்புதங்களுக்கு ஆதாரமாக இருக்கின்ற கொள்கை.

5. புரொபஸர் T. G. ஹெண்டர்ஸன், சேர்மேன், தத்துவத்துறை இலாகா, மக்கில். (Prof. T. G. Henderson, Chairman of the Department of Philosophy at Mc Gill.)

ஹ்யூம் போன்ற ஆங்கில நாட்டு தத்துவ சாஸ்திரிகளால் ஸ்தாபிக்கப்பட்டிருந்த விஷ சம்பிரதாயமானது (sceptic tradition) பெரும்பாலும் அழிந்துவிட்டது. பொதுவான நியதிக்கு ஒத்துவராத இந்த சம்பவங்களை மானிடன் முன்பிருந்ததைவிட அதிகமாக ஏற்றுக்கொள்ளத் தக்கவனாக இருக்கின்றான். இயற்கையின் பொது விதிக்கு அப்பாற்பட்டதைப் போலத் தோன்றிய போதிலும் ஒவ்வொரு தனிப்பட்ட சம்பவத்தைப்பற்றி விளக்கம் கொடுக்க முடியும்.

6. டீன் ஜேம்ஸ் S. தாம்ஸன், பெகல்ட்டி ஆப் டிவினிட்டி, மக்கில் (Dean James S. Thomson, of the Faculty of Divinity at Mc Gill.)

அனுபவப்பட்ட மந்திரிமார்கள், பெரும்பாலான டாக்டர்கள் அனைவரும் அற்புதங்கள் ஒருபொழுதும் இல்லாமல் போகவில்லை என்பதை ஒத்துக் கொள்வார்கள். இந்தப் பிரபஞ்சம் ஒரு மூடப்பட்ட இயந்திர முறை, அது இயற்கையின் நியதிகள் எனப்படும் ஒன்றினால் இயக்கப்பட்டு வருகின்றது என்கின்ற கருத்தை விஞ்ஞானிகள் கைவிட்டு விட்டனர். ஆனால் நாம், கடவுளின் நேரடி நடவடிக்கைகளான ஆன்மீக கிருத்தியங்களை ஒதுக்கா

விடினும், ஒரு ஒழுங்குப்பாடான உலகத்தில் இன்னும் நம்பிக்கை வைத்துத்தான் தீரவேண்டும்.

7. ரெவெரெண்ட் நார்மன் லாஸன், ஸெயின்ட் ஜேம்ஸ் யூனியன் சர்ச், மினிஸ்டர். (Rev. Norman Lawson, Minister of St. James Union Church.)

நான் சட்டமும் ஒழுங்கும் உள்ள ஒரு உலகத்தில் நம்பிக்கை கொண்டுள்ளேன். அதில் காரியமானது எப்பொழுதும் காரணத்தைத் தொடர்ந்தே வந்திருக்கிறது. ஆனால், அற்புதங்கள் வழக்கமாக மாபெரும் நம்பிக்கை கொண்டிருக்கின்ற சமயங்களில்தான் நிகழ்கின்றன. நம்பிக்கை சக்திகளை வெளிப்படுத்துகின்றன. நம்பிக்கை இல்லாவிடில் அவைகள் இயங்கமாட்டா. அவநம்பிக்கை மலிந்திருக்கும் பொழுது அதே மட்டத்தில் நம்பிக்கை இயங்காது.

8. ரெவெரெண்ட் ரோலண்ட் போட்ஜர், ஸெய்ன்ட் குத்பெர்ட்ஸ் ஆங்கிலிகன் சர்ச்சின் ரெக்டர் (புரோகிதர்) (Rev. Roland Bodger, Rector of st. Cuthbert's Anglican Church.)

ஆன்மீக ரீதியில் அற்புதங்களே மிகவும் குறிப்பிடத் தக்கவைகள் அல்ல. (Miracles in themselves are not very significant spiritually.)

# முதல் பாகம்

## 1. உண்மைச் சித்தர்—சிவானந்தர்

ஸ்ரீ சுவாமி சதானந்தா

(alias ஸ்ரீ C. V. நாராயண ஐயர், M.A., L.T.,

முன்னாள் புரொபஸர், பிரசிடென்ஸி காலேஜ், சென்னை.)

உண்மையான ஆத்ம சாதகர்கள் சித்திகளுக்காக ஆசைப்படக்கூடாது, ஏனென்றால் அவ்வாறு அவைகளுக்காக ஆசைப்படும்பொழுது மேற்கொண்டு ஆன்மீக முன்னேற்றம் தடைபட்டுப்போகும் என்று ஸ்வாமி சிவானந்தர் நமக்கு எடுத்துச் சொல்வதும் அவருடைய புத்தகங்களில் எழுதுவதும் வழக்கம். நல்ல முன்னேற்றம் அடைந்துவந்த சிலர் இந்தச் சக்திகளைப் பெறவேண்டும் என்கின்ற ஆசை வலையில் சிக்கி அதுமுதல் படு வீழ்ச்சி அடைத்த சம்பவங்களை அவர் கண்ணுற்றிருக்கின்றார். இந்த விஷயத்தில் ஸ்வாமிஜியின் கருத்தின் உண்மையை யாரும் மறுக்க முடியாது. ஆனால் அவ்வப்போது எனக்கு ஒரு சந்தேகம் ஏற்படுவதுண்டு. ஸ்வாமிஜி நிகழ்த்திய பல அற்புதங்களைக் குறிப்பிட்டு ஆஸ்ரமத்திற்கு எண்ணற்ற கடிதங்கள் வருகின்றன. அம்மாதிரியான கடிதங்கள் எழுதுபவர்கள் எல்லோரும் பொய் சொல்லுகின்றனர் அல்லது ஏதாவது பிரமையில் இருக்கின்றனர் என்று சொல்ல முடியாது. தன்னையே ஏமாற்றிக்கொள்ளுபவர்கள் ஒரு சிறு சதவிகிதத்தினர் இருக்கக்கூடும். ஆனால் பலவிதமான விளக்கங்களோடும், நல்ல கவனத்தோடும், எடுத்துக் கூறப்

படுகின்ற அந்த சம்பவங்களின் தன்மைகளை ஆராய்ந்து பார்க்கும்பொழுது ஸ்வாமிஜி சித்திகள் புரிகின்றார் என்கின்ற முடிவிற்கு நான் வரவேண்டியதாக இருக்கிறது. அப்படியானால் அவருக்கு வீழ்ச்சி ஏற்படுமா? அவர் விழ முடியாது என்று நான் உறுதியாகக் கூறமுடியும்—ஏனென்றால் அவர் எழுச்சி வீழ்ச்சி ஆகிய நிலைகளைக் கடந்து மேலே சென்றுவிட்டார். அவர் தன்னை பரம்பொருளோடு—அதை ஆத்மா அல்லது சச்சிதானந்தம் அல்லது ஈஸ்வரன் என்று எப்படி வேண்டுமானாலும் அழைத்துக்கொள்ளுங்கள்—அபேதமாக்கிக்கொள்ளக்கூடிய நிலையை அடைந்துவிட்ட காரணத்தினால் உயர்ச்சி, தாழ்ச்சி என்ற கேள்விக்கு இடமேது? அகந்தை அழிந்துபட்ட பிறகு எந்தவிதமான ஆபத்தும் எப்படி ஏற்பட முடியும்?

ஒரு விஷயத்தைப்பற்றி நாம் நிச்சயமாக இருக்க முடியும். சித்திகளை விரும்பாத அல்லது சட்டை செய்யாதவரும், ஆனால் தன்னலமற்ற காரணத்திற்காகவும், இறைவன் அல்லது பிரம்மத்தோடு ஐக்கியமடைந்துவிட்ட காரணத்தாலும் சித்திகளை வெளிப்படுத்துபவருமாகிய உண்மைச் சித்தரானவர், அசாதாரணச் செயல்களைச் செய்யக்கூடிய மனோ சக்தி படைத்த அல்லது ஆவிகளைக் கட்டுப்படுத்தக்கூடிய வல்லமை படைத்த அற்ப மனிதனைவிட முற்றிலும் வேறுபட்டவராவார். ஆவிகளைக் (நல்லதோ அல்லது கெட்டதோ) கட்டுப்படுத்தக்கூடிய சக்தியானது ஆன்மீக சக்தியினின்று முற்றிலும் வேறுபட்டதாகும். எந்த ஒரு உண்மைச் சித்தரும் தன்னை ஒரு பகவான் என்று கூறிக்கொள்ளவோ அல்லது தன்னுடைய சக்தியை விளம்பரப்படுத்திக்கொள்ளவோ மாட்டார். சித்தர் தான் அற்புதங்கள் புரிவதை அறிவது இல்லை

என்று கூறிவிட முடியாது. ஆனால் அவருக்கு அவைகள் அற்புதங்கள் அல்ல. அவருக்கு அவைகள் சாதாரண விஷயங்களேயாம். ஏனென்றால் அவர் சாதாரண மனிதனுக்கு எட்டாத ஒரு மட்டத்தில் இருந்து வருகின்றார். ஸ்வாமி சிவானந்தர் அம்மாதிரியானவர்களில் ஒருவர் என்று நான் முடிவுகட்ட வேண்டியிருக்கிறது. ஆனால் அவர் தன்னை அப்பேர்ப்பட்டவர் என்று கண்டவர்களிடத்தில் எல்லாம் காட்டிக்கொள்ள மாட்டார்.

## உ. அற்புதம் செய்பவர்

### ஸ்ரீ சிவப்ரேம்

(ஆசிரியர் "தி டிவைன் லைப்")

சிவானந்தர் ஒரு அற்புதம் செய்பவரா? ஆமாம், இல்லை! ஒரு உண்மையான யோகி அல்லது சந்நியாசி ஒருபொழுதும் தன்னுடைய ஆன்மீக சக்திகளை பகிரங்கமாக வெளிப்படுத்தக்கூடாது என்று அவர் திரும்பத் திரும்ப பறைசாற்றியிருக்கிறார். ஏனெனில் ஆவலோடு வேடிக்கை பார்க்கும் மக்களுக்கு மத்தியில் அவைகள் காட்டப்பட்டால் அவருடைய ஆன்மீக சாதனைகள் அனைத்தும் வீணாகப் போய்விடும். ஆனால் உண்மையை நீண்ட காலம் பெரும்பாலும் மறைத்து வைக்க முடியாது. ஸ்வாமி சிவானந்தரிடம் மறைந்து கிடக்கும் ஒப்பற்ற ஆன்மீகப் பொறிகளை எடுத்துக் காட்டுவான் போல உலகின் எல்லா பாகங்களிலிருந்தும் ஆச்சரியப்படும்படியான நம்பிக்கையும், பக்தியும் நிறைந்த சம்பவங்கள் கணக்கின்றி வந்து குவிகின்றன. அவருடைய "அற்புதங்கள்" என்று சொல்லப் படுபவைகளின் ரகசியத்தைப்பற்றிக் கூறும்படி

அங்குள்ள ஆர்வமுள்ள அதிதிகளும் கடிதப் போக்கு வரவைக் கவனித்துக்கொள்பவர்களும் அவரை வற்புறுத்தித் தொந்தரவு செய்யும்பொழுது அவர் மௌனியாகி விடுகின்ருர். சில அரிய சந்தர்ப்பங்களில் புன்னகை பூத்த முகத்துடன் பணிவாக "எல்லாம் கடவுளின் கிருபை!" என்று கூறுவார். ஆம்! ஸ்வாமி சிவானந்தர் அவருடைய அற்புதங்களை பகிரங்கமாக ஒருபொழுதும் வெளிப்படுத்திக்காட்டா விடினும் அவருடைய சீடர்கள் அவற்றை நன்கு அறிவர்.

## 3. அற்புதச் சம்பவங்களைப் பற்றி

ஸ்ரீ டாக்டர் ஸ்வாமி ஓம்காரனந்தா, P.R.D., LITT.D.

"மிக அற்புதமானதொரு காரியத்தை.........
அவர் செய்வதை நான் கண்டேன்.
—மாக்பெத், IV, 8

"A most miraculous work.........
I have seen him do.
—Macbeth, IV, 3

ஸ்வாமி சிவானந்தரின் முக்தியடைந்த உணர்வினுடைய அனுபூதி சக்திகளின் மாந்திரீக இயக்கங்கள் உலகின் ஒவ்வொரு பட்டணத்திலும், நகரத்திலும் உள்ள "உடல் உணர்வு கொண்ட" (physically-susceptible) அல்லது ஒருவேளை "நம்புகின்ற," அல்லது "ஆசைப்படுகின்ற" அல்லது "தகுதி பெற்ற" சிஷ்யர்களின் தினசரி வாழ்க்கையில் அற்புதமான நிகழ்ச்சிகளை உண்டுபண்ணிக் கொண்டிருக்கின்றன. அது, "பிரிவினை"க் குழப்பத்தின்போது பாகிஸ்தானில் உள்ள ஒரு இடத்தில் தீப்பிடித்து அத்தீயில்

அதிசயமாக எரியாது நின்றுபோன ஒரேஒரு கட்டிடமாக இருக்கட்டும், அல்லது ஒரு மலைப் பாதையின் வழியாக வேகமாகச் சென்றுகொண்டிருக்கும்போது அதனுடைய சக்கரங்களில் இரண்டு செங்குத்தான சரிவின் விளிம்பைக் கடந்துசென்று அதன் குருத்துவ கேந்திரம் (centre of gravity) பாதாளத்திற்கு நேராக இருந்தபோதிலும், கண்ணுக்குப் புலப்படாத, சக்தி பொருந்திய கரத்தினால் விசித்திரமான முறையில் ரஸ்தாவின் பக்கம் பின்னால் தள்ளப்பட்ட காராக இருக்கட்டும், அல்லது உலக மஹா யுத்தத்தில் விமானப் படையெடுப்பின் போது அவரைச் சூழ்ந்துள்ள அனைவரும் மடிந்த போதிலும் அவர் மட்டும் மரணத்திற்குத் தப்பிய ஒரு ஜெர்மன் அல்லது ஒரு லாட்வியன் பக்தராகட்டும், சம்மந்தப்பட்ட நபர்கள் எழுதிய சொந்தக் கடிதங்கள் சாக்ஷியாக இருப்பதால், அது ஸ்வாமி சிவானந்தரின் வேலைதான் என்பதை மறுக்கவோ அல்லது தவறு என்று கூறவோ முடியாது.

இமயமலைச் சாரல்களுக்கு மத்தியில் கங்கை நதி கரையில் இருப்பவரும், ஜெர்மனியிலும், டென்மார்க்கிலும் உள்ள ஒரு சில ஐரோப்பாக் கண்டத்துப் பெண் மணிகளால் நாள்தோறும் கேட்கப்படுகின்ற "வாணி"க்கு உரியவரும் ஆகிய இந்த சிவானந்தர் யார்? தெய்வீகத்தன்மை நிறைந்து வெளிப்பட்டுத் ததும்பி நிற்கின்ற இந்த முனிபுங்கவரும், தன்னுடைய சரீரக் காட்சியை ஒரே சமயத்தில் இலங்கைத் தீவிலுள்ள ஒருவருக்கும், தென் அமெரிக்காவிலுள்ள சாண்டியாகோவிலிருக்கும் மற்றொரு அன்பருக்கும் வழங்குகின்ற இந்தச் சிவானந்தரும் யார்? ஷேக்ஸ்பியர் நம்மைப் பார்த்து

"அவரை நன்ருகச் சிந்தித்துப் பார்க்கும்படி"

—லியர் அரசன்

Consider him well

—King Lear

கூறுகின்ருர்.

நம்மைவிட்டு ஒரு பர்லாங்கு தூரம்கூட நகரா திருக்கும்பொழுது, ஒரு டர்பன் (Durban) ஆஸ்பத்திரி யில் நோயாளிகளுக்குப் பக்கத்தில் பிரத்தியக்ஷமாக நின்றுகொண்டிருந்ததாகச் சொல்லப்படுகின்ற இந்த சிவானந்தர் யார்? பம்பாய் நகரத்திலுள்ள கிருஹ லக்ஷ்மிகளின் தலைவலிகளை மட்டும் போக்குவதோ டல்லாது, சிங்கப்பூரிலுள்ள தீராத மலச்சிக்கல் நோயாளிகளுக்கு பேதி மருந்தாகவும், தென்னிந்தி யாவில் இறந்துகொண்டிருக்கும் மனிதர்களின் எலும்பு களுக்குள் புத்துயிரூட்டியதாக நிரூபிக்கப்பட்டிருப்பது மாகிய ஆஸ்ரமத்தின் ஆலயத்திலுள்ள பகவான் விஸ்வநாதரின் பிரசாதமாக விபூதிப் பொட்டலங்களை அனுப்பிவைக்கின்ற இந்த சிவானந்தர் யார்? தன்னுடைய பிரசன்னத்தை ஸ்தூலமாக ஸ்பரிசித் துணரும்படி ஜெனீவாவில் உள்ள ஒரு அம்மை யாருக்கு அருளியவரும் குருவாலாலம்பூரில் மற்ெருரு வருடன் பேசிக்கொண்டிருந்தவரும், தெய்வீக ரக்ஷகரு மாகிய இந்த சிவானந்தர் யார்? ஷேக்ஸ்பியர் பதில் உரைக்கின்ருர்.

"அப்பொருளே"

—லியர் அரசன்

The Thing Itself

—King Lear

இதன் மூலம் அவர் தெள்ளத் தெளிவாக எடுத் துரைப்பது உயர்ந்த விடுபட்ட பரபோதத்தையே. ஆம், சிவானந்தர் பரபோதத்தை நமக்குள்ளேயே

கண்டுகொண்டார், "அப்பொருளாகவே" (Thing-in Itself) நம்மிடத்தில் உள்ள அந்தரங்க தத்துவத்தை அவர் அனுபவித்திருக்கின்றார். "அதனுடைய" சக்தி களை அவர் பெற்றிருக்கின்றார். மஹாகவி ஷேக்ஸ்பியர் தன்னுடைய வானவெளி எண்ணத்தின் (ethereal thought) மாயவலையினால் "அப்பொருளே" சிவா னந்தர் (Sivananda is the Thing Itself) என்பதைப் பிடித்துவிட்டார். இந்த முனிவருடைய உணர்வானது நம்முடையதைப்போல ஸ்தூல சரீரத்தின் புலன்களின் வாயிலாகவும் மனமாகிய கருவியின் நிர்ப்பந்தத்தின் மூலமாகவும் இயங்குவது கிடையாது. அவருடைய உணர்வு செயலில் தடைப்படுத்தப்படாதது, சர்வ வியாபகமானது; அது தன்னுடைய அருட் கிரணங் களை உலகம் முழுவதும் அவரை எதிர்நோக்குகின்ற அனைவருடைய இருதயங்களிலும், மனங்களிலும் பரப்புகின்றது. சர்வவியாபகமாக இருப்பினும் பூமியி லுள்ள ஒவ்வொருவர் பக்கத்திலும் அவர் உணரப்பட்ட போதிலும் அவர் குறிப்பாக, தெரிந்தோ, தெரியாமலோ தங்களை அவரோடு இணைத்துக்கொண்டிருப்பவர் களால் மட்டும் உணரப்படுகிறார், அல்லது பார்க்கப் படுகிறார், அல்லது அறியப்படுகிறார். ஒரு அமெரிக்க கவியினுடைய மிகப் பண்பட்ட ஆத்மாவானது இந்த அனுபவத்தின்மீது இடறி விழுந்தது.

"ஆழ்ந்த உள்ளங்களின் உயர்ந்த அலைகள் நம்முடைய அந்தரங்கத்தில் புரளுகின்றன. நம்மை அறியாமலேயே அவை நம்மை எல்லா விதமான கீழ்த்தரமான கவலைகளினின்றும் தூக்கி விடுகின்றன."

The tidal wave of deeper souls into our in most being rolls,
And lifts us unawares, out of all meaner cares.

சிவானந்தருடைய முன்னிலையில் அவரை உற்றுணர எங்கும் நேரில் வந்திராவிடினும், இது ஏராளருடைய நூற்றுக்கணக்கான சீடர்களின் பேரானந்த அனுபவமாக இருந்து வருகிறது. அவர்களுடைய கடிதங்கள் சிலவற்றிலிருந்து அவர்கள் அவருடைய உருவப் படத்திற்கு அருகாமையிலோ அல்லது புகைப்படத்திற்குப் பக்கத்திலோ அல்லது ஒன்றுமில்லாத வெற்றிடத்திலோ நின்றுகொண்டிருந்ததாகப் பாராட்டி எழுதுகின்ற ஸ்வாமி சிவானந்தரின் கட்டுலனாகாத, வியாபகமான பெருமையை நாம் டென்னிஸனின் வாயிலாக அறியலாம்.

நீ மானிடனுகவும் தேவனுகவும் உள்ளாய்
நீ மிக உயர்ந்த மிகப் புனிதமான மனுஷ்யத்துவமாக உள்ளாய்.

" Thou seemest human and divine, the highest, holiest manhood, Thou."

கடந்த சில நூற்றுண்டுகளில் சர்வ தேசத்தினரும் ஒத்துக்கொண்ட ஜகத்குருமார்களில் யாரும் இவ்வளவு வல்லமை படைத்தவராக, இவ்வளவு பிரக்யாதியுடனும், இவ்வளவு தெய்வீக வீரமும், சக்தியும் நிரம்பப் பெற்றவராய், இவ்வளவு ஆனந்தம் நிரம்பப் பெற்றவராய், தமது வழிகளில் இவ்வளவு வெற்றிகரமாய், இவ்வளவு எல்லையற்ற திட நம்பிக்கையுடையவராய், இவ்வளவு ஆன்மீக காந்த சக்தி படைத்தவராய் இருந்ததும் சரீர நலன், மன அமைதி, ஆன்மீக விடுதலை ஆகியவற்றை இப்பரந்த பூமியில் வாழும் எண்ணற்ற தனி மனிதர்களுக்கு வினியோகிப்பதற்காக, சாதாரண, அசாதாரண, விஞ்ஞான செய்திப் போக்குவரத்து சாதனங்களை இவ்வளவு புத்திசாலித்தனமாக பயன்படுத்தியதும் கிடையாது என்று திடமாகக் கூறுவதற்கு நமக்குக் காரணங்கள் இருக்

கின்றன. சிவானந்தருடைய சுயம் ஜோதிமயமான ஆன்மீக உருவத்தைச் சுற்றியும் உள்ளும் புறமும் ஏதோ இருக்கின்றது. இம்முனிபுங்கவரைப் பற்றி ஷேக்ஸ்பியர் கூறியிருக்கின்றார்.

அவருடைய எல்லைக்குள் சொர்க்கம் உள்ளது
அக்கவிகள் எல்லோரும் பேரானந்தக் களிப்
புற்றதைப்போல் பாசாங்கு செய்கின்றனர்.

—ஆறாம் ஹென்றி. பாகம் 3, 1, 2.

Within whose circuit is Elyssium and all
that poets feign of bliss and Joy.

—Henry VI 3rd Pt 1,2.

நம்மிடையே ஸ்வாமி சிவானந்தருடைய வாழ்க்கை பரம்பொருளின் தன்மையைப் பற்றி எண்ணற்ற செய்திகளை அளித்துக் கொண்டிருக்கின்றது. அவருடைய சாந்நியத்தோடு சிறிதளவு மனப்பூர்வத்துடன் இணைத்துக்கொள்வதானது நம்மிடம் ஒரு உறுதியான தெய்வீக சக்தியை பதிய வைத்துவிடும்; அவர் நமக்கு அவருடைய ஞானம், சாந்தி ஆகியவற்றின் ஒரு சிறு பகுதியை வழங்குவதின் மூலம் இறைவனுடைய செய்தியை வழங்கிக்கொண்டிருக்கின்றார். பரபோத சக்திகளினால் சாதிக்கக்கூடிய பல சாதனைகளுக்கு சுவாமி சிவானந்தா கண்கண்ட உண்மையாக விளங்குகின்றார்.

நீங்கள் விரும்பிய அதே புத்தகத்தை இன்று காலை தபால்காரர் உங்களிடம் கொடுத்தாரா? அப்படியானால் அதில் அவருடைய கையெழுத்தைப் பாருங்கள். அது ஸ்வாமி சிவானந்தரிடமிருந்து வந்திருக்கும். உங்களுடைய எண்ணங்களை ஸ்வாமி சிவானந்தருக்காக ஒரு ஆன்மீக மனம் படித்துக் காட்டுகிறது. மனத்தின் எண்ணங்களின்மீதும் ஜடப் பொருள்களின் மீதும் வேலை செய்கின்ற ஒரு ஆன்மீக சக்தியானது

உங்களுடைய எண்ணங்களுக்குப் பலனைக் கொடுக்கின்றது. சென்னையில் குழந்தையில்லாத அந்த அம்மையார் கருவுற்றுவிட்டரர்களா? அது ஸ்வாமி சிவானந்தரிடமிருந்து அவர் பெற்ற ஒரு சிறு மந்திரத்தின் சக்தி என்றும், அதற்காக சுவாமிஜியே பிரார்த்தனைகள் நடத்தினர் என்றும் அந்த அம்மையார் உங்களிடம் கூறுவார்கள். ஜெர்மனியில் ரஷ்யப் பிராந்தியத்தைச் சேர்ந்த ஒரு ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்த ஸ்வாமி சிவானந்தரின் ஒரு பாரசீக பக்தருடைய நோய் குணமாகாது என்று அந்த ஆஸ்பத்திரியின் தலைமை மருத்துவர்கள் கைவிட்டு விட்டனர். இருப்பினும் அந்நோயாளி பிழைக்க மாட்டார் என்ற உறுதியுடன் அவருக்கு ரண சிகிச்சை (ஆபரேஷன்) செய்தனர். இப்பொழுது நல்ல திடகாத்திரராக இருக்கும் அந்நோயாளியை 1954 ஆண்டு மே மாதத்தில் ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு அனுப்பினர். அப்பொழுது அவர் எழுதுகின்றார்: "ஆபரேஷன் தியேட்டருக்குள் என்னை அழைத்துச் செல்லும்போதும், ஆபரேஷன் தியேட்டருக்குள் இருக்கும் போதும் நான் என்னுடைய உள்ளத்தில் இருந்த நம்பிக்கை அனைத்தையும் ஒருமுகப்படுத்தி ஸ்வாமி சிவானந்தரை நினைந்து அவருடைய நாமத்தை ஜெபித்ததைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. என்ன ஆச்சரியம்! ஒரு அற்புதம் நிகழ்ந்தது. மூன்றும் நாளே எழுந்து நடக்க ஆரம்பித்து விட்டேன். இதே நோயால் இன்னும் இலேசான அளவில் அவஸ்தைப்பட்டு ஆபரேஷன் செய்யப்பட்டவர்கள் எல்லோரும் மாதக் கணக்கில் படுக்கையில் இருந்தும் பிழைப்பதற்குரிய அறிகுறியையே காணவில்லை." இந்த அன்பருடைய கடிதத்தின் இரண்டாவது பாரா டாக்டர்களின்

பிரமிப்பைப் பற்றிக் கூறுகின்றன. இக்கடிதத்தைப் படித்து விட்டு ஸ்வாமி சிவானந்தரைப் பற்றி ஷேக்ஸ் பியர் கூறுகின்ருர் :

ரண சிகிச்சையால் முடியாததை அவர் குண மாக்குகின்ருர்.

—மாக்பெத் VI, 3.

The mere despair of surgery he cures.

—Macbeth VI, 3.

ஆனால் இது ஸ்வாமி சிவானந்தர் செய்திருக்கும் எண்ணற்ற அற்புத சிகிச்சைகளில் ஒரே ஒன்றுதான். இம் முனிபுங்கவர் :

" வாக்கினலோ அல்லது எழுத்தினலோ சொல்ல வொண்ணுத தெய்வீகச் செயல் களை "

—ட்ராய்லஸ் & க்ரெஸ்ஸிடா 3, 3.

............more divine Than breath or pen can give expression to.

—Troius and Cressida; 3,3.

செய்கின்ருர்.

அவர்,

" மஹா காரிய சித்தர்."

" of greatest works finisher."

—All's well that ends well, 2, 1.

இந்த உலக ஜோதியின் வாழ்க்கை வரலாறு ஆன்மீக உற்சாகத்தையும் ஒளி விளக்கத்தையும் கொடுக்கக் கூடியது. ஒரு ஆவலை எண்ணத்தில் கொண்டு ஜன விரோதிகள் அவரைக் குறை கூறு வதற்காக வருகின்றனர்; ஆனால் திரும்பிப் போகும் போது மனமாற்றம் பெற்றவர்களாய்ச் செல்கின்றனர்.

இம்முனிவருடைய வரலாற்றின் அற்புதச் சக்தி ஷேக்ஸ்பியருக்குத் தெரிந்திருக்கின்றது. அவருடைய

கதை, செவிட்டுத் தன்மையைப் போக்கும்

—டெம்ப்பெஸ்ட் 1, 2.

Tale, sir, would cure deafness.

—Tempest. 1, 2.

சிவானந்தர்,

நோயுற்ற ஒரு மனத்திற்கு மருத்துவராக இருப்பதையும் ஞாபகத்தில் ஆழப் பதிந்துள்ள ஒரு துயரத்தைக் களைவதையும் மூளையில் பதிந்துள்ள தொந்தரவுகளை நீக்குவதையும்

—மாக்பெத், 5, 3.

............minister

To a mind deceased pluck from the memory a rooted sorrow; raze out the written troubles of the brain.

—Macbeth. 5, 3.

ஷேக்ஸ்பியர் கண்டிருக்கின்றார்.

ஸ்வாமி சிவானந்தருடைய இறைச் சேர்க்கையோடு சேர்ந்த சக்திகள் எண்ணிறந்த அற்புத நிகழ்ச்சிகளை உண்டுபண்ணியிருக்கின்றன. ஆனால் இந்த அற்புத சம்பவங்கள் இறைவனுடைய தெய்வீக சக்தியாக இருந்தாலும் சரி, அல்லது ஸ்வாமிஜியின் மூலமாகச் செய்யப்படுகின்ற விடுபட்ட உணர்வின் சக்திகளாக இருந்தாலும் சரி, அல்லது அவரே மனப்பூர்வமாக மிக உன்னதமான ஆன்மீக சக்திகளை வெளிப்படுத்துவதாக இருந்தாலும் சரி, அல்லது தன் மூலம் என்ன செய்யப்படுகின்றது என்பதை அவர் அறிந்திருந்தாலும் சரி, அவைகள் நம்முடைய பக்குவமடையாத அறிவிற்கு அந்த ஆன்மீகச் சிங்கம் விடுக்கும் புதிராகத்தான் இருக்கமுடியும்; ஏனென்றால் ஸ்வாமிஜியால்தான் நிகழ்த்தப்படுகின்றன என்று

தியாய யுக்தமாகக் கூறப்படுகின்ற பல அற்புதச் செயல்களுக்குத் தான் தான் காரண கர்த்தா என்பதை அவர் இதுவரை வெளிப்படையாக ஒத்துக்கொள்ள வில்லை. இருந்தபோதிலும் ஸ்வாமி சிவானந்தரால் நிகழ்த்தப்பட்ட அசாதாரண சம்பவங்களையும், அமானுஷ்ய செய்கைகளையும் தாங்கி எழுத்துமூலம் சாக்ஷியாக இருக்கின்ற கடிதங்களையும், வாய்மூலம் சொல்லப் பட்டதைக் குறிப்பெடுத்து வைத்திருப்பவைகளையும் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் பாதுகாத்து வருகிறது. உலகம் முழுதும்உள்ள எண்ணற்ற ஆத்மாக்களுடைய வாழ்க்கைகளில் ஸ்வாமி சிவானந்தர் புரிந்திருக்கும் அற்புத நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் இந்த தஸ்தாவேஜுகள் ஐந்து பெரும் புத்தகங்கள் (the five full fat volumes) ஆகும் என்று நாங்கள் மதிப்பிடுகின்றோம். இந்தப் பிரமாண்டமான் விஷயத்தைக் களைந்து தர்க்க ரீதியான வகையில் அவற்றை அமைத்து வாசகர் களுக்குத் தொகுத்துக் கொடுக்கக்கூடிய தகுதி பெற்ற ஒரு ஆசிரியர் (editor) கிடைக்காத காரணத்தால் அவைகள் இன்னும் வெளியிடப் படாமல் இருக் கின்றன. அல்லது இந்த "நிரூபண பொக்கிஷத்தை" அச்சுப்பொறியிலே கொட்டுகின்ற எண்ணத்தை விட்டுவிட்டு லாங் பெலோவுடன் (Long fellow)சேர்ந்து பாடுவது சிறப்புடைத்தாகுமன்றோ ?

> அவருடைய பாராட்டத்தக்க செய்கைக்கும் உன்னதமான பராக்கிரமத்திற்கும் படாடோப மான புகழ்மாலை ஒன்றும் தேவையில்லை. அவ ருடைய அற்புதச் செயல்களை நீங்கள் பார்த் தீர்கள். அவற்றைப் புகழ்ந்து கவிகள் எதற் காகப் பாடவேண்டும்? ஒவ்வொருவர் நாவிலும் வீற்றிருக்கும் அந்த நாமத்தைப் பாடுவதற்குப் பாடகன் யாரும் தேவையில்லை.

His signal deed and prowess high demand no pompous eulogy. Ye saw his deeds! Why should their praise in verse be sung? The name that dwells in every tongue. No minstral needs.

- Coplas De Manrique

மேலும்

நான் வைத்திருக்கும் இந்த மூடப்பட்ட புத்தகத்தின் ஏடுகளில் தெய்வீகச் செயல் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது. அது ஒருபொழுதும் மங்காது. ஆனால் என்றென்றும் அது ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். இறைவா, இதைப் போன்ற ஒரு நற்செய்கையின் பேரானந்தத்தால் இவ்வுலகை நிரப்புவது உன்னுடைய கருணையே.

Upon the pages of the sealed volume that I bear. The deed divine is written in characters of gold. That shall never grow old. But through all ages burn and shine with soft effulgence! O God, it is thy indulgence that fills the world with the bliss of a good deed like this!

- Epilogue to The Golden Legend.

அல்லது ஒரு வரம்புக்குட்பட்ட அனுபவம், விசாரம், விளக்கம் ஆகியவைகளைப் பெற்றிருக்கும் நமது காலத்திய மனிதவர்க்கத்தின் விசுவாசமற்ற ஒரு பிரிவினரின் உள்ளத்தைத் தட்டி எழுப்பி விளக்கம் பெறச் செய்யவேண்டுமென்ற ஒரு ஆசையினால் உந்தப்பட்டு, கலிகால இயேசுநாதராக விளங்கும் ஸ்வாமிஜியின் அற்புதச் செயல்களைப் பிரகடனப் படுத்தமாட்டோமா? மலேயாவில் உள்ள மக்களுக்கும் குடகோளார்த்தத்தில் உள்ள மாதர்களுக்கும் அவர் செய்தி அனுப்புகின்ற அற்புத முறையானது, தன்

னுடைய செய்தியை அனுப்புவதற்கு மின்சார அலைகளையும், அனுப்புகின்ற கருவியையும், கிரஹிக்கின்ற கருவியையும் சார்ந்திருக்கின்ற தற்காலத்தின் அதிசயமான வாரெளெஸ்யை (wireless) முற்றிலும் தோற்கடித்து விட்டது. ஆம் ராபர்ட் பிரௌனிங் அவர்களுடைய அனுபவமானது நம் அனைவராலும் பகிர்ந்துகொள்ளப் படுகிறது.

நான் உன்னுடைய முடிவான செய்கைகளைக் கண்ணுறும்போது துடிக்கமாட்டேனா? உனது அமைதியான தூய உண்மைகள் பூலோக தத்துவத்தின் மிகப் பிரகாசம் பொருந்திய அகந்தையை மிஞ்சுவதை நான் பார்ப்பதற்கு தகிக்கமாட்டேனா?

Do I not pant when I read of thy consummate deeds, And burn to see thy calm pure truths out-flash. The brightest egoism of earth's philosophy?

—Pauline

ஸ்வாமி சிவானந்தரின் தெய்வீகச் செயல்களைக் கண்டு ஆச்சரியப்படும் ஷேக்ஸ்பியரோடு நமக்கும் முழுப்பங்கு உண்டு; ஆகவே கீழே இரண்டு வரிகளில் கொடுக்கப்பட்டிருக்கும் அம் மஹா கவியினுடைய தீர்மானமானது நமக்கும் தனித்தனியாக சொந்தமாகும்.

நான் எதிரொலி கேட்கும்படியாக தங்களைப் புகழ்கின்றேன். அந்த எதிரொலி மறுபடியும் புகழவேண்டும்.

—மாக்பெத். 5, 3.

I would applaud thee to the very echo that should applaud again.

—Macbeth. 5, 3.

## 4. ஸ்வாமி சிவானந்தரின் அற்புதங்கள்

(புரொபஸர் N. K. ஸ்ரீவஸ்தவா M.A., LL. B.)

விஞ்ஞான ஆராய்ச்சி முறையானது, புலன்களுக்கும் அறிவிற்கும் சம்பந்தப்பட்ட வஸ்துக்களின் வரம்புக்கு உட்பட்டதுதான். மனம், வாக்கு கடந்த உண்மைகளுக்கு அதைப் பயன்படுத்துவதற்கு அது இன்னும் மிகவும் பூர்ணமடையாத நிலையில் இருக்கிறது, ஒரு முனிவருடைய அற்புதங்களை இன்னும் வெளியே எடுத்துச் சொல்ல வேண்டி யிருக்கிறது. ஆகவே அற்புதங்களுக்கு ஒரு வியவகார ரீதியான மதிப்பு உண்டு.

விஞ்ஞான உலகத்தின் நேர்மையும், கண்ணியமும் அற்புதங்கள் அம் முனிவருடைய வாழ்நாளிலேயே எடுத்துக் கூறப்பட வேண்டும் என்று விரும்புகின்றது. ஏனெனில் அப்பொழுதுதான் விஞ்ஞான ஆராய்ச்சிக்குத் தலைவர்களாக இருப்பவர்களில் யாராவது ஒரு சந்தேகப் பேர்வழி இருந்தால் அவர் அம்முனிவரை நேரில் சந்தித்து அவர் அற்புதங்கள் நிகழ்த்தும் சக்தியை சரிபார்த்துக் கொள்வதற்கு அவருக்கு ஒரு வாய்ப்பு கிடைக்கக்கூடும்.

அற்புதம் என்பது என்ன? இது கண்கட்டி மாய வித்தை அல்ல. இது ஒரு முனிவர் இறைவனை அணுகி அவரை மனிதவர்க்கத்தின் நன்மைக்காக அவரோ அல்லது அவருடைய பக்தர்களோ அன்பர்களோ தன்னலமற்ற முறையில் கருதுபவைகளை இயற்கையின் நிகழ்ச்சியில் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகின்ற விசித்திரமான திறமையேயாகும். இதில் தனிப்பட்ட, அல்லது சமூக அல்லது தெய்வீக பிரச்சினைகளும் சேரும்.

17

1943-ல் நான் முதன்முதலில் சுவாமிஜியை சந்திக்கும்பொழுது, என்னுடைய மனத்தைச் சஞ்சலத்தில் ஆழ்த்திக்கொண்டிருந்தது என்னுடைய திருமண விஷயம். அவர் அதை உணர்ந்து கொண்டார். அவர் அதைப்பற்றி இரண்டாண்டுகள் மௌனமாக இருந்தார். என்னுடைய திருமணத்திற்கு ஒரு வருஷத்திற்கு முன்னதாக எனக்குத் திருமணம் நடக்கப் போவதாகக் கூறி ஆசீர்வாதம் கூறினார். அது எனக்குப் பெரும் வியப்பை உண்டாக்கிற்று. ஏனெனில் நான் திருமண விஷயத்தையே அநேகமாக கைவிட்டு விட்டேன். கல்யாணம் செய்வதைப் பற்றிய யோசனையும் எனக்கு இல்லை.

அப்பொழுது எனது கடைசி தங்கை குமாரி ஸ்ரீரா ஸ்ரீ வஸ்தவா (இப்பொழுது திருமதி ஸின்ஹா)வுக்கு ஒரு விநோதமான முகத் தேமல் (Facial eczema) இருந்தது. அதற்கு மருத்துவம் செய்யச் செய்ய அது இன்னும் மோசமாகிக் கொண்டு வந்தது. மருத்துவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. நாங்கள் அவளை சுவாமிஜியிடம் அழைத்துச் சென்றோம். முதலில் அவர் எங்களை டெல்லியிலுள்ள சில பெரிய மருத்துவர்களின் பெயர்களைச் சொல்லித் தட்டிக் கழிக்கப் பார்த்தார். ஆனால் என்னுடைய தாயாரும், சகோதரிகள் எல்லோரும் (பிறகு இவர்கள் சுவாமியின் பெரும் பக்தர்களாகிவிட்டனர்.) அவரேதான் கதி என்று அவருடைய பாதங்களில் விழுந்து விட்டனர். அவர் இராம நாமத்தை ஜெபித்து ஒரு களிம்பைப் போடும்படி கொடுத்தார். ஒருசில தினங்களில் அவள் பூரணமாகக் குணமடைந்தாள். அவளுடைய முகத்தின் அழகிற்கும், மகிழ்ச்சிகரமான திருமணத்திற்கும் சுவாமிஜிக்கு அவள் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவளாக இருந்தாள். ஆனால்

அதை அவளோ, அவருடைய கணவரோ, அவருடைய சகோதரர்களோ ஒருபொழுதும் செலுத்த இயலாது.

நாங்கள் எல்லோரும் 1941-ல் ரிஷிகேசத்தில் கோபால் குடீரில் தங்கியிருந்தபோது எனது தந்தை மிகவும் நோய்வாய்ப்பட்டார். அவருக்குத் தன்னுடைய வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு விட்டது. நான் சுவாமிஜியிடம் மருந்துக்காக ஓடினேன். என்னுடைய தந்தையாரின் நோயைப்பற்றி என்னை ஒன்றும் கேட்காமலேயே சுவாமிஜி என்னிடம் நான்கு பொடிகளைக் கொடுத்தார். அவர் என்னிடம், தந்தையாரின் நோயைப்பற்றிக் கவலைப்படாமல் இறைவனுடைய பிரசாதத்தை அனுபவிக்கும்படி கூறினார். பொடிகள் அவரைக் குணமாக்கிவிட்டது. மூன்றுவது பொடி அவரை பழைய நிலைக்குக் கொண்டுவந்து விட்டது.

சுவாமிஜியின் அருளுக்குப் பாத்திரமான எனது சகோதரி, பாட்னாவுக்குச் சென்று சுவாமிஜியின் உபதேசங்களைப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தாள். ஒரு பெண்மணி அவளிடம் வந்து தனக்கு ஒரு ஆண் மகவு பிறக்க வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். அவளுடைய பரமானந்த நிலையில் சியாமா அந்த அம்மையாருக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்து சுவாமிஜியின் பெயரைச் சொல்லி ஆசீர்வாதம் கூறினாள். பிறகு சியாமா தன்னுடைய கற்பனையான செயலை ஆதரிக்குமாறு சுவாமிஜிக்கு எழுதினாள். சுவாமிஜி அவள் செய்த ஆசீர்வாதம் ஏற்கனவே நிறைவேறி விட்டது என்று எழுதினார். உரிய காலத்தில் அந்த அம்மையாருக்கு ஒரு அழகான ஆண் குழந்தை பிறந்தது.

1944-ல் நான் ஒருமுறை ரிஷிகேசத்திற்குத் தாற்காலிகமாகச் சென்றிருந்தேன். என்னுடைய வணக்கத்தைச் செலுத்திவிட்டு வருவதற்காக நான் சுவாமிஜியிடம் சென்றிருந்தேன். அவராகவே என்னைப் பார்த்து நான் இன்னும் சிலமாத காலங்களில் கடும் நோய்வாய்ப்படுவேன் என்று கூறினார். அவருடைய வார்த்தைகளைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். ஆனால் உடனே, நான் குணமடைந்து விடுவேன் என்றும் உறுதி கூறினார். அவருடைய தீர்க்க தரிசனம் நிறைவேறியது. நான் சுராஜபுதனத்தில் நீண்டநாள் தங்கமாட்டேன் என்றும் கூறினார். அவர் கூறிய இரண்டு வாக்குகளும் நிறைவேறியது.

பீஹார் மேல் சட்டசபைத் தலைவர் ஸர். ரஜீரா ரஞ்ஜன் பிரஸாத் சின்ஹா அவர்கள் கடும் நோய் வாய்ப்பட்டார். நான் சுவாமிஜியின் மகிமைகளைப் பற்றி அவரிடம் பலமுறை பேசியிருந்தேன். அவர் மனச் சோர்வு அடைந்த நேரத்தில் என்னை வரும்படி சொல்லி அனுப்பியிருந்தார். தன்னைக் காப்பாற்றும்படி சுவாமிஜியிடம் சொந்த முறையில் வேண்டிக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். நானும் அவ்வாறே செய்தேன். அவரும் சில வருஷ காலம் வாழ்ந்திருந்தார். அதற்காக அவர் சுவாமிஜிக்கு மிகவும் நன்றி செலுத்தியவராய் இருந்தார்.

அட்கார் ராஜா தன்னுடைய தீவிர தேசபக்தியின் காரணமாக ஆங்கிலேயர் கண்களில் பட்டுவிட்டார். அவர் சுவாமிஜியிடம் மிகப் பெருந்தன்மையான முறையில் தஞ்சம் புகுந்தார். நான் அவர்களைக் காசியில் சந்திக்கும்பொழுது அவரும் அவருடைய அரசியும் இருவரும் பாராட்டத்தக்க வகையில் சாது வாழ்க்கையை மேற் கொண்டிருந்தனர். சுவாமிஜியின் ஆசிகள் அவரை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின்

கொடுமைகளிலிருந்து காப்பாற்றியதைக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன்.

1940-ல் நான் முதன்முதலாக சுவாமிஜியைச் சந்தித்தபொழுது தியானத்தின் உண்மையை நம்ப வில்லை. அதெல்லாம் வெறும் கனவு அல்லது வேண்டு மென்றே நினைத்துக் கொள்வது, மயக்கம் அல்லது மாயை என்று நினைத்தேன். ஆனால் அன்றைய தினம் என்னை சிலமணி நேரம் தியானம் செய்யும்படி கூறி னார். அன்றுதான் முதல் சாதனை வாரத்தின் முதல் நாள். முதல் நாளன்றே என்னுடைய தியானத்தில் சுவாமிஜி சிரிப்பதைக் கண்டேன். அன்றைய தினம் அதே நேரத்தில் என்னுடைய சகோதரிகளுடைய தியானத்திலும் இதே அனுபவம் ஏற்பட்டதைப் பின்பு ஒப்பிட்டுப் பார்த்தேன். தியான நேரம் மாலை 2 மணி முதல் 4 மணி வரை.

1948-ம் வருஷம் செப்டெம்பர் மாதம் நான் சுவாமிஜியிடம் தங்கி அவருடைய தலைமையின் கீழ் சாதனையில் குதித்தேன். நான் சுவாமிஜிக்குத் தெரி யாமல் சிரசாசன தியானம் பழகிக் கொண்டிருந்தேன். என்னுடைய பயிற்சி 45 நிமிட நேரம் நீடித்த பொழுது, ஒருநாள் நான் என்னுடைய தியானத்தில் சுவாமிஜியை அவர் அதுவரை என்றுமே அணிந் திராத ஒரு புது மேலங்கியுடன் இருப்பதைக் கண் டேன். என்னுடைய சிரசாசன தியானத்தை முடித்துக் கொண்டு நான் பஜனை மண்டபத்திற்குச் சென்று கொண்டிருந்தேன். வழியில் சுவாமிஜி அவருடைய குடீரிலிருந்து படிகளில் ஏறி வருவதைக் கண்டேன். நான் தியானத்தில் கண்ட அதே மேலங்கியுடன் அவர் வருவதைக் கண்டு வியப்படைந்து விட்டேன். அவர் புன்னகை புரிந்து, நான் சிரசாசனம் மிகவும் நன்கு செய்வதாகக் குறிப்பிட்டார்.

1952-ம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 13-ந் தேதி யன்று எனது மனைவியின் உடையில் தீப்பற்றிக் கொண்டது. சுட்ட புண்கள் மூன்ருவது ரகத்தைச் சேர்ந்தவைகளாக இருந்தன. 14-ந் தேதி அவ ளுடைய நிலை எப்படி இருக்கிறது என்று கேட்டு எனக்கு சுவாமிஜியிடமிருந்து கடிதம் வந்தது. 1951-ல் நான் அவரைவிட்டு வந்ததிலிருந்து சுவாமி ஜிக்கு கடிதம் ஒன்றும் எழுதவில்லை; அவரும் அதுவரை எழுதவில்லை. புண்களில் மிகவும் நஞ்சேறிவிட்ட காரணத்தால் மருத்துவர்கள் அவள் பிழைப்பாள் என்ற நம்பிக்கை இழந்து விட்டனர். ஆனல் சுவாமி ஜியிடமிருந்து 1952 டிஸம்பர் மாதம் நடக்கவிருந்த சாதனு வாரத்தில் வந்து கலந்து கொள்ளுமாறு அவ ளுக்கு அழைப்பு வந்திருந்தது. அவள் இறக்கமாட் டாள் என்பதற்கு எங்களுக்கு இது உத்தரவாதமாக இருந்தது. அவள் இப்பொழுது உயிருடன் இருக் கிருள்.

## 5. சித்திகள் செய்யும் வித்தகன்

ஸ்ரீ A. K. சின்ஹா
(ஓய்வுபெறும் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல், பீஹார்)

நமது குருதேவர் ஸ்ரீமத் சுவாமி சிவானந்தர் அவர் களின் வாழ்க்கை வரலாற்றை அவர்களுடைய பக்தர் களில் பெரும்பாலோர் வெளியிட்டிருக்க வேண்டியது அவசியமேயாகும். நான் சூரியனை வர்ணிக்க எவ்வாறு முயற்சிக்க மாட்டேனே அதேபோல் அவரைப்பற்றி வர்ணிக்கவும் முயற்சிக்கவில்லை. ஆன்மீகத்திலோ லௌகீகத்திலோ கஷ்டத்தில் இருக்கும்பொழுது நானும் எனது குடும்பத்தினரும் சுவாமிஜியிடத்தில்

தெய்வீக உதவியை நாடினதிலிருந்து அவர் எங்களுக்கு எப்பேர்ப்பட்டவர் என்பது விளங்கிற்று.

அவர் எங்களுக்கு எப்படியோ அப்படியே நமது எண்ணற்ற சகோதரர்களுக்கும் இருந்தார். அவருடைய கடிதங்கள், அவருடைய பக்தர்கள் எவ்வளவு பரிதாபமான நிலையிலிருப்பினும் ஆறுதல் அளிக்க வல்லவை. அவருடைய நேர்முக காந்த சக்தியை அனுபவிக்கக்கூடிய பெரும்பேறு பெற்றவர்கள் தங்களுடைய கவலைகளை மறந்து உயர்த்தப்படுவதை உணர்வர். தற்கால உலக ராஜ தந்திரிகள் அவரைச் சந்திப்பதை நான் எவ்வளவு விரும்புகிறேன் தெரியுமா? அவர்கள் எவ்வளவு தவருன வழிக்கு அழைத்துச் செல்லப் பட்டிருக்கின்றனர் என்பதையும் அவர்களுடைய உலக வாழ்க்கை அவர்களையும், அவர்களுடைய நாடுகளையும் எவ்வளவு விரைவில் அழிவிற்குக் கொண்டு சேர்க்கும் என்பதையும் அப்பொழுது உணர்வார்கள். இந்த வெறிபிடித்த ஆயுதப் போட்டி, அதை நடத்துபவர்களுக்கு அன்பு ஒன்று தான் மனிதவர்க்கத்திற்குச் சாந்தியைக் கொடுக்க முடியுமே ஒழிய வெறுப்பு அல்ல என்பதை நிரூபித்துக் காட்டுவதற்கு சுவாமிஜியின் பேனுவிலிருந்து பாய்ந்தோடுகின்ற ஆன்மீக இலக்கியங்களில் உள்ள படிப்பினைகளை போதிப்பதால் முற்றுப்பெறும் என்கின்ற நம்பிக்கை எனக்கு இன்னும் உண்டு. என்னுடைய சகோதர அன்பர்களின் நன்மை காரணமாக என்னை இங்கு குறிப்பிடத் தூண்டிய சம்பவங்கள் இரண்டு சமீபத்தில் நிகழ்ந்தன. என்னுடைய கடைசி மகன் சர்வகலாசாலை பரீட்சையின் கடைசி நாளன்று கேள்வித்தாளில் உள்ள ஒரு கேள்விக்குக் கூட பதில் எழுத முடியாதென்று கண்டு பெருத்த ஏமாற்றத்துடன் எழுந்து காலி விடைத்தாளைக் கொடுத்து விடலாம

மென்று இருந்தான். அவன் திடீரென்று சுவாமிஜி அவர்கள் தன்னுடைய கையை அவனுடைய தலையின் மீது வைத்து, அழுத்தி, அவனை உட்கார வைத்து அவனுக்கு எல்லா விடைகளும் தெரியும் என்று கூறு வதைக் கண்டான். அவன் அதற்குக் கீழ்ப்படிந்து எல்லாக் கேள்விகளுக்கும் விடைகளை எழுதினான். அவனுடைய பெயரும் அரசாங்கச் செய்தித்தாளில் வந்தது.

நான் உடல் நலம் குன்றியிருந்தபோது எனக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த எனது மனைவிக்கு வாதநோய் வந்துவிட்டது. 72 மணிநேரம் முடிவதற்கு முன் அந்நோய் என்ன மாற்றத்தை ஏற்படுத்தும் என்பதைக் கூற முடியாது என்று சொன்ன பிரபல மருத்துவர்கள் அந்த 72 மணி நேரம் முடிவதற்கு முன்னரே நோயுற்ற பாகங்கள் உணர்ச்சிபெற்று வருவதைக்கண்டு ஆச்சரிய மடைந்தனர். சுவாமிஜி அவர்கள் நோயுற்ற பாகங்களின் மீது தடவிக் கொடுத்ததை என்னுடைய மனைவி உணர்ந்தாள். அச் சிக்சைசெய்த வேலையை மருத்துவர்கள் பின்பு தெரிந்து கொண்டனர்.

நமது அன்பிற்குரிய சிவானந்தஜீ இந்தச் சரீரத் துடன் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து, மனித வர்க்கத்தைக் கெடுத்துக் கொண்டுவரும் கொடுமை யான உலகாயதத்திலிருந்து । காப்பாற்ற உதவி புரிய வேண்டுமென்று நாம் ஆண்டவனைப் பிரார்த்திப் போமாக. சுவாமிஜியின் மூலமாக நமது வெளிநாட்டு சகோதரர்கள் பெறமுடிந்த சாதனையானது என்னைத் திகைக்கவைக்கிறது. அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நாட்டில் சுவாமிஜியின் அன்பு உபதேசத்தை பிரபலப்படுத்துவர் என்பதில் ஐயமில்லை.

வாழ்க சுவாமி சிவானந்தா !

## 6. சிவானந்தரின் மிகப் பெரிய அற்புதங்கள்

(சுவாமி வெங்கடேஸானந்தா)

உலகெங்கிலுமுள்ள சிவாவின் பக்தர்கள், அவர் எவ்வாறு தங்கள் கனவில் தோன்றி நல்லுபதேசங்களை வழங்கினார் என்றும், எவ்வாறு அவரைத் தாங்கள் ஒரு காட்சியாகக் கண்டு அவரது ஆசிகளைப் பெற்றனர் என்றும், அவர் எவ்வாறு ஆபத்திலிருந்து காப்பாற்றினார் என்றும், நோயை எவ்வாறு குணப்படுத்தினார் என்றும் பகவான் சிவானந்தரின் தெய்வீகச் சக்திகளைப் பற்றிய அற்புத அனுபவங்களை எடுத்துக் கூறியிருக்கின்றனர். இந்த அனுபவங்கள் ஆரண்ய வித்யாலயத்தால் வெளியிடப்பட்டுள்ள ஏராளமான நூல்களில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

ஒரு மஹா யோகிக்கு இடமும், காலமும் பெரும் தடைகளாக மாட்டா. எக்ஸ்ரே கிரணமானது தசையையும், வானிலை அறிவிக்கும் கருவிகள் நாளைக்கு இருக்கப் போகும் சீதோஷ்ண நிலையையும் ஊடுருவிப் பார்த்துக் கூறமுடியுமானால் ஆன்மீக ஒளிவிளக்கம் பெற்ற ஒரு யோகியினுடைய மனம் என்ன செய்ய முடியாது? திவ்ய திருஷ்டி (Clairvoyonce), எண்ணத்தை அனுப்புதல் (Thought-transference) தொலைதூர சிகிச்சை முதலியன சிவாவிடம் அவர் கூட அறிந்திராவண்ணம் அவ்வளவு சாதாரணமாகக் காணப்படுகின்றன.

தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தை நடத்துவது ஒரு பெரும் அதிசயம். ஒரு வரவு செலவு கணக்கின்றி, க்ஷேம நிதி இன்றி, ரொக்க கையிருப்பின்றி, ஒழுங்கான வருவாய் இன்றி ஒரு பெரிய ஸ்தாபனத்தை

இவ்வளவு பரந்த அளவில் நடத்துவது என்பது ஒரு அதிசயம்தான்.

மிகக் குறைந்த உள்ளச் சார்பும், குறைந்த தகுதியும் உடைய ஒவ்வொருவரையும் தன்னிடத்தில் சேர்த்துக் கொண்டு அவர்கள் ஒவ்வொருவரையும் கடுந்தவமின்றி, முறையான சாதனை வாழ்க்கையின்றி ஒரு முனிவராக மாற்றுவது மிக உன்னதமான அற்புதமாகும்.

இமயமலையின் ஒரு மூலையில் கங்கை நதிக்கரையில் தன்னுடைய எளிமையான குடீரத்தில் அமர்ந்து கொண்டு, உலகின் நாலா பக்கங்களுக்கும் தெய்வீக ஞானப் பேரொளியைப் பரப்புவதும், வாழ்க்கையையே மாற்றியமைக்கவல்ல தனது செய்தியை உலகின் ஒவ்வொரு நாட்டிலும் பிரதிபலிக்குமாறு செய்வதும், நம் கண்முன்னிலையில் சுவாமி சிவானந்தராகத் தோன்றும் இந்தச் சர்வ வியாபக தெய்வீகப் புருஷரின் மகோன்னத அற்புதச் செயலாகும்.

## 7. மஹரிஷியின் அற்புதங்கள்

(ஸ்ரீராம்)

ஓர் அற்புதம் என்றால் என்ன என்பதை நாம் எல்லோரும் அறிவோம். மிக விசேஷமாகக் குறிப்பிடத்தக்க எந்த ஒரு சம்பவமோ அசாதாரண நிகழ்ச்சியோ அற்புதமாகும். பிரெஞ்சு நாட்டின் மாபெரும் தத்துவ ஞானியாகிய வால்டேர் ஒருமுறை "பாராட்டத்தக்கது எதுவும் அற்புதமே" என்று கூறியிருக்கிறார். சூரியன் நள்ளிரவில் பிரகாசித்தாலோ, சந்திரன் நடுப்பகலில் சூரியனோடு சேர்ந்து தன்னுடைய தண்மைமிக்க கிரணத்தை அள்ளி வீசினாலோ ஒரு இறந்த மனிதன் தலைகீழாகத் தன்னுடைய கை

களால் நடந்தாலோ, எரிந்து கொண்டிருக்கும் நெருப்பில் விழுந்த ஒரு வைக்கோலோ அல்லது காகிதமோ எரியாமல் அப்படியே இருந்தாலோ, எண்ணெய் இன்றி ஒரு விளக்கு எரிந்தாலோ, அவை சந்தேகமில்லாமல் ஓர் அற்புதங்களேயாகும். இறைவனுடைய விருப்பத்தில் இவைகள் எல்லாம் முடியாத காரியங்கள் அல்ல.

சில தத்துவஞானிகள் அறியாமையினுல் அற்புதம் என்று ஒன்றும் இல்லை என்று வாதாடுகின்றனர். ஏனெனில் இது கடவுளாலேயே ஏற்படுத்தப்பட்ட சில மாற்ற முடியாத, நிலையான, கணித முறைப்படியான, தெய்வீக நியதிகளுக்குப் புறம்பாக இருக்கின்றன என்பது அவர்களுடைய வாதம். இந்த நியதிகளுக்கெல்லாம் இறைவன்தான் கர்த்தா என்பதும், சகல சிருஷ்டிகளையும் படைத்த சிற்பி என்பதும் உண்மைதான். அவர்கள் கடவுள், இங்கு ஒன்றும், அங்கொன்றும் சட்டத்தை அவருக்கு மட்டுமே தெரிந்திருக்கும் காரணங்களுக்காக ஆனுல் இவர்களுடைய சிற்றறிவினுல் கண்டுகொள்ள முடியாத காரணங்களுக்காக, மாற்றுவதற்கு அதிகாரத்தையும், சுதந்திரத்தையும் கொடுக்கமாட்டார்களா?

அந்தோ! மனிதன் எப்பொழுதுதான் இறைவனுடைய சர்வக்ஞத்துவத்தையும், சர்வ வல்லமையையும், ஞானத்தையும், சுதந்திரத்தையும் பற்றிக் கேட்காமல் அவருக்கு வணக்கத்தைச் செய்யக் கற்றுக் கொள்ளப் போகிறுனே? ஐயகோ! அவன் எப்பொழுது ஆண்டவனிடத்திலும், அவனுடைய எண்ணற்ற குணுதிசயங்களிடத்திலும் ஏற்பட்டுள்ள பூரண நம்பிக்கையின் காரணமாகப் பிறந்த தாழ்ந்த பணிவோடு அவனுடைய சந்நிதானத்தில் சிரம் தாழ்த்தி வணங்கக் கற்றுக் கொள்ளப் போகிறுனே!

கடவுள் பகுத்தறிவிற்கு மட்டுமே கட்டுப்பட வேண்டு மென்று மனிதன் விரும்புகின்ருே? காரணம் எதையும் கூருமல் கடவுள் எதையும் செய்யக் கூடாதா? கடவுள் பகுத்தறிவிற்கு மேம்பட்டு அல்லது பகுத்தறிவைக் கடந்து இருக்கக் கூடாதா? கடவுளின் செய்கைகளை ஏன், எப்படி என்று- - ஆராய்ந்து கொண்டிருப்பது அறிவீனத்தின் உச்ச நிலை அல்லவா? ஏ, அறியாமையே! உன்னுடைய சக்திகள் அறிவுக்கெட்டாமலும், ஊடுருவிப் பார்க்க முடியாமலும் இருக்கின்றன!

இந்த உலகம் எல்லாக் காலங்களிலும், எல்லா நாடுகளிலும் அற்புதங்களை நூற்றுக் கணக்கில் கண் டிருக்கிறது. சாவித்திரி தனது கணவன் சத்தியவா னுடைய உயிரை யமனிடமிருந்து மீட்டு வந்தாள். பதினறு வயதிலே சாகவேண்டிய மார்க்கண்டேயன் யமனை முறியடித்து இன்னும் பதினறு வயதுடனேயே இருப்பதாகக் கருதப்படுகின்ருன். ஐந்தே ரொட்டித் துண்டுகளைக் கொண்டு இயேசுநாதர் ஐயாயிரம் பேரு டைய பசியைப் போக்கினர். எனியஸ் என்ற பெரிய பாதிரியாரின் புத்திரிகள் தாங்கள் விரும்பிய பொருள் களை யெல்லாம் தானியங்களாகவும், திராட்சை ரச மாகவும், அல்லது எண்ணெயாகவும் மாற்றினர்களாம். கர்ணன் எவ்வாறு குந்திக்கும், சூரிய பகவானுக்கும் மகனே அதேபோல் ரோமுலஸ், ரெமஸ் ஆகிய இரு வரும் ஒரு தேவதைக்கும் ஒரு கன்னிக்கும் பிறந்தவர் கள். பல்லாடியம் (Palladium) ஆகாயத்திலிருந்து ட்ராய் நகரத்தின்மீது இறங்கியது. பெரனிஸின் (Berenice) ரோமமானது ஒரு விமானமாக மாற்றப் பட்டது. மிக மிக அசாதாரணமானதும், திகைக்க வைக்கக் கூடியதுமான அற்புதங்கள் நிகழாத நாடு ஏதாவது உண்டா? அந்நாட்டு மக்கள் அவற்றை

நம்பிக்கையோடும், வணக்கத்தோடும் போற்றாமல் இருக்கிறார்களா?

நம்பிக்கை இருக்கும்போது அற்புதமும் உண்டு. பகுத்தறிவு உள்ள இடத்தில் அற்புதம் உள்ள அமைதியுடன் இருந்து விடுகிறது. நேற்றிருந்த முனிவர்களால் அற்புதங்கள் செய்ய முடிந்தன என்ருல் இன்றுள்ள முனிவர்களாலும் அற்புதங்கள் செய்ய முடியும் என்பது பகுத்தறிவிற்கு நிச்சயமாகப் பொருந்துகிறது, கிறிஸ்துவ மதத்திற்கு அவை முடியுமாளுல் அதேபோல ஹிந்து மதம் அல்லது எந்த ஒரு மதத்திற்கும் அவை முடியும்.

அற்புதங்களைச் செய்வது என்பது ஒரு ஒப்பற்ற ஞானம் அல்லது பண்பைச் சார்ந்திருக்கிறது. அது அதிருஷ்ட வசமாகவோ அல்லது துரதிருஷ்ட வசமாகவோ இன்னும் எல்லோருடைய பொதுச் சொத்தாக ஆகவில்லே. அற்புதங்களைச் செய்வது இயலாது என்கின்ற பிரச்சினையானது, தற்போதைய தலைமுறைக்குத் தெரிந்துள்ள இயற்கை விதிகளோடு அம்மாதிரியான அற்புதங்கள் இணைந்து வராதவரை எழுவதற்கு இடமுண்டு. ஆனுல் யோசனையும் அறிவும் உள்ள மக்கள் இயற்கையின் அழியாத முடிவற்ற செல்வத்திற்கு ஒரு முடிவு கட்ட மறுப்பர்.

அற்புதங்களில் நம்பிக்கை கொள்வதும் கொள்ளாததும், தனிப்பட்டவரின் குணம், சூழ்நிலைகள், சேர்க்கை, வளர்ச்சி முதலியவற்றைப் போன்ற பல விஷயங்களைப் பொருத்தது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். எல்லாமுணர்ந்த, எல்லாம் வல்ல இறைவனிடம் நம்பிக்கையுடையவனுக இருந்தால், அவனிடத்தில் நம்பிக்கை கண் இருந்தால் அவன் ஒன்றைப் பார்க்கிருன்; ஆனுல் அதற்கு நேர்மாருக அவன் நாத்திக சங்கத்தைச்

சேர்ந்த அங்கத்தினனாக இருந்தால் இந்த உலகாயதக் கண் அவனை இன்னும் குருடாக்கி எதையும் பார்க்க இயலாதவாறு செய்கிறது.

கடந்த காலங்களில் நமது முன்னோர்கள் கண்டு பிடித்த உண்மைகளையும், ஞான பொக்கிஷத்தையும் நாம் அடிக்கடி மறந்து விடுகிறோம். நாம் பழைய உண்மைகளை அவைகள் தற்காலத்தில் உண்மை களுக்கு மிகவும் மாறுபட்டிருக்கின்றன என்கின்ற காரணத்தினால் இகழ்கின்றோம். அரசாங்கங்கள் தோன்றி மறைகின்றன; நாடுகள் வளர்ந்து அழிந்து போகின்றன; அலைகள் தோன்றி அமிழ்கின்றன; பருவ காலங்கள் வந்து போகின்றன; இரவும், பகலும் மாறி மாறி வருகின்றன; மனிதர்கள் பிறந்து இறக் கின்றனர்; வாயுக்கள் விரிவடைந்து சுருங்குகின்றன, அதேபோல விஞ்ஞானங்கள் வளம் பெற்று அழிந்து போகின்றன.

இன்று விஞ்ஞான அறிவு நூற்றுக் கணக்கான அற்புதங்களைச் செய்யவில்லையா? ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் இம்மாதிரி செய்யக்கூடிய வல்லமை இருந்திருக்க முடியாது என்று மறுப்பது முதல்தரமான அறிவீனமல்லவா? இன்று நமக்கு எது புலப்படுகிறதோ, எது புலப்படாமல் இருக் கிறதோ அது நமக்கு முன்பிருந்தவர்களுக்குத் தெரிந் திருக்கின்றது. "இன்று நீங்கள் பெற்றிருப்பன எல்லாம் லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு இருந்தவைகளின் போலிகளே" என்று வேதவாக்கு கூறுவது முற்றிலும் பொருத்தமாகத் தோன்றுகிறது. மனிதனுடைய அகந்தையானது, இந்த உலகத்தின் விதிகளை மாற்றியமைக்க அல்லது அதைப் புரட்சி செய்ய, ஆண்டவன் அவனுக்கு மட்டும் விசேஷ அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறார் என்றும், தற்

பொழுது அவன் தன்னுடைய அறிவின் மேன்மையினுல் பார்க்கின்றவைகளை எல்லாம் முன்ஞேர்கள் அறிந் திருக்க மாட்டார்கள் என்றும், அவன் தன்னுடைய ஞானுக்னியால் இப்பொழுது காண முடியாதவற்றை முன்ஞேர்களும் கண்டிருக்க முடியாது என்றும் அவனைக் களியாட்டமாட வைத்திருக்கிறது.

பண்டைய காலத்தில் ஏற்பட்டதுபோல இப் பொழுது அற்புதங்கள் ஏன் நம் கண் முன்பாகத் தோன்றுவதில்லை? அவைகள் ஏற்பட்டுத்தான் தீர வேண்டும் என்பதற்குக் காரணம் ஒன்றும் இல்லை.

ஒவ்வொருவருக்கும் அவரவர் விரும்புகின்ற சமயத்தில், விரும்புகின்ற இடத்தில் எல்லா அற்புதங் களும் நிகழ வேண்டுமா? அம்மாதிரி நிகழ்ந்தால் தான் அதை உறுதிப்படுத்த முடியும் என்று சொன்னுல் அற்புதங்கள் முடிவின்றி நிகழ்ந்து கொண்டே இருக்கும். உலகத்தில் அற்புதங்களைத் தவிர வேறு எதுவும் இருக்காது! அப்படியானுல் அவைகள் அற்புதங்களாக மாட்டா!

ஒருவன் அற்புதத்தைத் தன் கண்ணுல் காண வில்லை என்பதனுல் மற்றவர்களும் கண்டிருக்க முடியாது என்ரே, ஒரு சிலருக்கு அற்புதங்கள் காணப்படவில்லை என்கின்ற காரணத்தினுல் தற் காலத்தில் அற்புதங்களே இல்லை என்ரே எப்படிக் கூறிவிட முடியும்?

அற்புதங்கள் தினந்தோறும் நிகழ வேண்டு மென்ருல் கிருஷ்ணர்களும், இயேசு கிறிஸ்துக்களும், புத்தர்களும் தினந்தோறுமல்லவா, இல்லை, ஒவ்வொரு நிமிஷமுமல்லவா பிறந்து கொண்டே இருக்க வேண்டும்? ஆகவே நாம் நமது புலன்களுக்குக் காணப் படுபவைகளோடு நமது தீர்க்கதரிசிகள், முனிவர்கள், சந்நியாசிகள் ஆகியோருடைய சாட்சிகளையும்

சேர்த்துக்கொண்டு நமது சிற்றறிவை விரிவடையச் செய்து பொறுமையாகக் காத்திருக்க வேண்டும்.

அற்புதங்கள் ஒரு குறிப்பிட்ட சில காலங்களில் மட்டும் நிகழ்வதற்கும், எல்லாக் காலங்களிலும் ஏற்படாமல் இருப்பதற்கும் காரணம் என்ன என்கின்ற கேள்விக்கு நமது சுருக்கமான பதில், கடவுளின் செயல்களுக்கு நாம் நிபந்தனைகள் விதிக்க முடியாது என்பதுதான். அவருடைய பேரறிவிற்கு எப்பொழுது பகலாக இருக்க வேண்டும், எப்பொழுது இரவாக இருக்க வேண்டும் என்பது தெரியும். இடைவிடாது தொடர்ந்து நிகழ்கின்ற அற்புதங்கள் அல்லது கடவுளின் நேரடியான புலப்பாடு அர்த்தமற்றதாக ஆகிவிடுவதோடு அவைகள் என்ன காரணத்திற்காக ஏற்படுகின்றனவோ அவை நிறைவேறாது போய்விடும். இறைவனுடைய இப்பிரபஞ்ச நிர்வாகத்திலே, குறிப்பிட்ட காலங்களில் தோன்றுவதுதான் பொது நியதியாக இருந்து வருகிறது. தோற்றமும், தேய்வும் மாறி மாறி வருகின்றன. அதேபோல் இறைவனுடைய தோற்றமும், தோன்றா நிலையும் மாறிமாறி வருகின்றன. இதுதான் நம்மை, நம்பிக்கை, தர்மம், அன்பு, எதிர்நோக்கி யிருத்தல் ஆகியவைகளில் பயிற்றுவிப்பதாலும், உண்மையாக விரும்புகின்ற ஆத்மாக்களுக்காக சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் மேலான அழகு, ஆனந்தம் ஆகியவற்றை யடைய நம்மிடத்தில் ஒரு பசியை ஏற்படுத்துவதாலும் நமக்குக் கிடைக்கும் பலன்களாகும்.

மனச்சார்பில் ஆரம்பித்து, தெய்வீக நிலையை அடைய வேண்டுமென்கின்ற தீவிர வேட்கையில் போய் முடிவடையும் ஆன்மீக சாதனையின் மூலம் ஜீவாத்மா பக்குவப்படுத்தப்படாத வரை அது தெய்வீகத்தைப் போற்ற முடியாது. ஆகவே பூழுமானது

அதன் சுவையும், இனிமையும் அனுபவிக்கப்படு வதற்கு முன்பாக நீண்ட காலத்திற்கு நிறுத்தி வைக்கப்பட வேண்டும்.

கிறிஸ்து, கிருஷ்ணர், புத்தர், இராமரைப் போன்ற அவதார புருஷர்கள் உலகில் தோன்றிய பொழுது கூட மக்கள் அவர்களுடைய தெய்வீகத் தன்மையை நம்பவில்லை. கண்ணபிரானிடத்திலே அசையாத நம்பிக்கை கொண்டிருந்த கோபிகளைப் பார்த்து அவர் "கோபிகளே, நீங்கள் வீட்டிற்குச் செல்லுங்கள், உங்களுடைய உள்ளங்கள், நீங்கள் எனக்கு அருகில் இருப்பதைவிட, தூரமாக இருக்கும் போது, என் மீது நன்குகப் பதிந்திருக்கும்" (பாகவதம் 1—23-24) என்று பகர்ந்தார்.

விரும்பப்படுகின்ற ஒரு பொருளானது நமது கண் முன்பாக இருக்கும் சமயத்தைவிட இல்லா திருக்கும் சமயத்தில்தான் அதிகமாக நேசிக்கப் படுகிறது. ஆகவே கடவுளானவர் நாம் அவரை இடைவிடாது எண்ணிக் கொண்டிருக்கும் பொருட்டு நமது காட்சியிலிருந்து மறைந்தே இருக்கின்றார். பொன்னை இழந்த ஏழை அதையே எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டிருப்பதைப் போல, நாம் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பான் வேண்டி கடவுள் நம்மிடமிருந்து, மறைந்து இருக்கிறரே ஒழிய நமது பிரார்த்தனைகளையும், வேண்டுதல்களையும் கேட்க விருப்பமில்லை என்பதோ, இரக்கமில்லை என்பதோ அல்ல. கடவுளின் அற்புதங்களில் இடை வெளி இருப்பது வெறும் தோற்றம் தானே யொழிய, ஆன்மீக ஒளி விளக்கம் பெற்ற ஆத்மாவுக்கு அற்புதங் களுக் கெல்லாம் அற்புதமாகும். ஆச்சரியங்களுக் கெல்லாம் ஆச்சரியம் ஒன்று எப்பொழுதும் இருக்கவே செய்கிறது.

இயேசு கிறிஸ்து பல அற்புதங்கள் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு யூத ஜெபக் கூட்டத்தில் அவர் உபதேசம் செய்து கொண்டிருந்த பொழுது பரிசேயர்கள் (Pharisces) அழிந்து போன ஒருகையுடன் கூடிய ஒருவனை அழைத்து வந்தனர். இயேசுநாதர் தன்னுடைய குணவாக்கை அவன்மீது ஜெபிக்கவே குறைவுபட்ட அவன்கை பூர்ணமடைந்தது. மற்றொரு சமயம் உணர்ச்சியிழந்த ஒரு மனிதன் இயேசுவிற்கு முன்பாகக் கொண்டுவரப்பட்டான். இயேசுநாதர் தன்னுடைய ஞான திருஷ்டியின் மூலம் அத்துன்பத்திற்குக் காரணம் என்ன என்பதையும் அம்மனிதன் அவரிடம் கொண்டிருந்த விசுவாசத்தையும் அறிந்து இறைவனுடைய மன்னிப்பிற்கு உறுதியளித்தார். இதேபோல அவருடைய பாதங்களைத் தன் கண்ணீரால் ஆழ்ந்த பச்சாத்தாபத்துடன் கழுவிய பாவியாகிய ஒரு பெண்ணிற்கும், சிலுவையில் அவரைக் கண்டு மனம் மாறிய மரணத்தருவாயில் இருந்த ஒரு திருடனுக்கும் இயேசுநாதர் கடவுளின் மன்னிப்பை வேண்டினார்.

மானிடர்களின் பாவங்களுக்கு இறைவனின் மன்னிப்பைப் பெறுவதற்கு இயேசுநாதர் விதித்த நிபந்தனைகள் பணிவு, இரக்கம், மனமாற்றம் ஆகியவைகளே.

இயேசு நாதர் செய்த அற்புதங்கள் முக்கியமாக நோய்களைக் குணமாக்கியது. அவற்றிலும் பெரும்பான்மையானவை குழப்பமடைந்த மனங்களின் நோய்களை குணப் படுத்தியவைகளாகும். இப்பொழுது உடல் அல்லது மனத்திற்குச் சம்பந்தப்பட்டது என்று கருதப்படுகின்ற காக்காய் வலிப்பு அல்லது பைத்தியம் போன்ற நோய்கள் இயேசு நாதர் காலத்தில் சாத்தானின் அம்சமாகக் கருதப்பட்டன. இயேசு நாதர்

ஒரு மனிதனிடமுள்ள சாத்தான்கள் அவனிடமிருந்து வெளிவந்ததும் அவைகள் காட்டுப் பன்றிகளின் களின் மந்தைக்குள் புக வேண்டும் என்று விரும்பினர்; அந்த சாத்தான்கள் இயேசு நாதர் விரும்பியபடியே கண்முன்பாக காட்டுப் பன்றிகளின் மந்தைக்குள் புகுந்து ஒரு பாதாளத்தில் பாய்ந்து கடலில் மூழ்கின என்று பைபிளில் ஒரு விசேஷ சம்பவமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பிசாசுகளை அடக்குகின்ற சக்தியும், அவரால் குணமாக்கப்பட்ட பேய் பிடித்தவர்களின் சாட்சியும் தான் அவரிடம் உள்ள தெய்வீக சக்தியிடம் நம்பிக்கை ஊட்டியது. குழப்பமடைந்த உள்ளங்களைச் சாந்தப் படுத்தவல்ல மாபெரும் சக்தியை இயேசுநாதர் பெற்றிருந்தார் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை. அச்சக்திகள் மனோதத்துவரீதியில் வேலை செய்தன. குஷ்ட நோய், வாதநோய் குருடு ஆகியவற்றை குணப் படுத்துகின்ற அதிசயமும் இந்த மனோ தத்துவ அல்லது ஆன்மீக முறையைச் சேர்ந்ததுதான். இவைகள் தற்காலத்திய மருத்துவ சாஸ்திரத்திற்கு நன்ருகத் தெரிந்தவைகளே.

ஆனல் இயேசுநாதரின் அற்புதங்களைப் பற்றிய ஒரு விஷயம் மட்டும் எல்லா அறிஞர்களுக்கும் சிந்தனையாளர்களுக்கும் பொருந்தாததாக இருக்கிறது. அவருடைய அற்புதங்கள் குயுக்தியுள்ளம் படைத்த பரிசேயர்களிடத்தில் அவருடைய மகிமையைப்பற்றிய நம்பிக்கையை ஏற்படுத்தத் தவறிவிட்டன. அவர்கள் அவரை நம்புவதற்காக அவர் பரலோகத்திலிருந்து ஏதாவது ஒரு அறிகுறியைத் தங்களுக்குக் காட்ட வேண்டுமென்று அடிக்கடி சவால் விடுத்தனர். ஆனல் இயேசுநாதர் அவர்களுக்கு எவ்வித அறிகுறியையும் காட்ட கண்டிப்பாக மறுத்துவிட்டார். அவர்

"அதர்ம வழியிலும் துஷ்டத்தனமாகவும் செல்லுகின்ற ஒரு வம்சத்தினர் ஒரு அறிகுறியை நாடி இருக்கின்றனர். அவர்களுக்கு எவ்விதமான அறிகுறியும் காட்டப் போவதில்லை" என்று பிரகடனப்படுத்தினர். அந்த முறையில் நம்பிக்கையை வற்புறுத்த அவருக்கு விருப்பமில்லை.

நோயைக் குணப்படுத்தும் அவருடைய அற்புதங்களனைத்தும், மானிட வர்க்கத்தின் துயரமானது அவரிடமிருந்து பெற்ற கருணைச் செயல்களேயாகும். அவர் தம்முடைய அற்புத சக்திகளை விளம்பரப்படுத்த வேண்டாமென்று கண்டிப்பாக உபதேசித்திருந்தார். அவருடைய அற்புதங்கள், அவர் குணப்படுத்திய நோயாளிகள் அவர்மீது கொண்டிருந்த நம்பிக்கைக்காகச் செவிமடுத்துச் செய்யப்பட்ட செயல்களேயாம். அம்மாதிரி நம்பிக்கையற்ற இடத்தில் அதுபோன்ற அற்புதங்களை அவர் நிகழ்த்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

நம்பிக்கை இருக்குமிடத்தில் இயேசுநாதர் செய்தது போன்ற அற்புதங்கள் இன்னும் நிகழ்கின்றன. ஒரு சமயம் இயேசுநாதர் தம்முடைய சொந்த நகரமாகிய நாசரேத்தில் உபதேசம் செய்து கொண்டிருந்த பொழுது அவர் "ஒரு தீர்க்க தரிசி சொந்த ஊரில் காணவில்லை" என்ற பழமொழிக்கேற்ப பழிச் சொல்லுக்கு ஆளானர். மக்கள் அவருடைய தாழ்ந்த பிறவியைப் பற்றிப் பழித்துக் கூறி அவருடைய அற்புதங்களில் ஏதாவது ஒன்றைச் செய்து காட்டும்படி சவால் விடுத்தனர். ஆனல் அந்த அவநம்பிக்கைக் காரர்களிடத்தில் அவர் நோய்களை குணப்படுத்துகின்ற அந்த வேலையைக் கூடச் செய்யவில்லை.

உண்மையைப் பெற்றுக் கொள்ள விருப்பமுடைய இதயங்களுக்கு "மர்மம்" என்பது வெளிப்படையான ரகசியமே; புரிந்து கொள்ளாதவர்களுக்கும் கிரஹித்துக் கொள்ளமுடியாதவர்களுக்கும் அது மறைபொருளே.

ஒரு முனிவருடைய ஆன்மீகத் தன்மையையும், பெருமையையும் கண்டறிவதற்கு, அற்புதங்களை நிகழ்த்தக்கூடிய திறமை மட்டும் அளவு கோலாகாது. கடவுள் உலக நன்மையின் பொருட்டு, ஒருசில தேர்ந்தெடுத்த முனிவர்களின் மூலமாக, சில அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுவதன் மூலம், தன்னை வெளிப்படுத்திக் காட்டுகிறார். வேறு சில முனிவர்கள் அம்மாதிரியான காரியங்களைச் செய்வதிலிருந்து இறைவனுக்கு மட்டுமே தெரிந்திருக்கும் காரணத்தினால், மனிதனுடைய அறிவிற்கு முற்றிலும் அப்பாற்பட்ட ஏதாவது காரணத்தினால், நீக்கப்பட்டிருக்கலாம்.

என்னுடைய ஆன்மீகக் கடவுளும், குருவுமாகிய மஹரிஷி சிவானந்தரைப் பற்றிச் சிலிர்க்க வைக்கும் அற்புத நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. அவர் தம்முடைய சித்திகளைப் பற்றித்தாமே அறியாதவராக இருக்கின்றார்.

சதாச்சாரத்தில் நிலைபெற்றிருத்தல், யோக அங்கங்கள் அனைத்திலும் பெற்றிருக்கும் பயிற்சி, 15 ஆண்டுகளுக்கு மேலாக விடாப்பிடியாக அனுஷ்டித்து வரும் சத்தியவிரதம், தீவிரமான சமரச அன்புணர்ச்சி, இறை சாந்நித்யப் பயிற்சி, சரீர மன ஜெயம், நல்ல எண்ணம், சொல், செயல் ஆகியவைகளின் அப்பியாசம், பூரண ஆத்ம நிக்ரஹம், இறைவனுடைய விருப்பத்திற்குப் பூரண சரணாகதி அடைதல், ஆகிய பண்புகள், இந்த மஹரிஷியை இறைவன் தன்னுடைய அற்புதங்களைச் செய்வதற்குத் தக்க கருவியாக்கிக் கொள்ளச் செய்திருக்கின்றன. அற்புதங்கள் சிறிதா

யினும், பெரியதாயினும் அதற்குக் காரணமாக விளங்கு பவர் கடவுளே.

மஹரிஷி சிவானந்தர் தன்னிடத்தில் அசாதாரண ஆன்மீக சக்திகள் இருக்கின்றன என்று உரிமை பாராட்டுகின்ற அல்லது தான் அற்புதங்கள் செய்வ தாக நம்புகின்ற ஒரு சித்தி விளையாட்டுக்காரர் அல்ல. தங்களிடமுள்ள சித்திகளை உணர்ந்திருக்கின்ற முனிவர்களும், உணராத மஹரிஷிகளும் உண்டு. நமது மஹரிஷி இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவர்.

ஸ்ரீ காசிராம் பாபு என்ற ஒரு பெரிய வியாபாரி சமீபத்தில் கல்கத்தாவிலிருந்து ஆசிரம வாசி ஒருவ ருக்குக் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார்.

“ஆனந்த குடீரத்தின் வழிபடு தெய்வமாக விளங்குகின்ற அவர்தான் அற்புதங்களைச் செய்பவர். அவருடைய அற்புதத்தில் சம்பந்தப்பட்டுள்ள நீங்களும் நானும், மற்றுமுள்ளோரும் அவருடைய கைப்பாவைகளே. அவர் சூத்திரதாரி. அவர் ஆட்டு விப்பதைப் போல் நாம் ஆடுகின்றோம். அவர் எந்தக் கணத்தில் ஆட்டுவிப்பதை நிறுத்துகின்றாரோ அப் பொழுதே பொம்மைகள் ஆடுவதும் நின்று விடு கின்றன. இதுதான் உண்மை. இந்த உண்மையைத் தான் அவர் தினந்தோறும் சிஷ்யர்களாகிய உங்கள் மூலமாகவும், முறையாக அவரோடு தொடர்பு கொள் கின்ற உலக மக்களாகிய எங்கள் மூலமாகவும் போதித்துக் கொண்டு வருகிறார். அந்தச் சித்தருடைய மகிமை வாழ்க! அவருடைய குடீரத்தை அலங்கரிக் கின்ற அவருடைய அன்பிற்குரிய கருவிகள் வாழ்க!”

நமக்கு எப்பொழுதுமே தெரியாமல் இருக்கக் கூடிய பல அற்புதங்கள் இந்த மஹரிஷியிடம் உள்ளன. இங்கு இந்த மஹரிஷியினால் நிகழ்த்தப்பட்ட சில

அற்புதங்களில் பங்கு கொண்ட பக்தர்கள் எழுதிய கடிதங்களிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் சில கொடுக்கப்பட்டுள்ளன. அவைகள் அவருடைய அற்புதங்களை ஆதார பூர்வமாக நம்புவதற்குச் சாட்சி களாக விளங்குகின்றன.

"அதிருஷ்ட வசமாக நான் தற்பொழுது தங்களுக்கு 11-8-49-ந் தேதி எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த நோய் நீங்கப் பெற்றிருக்கின்றேன். அந்தக் கடிதத்தைப் போட்டவுடன் அந் நோய் நீங்கியது ஒரு அதிசயமே. எல்லாம் குருஜியின் மகிமையும் ஆண்டவன் பெருமையுமே யாகும்."

ஸ்ரீ K. A. டாக்கர், சென்னை

*　　　*　　　*

"1948ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் துரோணாசலத்தில் எனக்கு டைபாயிட் ஜுரம் வந்தது. அதைத் தாங்கள் தபால் மூலம் குணமாக்கினீர்கள். 1948 செப்டெம்பர் மாதம், விடியற்காலை எனக்கு ஏற்பட்ட கனவு ஒன்றில் நான் தங்களுக்கு நைவேத்யம் காட்டி தங்களிடம் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன். ஒரு கறுப்பு நாய் வந்தது. அதைப் (நைவேத்யத்தைப்) பற்றிக் கொண்டது. நான் அதை அடிப்பதற்குப் போனேன். நீங்கள் புன்னகையுடன் தோன்றி "நான் உன்னிடம் இருக்கிறேன்" என்று கூறினீர்கள். தாங்கள் என்னிடம் இருப்பதாக நான் உணர்கின்றேன்."

ஸ்ரீ P. துரோணாசலம்.

*　　　*　　　*

தங்களுடைய கருணை என்மீது எப்பொழுதும் இருப்பதை நான் உணர்கின்றேன். இது, 2-2-49ந் தேதியன்று தங்களுடைய கருணையானது என்னை ஒரு நாகப்பாம்பு கடியிலிருந்து காப்பாற்றியதனுல் நிருபிக்கப்பட்டு விட்டது.''

ஸ்ரீ M. சுந்தரம், பெங்களூர்.

* * *

''தங்களுடைய பணிவுள்ள பக்தனும், தங்களோடு கடிதத் தொடர்பு கொண்டு அவ்வப்போது தங்களின் ஆசிகளையும் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் சிறு வெளியீடுகளையும் பெற்று வருபவனும், என்னுடைய மகனுமாகிய K. ஸ்ரீனிவாசன் நேற்று கல்லூரியிலிருந்து வீட்டிற்கு வரும் வழியில் ஏற்பட்ட பயங்கரமான மோட்டார் விபத்திலிருந்து தங்களுடைய கருணையினுல் தப்பினுன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.''

ஸ்ரீ C. S. கிருஷ்ணமூர்த்தி, ஹைதராபாத்.

* * *

''தங்களுடைய ஆசிகள் ஒவ்வொரு தடவையும் ஏக்கம் நிறைந்ததும், சோதனை பொருந்தியதுமான பிரச்சினைகளை நம்பிக்கையும், சந்தோஷமும் உடையனவாக்கி விடுகின்றன. இவைகள் அற்புதங்களேயாகும்.''

ஸ்ரீ ஹன்ஸ்ராஜ் சட்டா, டேரா டூன்.

* * *

"எனக்கு எப்பொழுதாவது ஏதாவது துன்பம் நேரும் போதெல்லாம் நான் உடனே சுவாமிஜீ மஹ ராஜ் அவர்களுக்கு எழுதுகின்றேன். சுவாமிஜியின் ஆசிகளாலும், தெய்வீகத்தாலும், நான் இன்னல்களி லிருந்து விடுபடுகின்றேன் என்று நான் நிச்சயமாகக் கூறுகின்றேன்."

ஸ்ரீ சாந்தி மஹராஜன், புரோச்.

* * * *

"இம் மாதம் 14-ந் தேதி பெங்களூரிலுள்ள இந்திய கலைக் கழகத்தில் (Indian Institute of Culture) காளிதாசரின் பார்வதியைப் பற்றி ஒரு சொற்பொழி வாற்றுவதாக இருந்தது. என்னுடைய பேச்சுத் திறமையைப் பற்றி எனக்கு எப்பொழுதும் அவநம் பிக்கைதான். அன்று காலை நான் தங்களிடம் அன் றைய பிரசங்கம் வெற்றிகரமாக முடிய வேண்டு மென்று பிரார்த்தித்துக் கொண்டு தாங்கள் சில நாட் களுக்கு முன்பு அனுப்பியிருந்த விஸ்வநாதரின் விபூதியை தரித்துக் கொண்டேன். பிரசங்கத்தின் போது வார்த்தைகள் கங்கா நதிப் பிரவாகத்தைப் போல ஒரு மணி பதினைந்து நிமிட நேரம் பாய்ந்து வந்தது எனக்குப் பெருவியப்பாக இருந்தது. எல்லோ ரும் மிக்க சந்தோஷமடைந்து உற்சாக மூட்டப்பட் டனர்.

புரொபஸர் ராமகிருஷ்ண பட், பெங்களூர்.

* * *

"யாராவது தேள்கடியினால் அவஸ்தைப் பட்டால் நான் தங்களையும் இறைவ[illegible]

மூலம் அவர்களைக் குணமாக்க முடிகிறது. தாங்கள் என்னைப் பலமுறை காப்பாற்றியிருக்கின்றீர்கள். நான் 1948 பிப்ரவரியில் டைபாயிட் ஜுரத்தினால் பீடிக்கப் பட்டிருந்த பொழுது தாங்கள் என் பக்கத்தில் இருந் ததைக் கண்டேன். நான் எதை மறந்தாலும் பக்தர்க ளிடத்தில் தங்களுக்குள்ள அன்பை மறக்க முடியாது.''

ஸ்ரீ G. ஸ்ரீனிவாச ராவ், பங்கனபள்ளி.

* * *

''ஒரு மாதத்திற்கு முன்பு ஒருநாள் காலையில் நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது தங்க ளுடைய திருமுகத்தை, தாங்கள் பிரத்யக்ஷமாக என் முன் இருப்பதைப் போலவே கண்டேன்.

ஸ்ரீ மஹாசீதா, பாரிஸ்.

* * *

''நேற்று சங்கீர்த்தனத்தின் போது, தெய்வீக வாழ்க்கையைப் பற்றி ஒருசில வார்த்தைகள் கூறுவ தற்கு முன்பு நான் தங்களை நினைத்ததுதான் தாமதம். என்ன விந்தை ! தாங்கள் என்னுடைய இதய கமலத் திலும் சில சமயம் எனக்கு முன்பாகவும் வீற்றிருப் பதைக் கண்டேன்.''

ஸ்ரீ தாமோதரன், மைசூர்.

* * *

''தங்களுடைய ஆசிகளினால் என்னுடையமனைவி பூரண குணமடைந்து விட்டாள். நானும் எனது

"எனக்கு எப்பொழுதாவது ஏதாவது துன்பம் நேரும் போதெல்லாம் நான் உடனே சுவாமிஜீ மஹராஜ் அவர்களுக்கு எழுதுகின்றேன். சுவாமிஜியின் ஆசிகளாலும், தெய்வீகத்தாலும், நான் இன்னல்களிலிருந்து விடுபடுகின்றேன் என்று நான் நிச்சயமாகக் கூறுகின்றேன்."

ஸ்ரீ சாந்தி மஹாஜன், புரோச்:

*   *   *   *

"இம் மாதம் 14-ந் தேதி பெங்களுரிலுள்ள இந்திய கலைக் கழகத்தில் (Indian Institute of Culture) காளிதாசரின் பார்வதியைப் பற்றி ஒரு சொற்பொழிவாற்றுவதாக இருந்தது. என்னுடைய பேச்சுத் திறமையைப் பற்றி எனக்கு எப்பொழுதும் அவநம்பிக்கைதான். அன்று காலை நான் தங்களிடம் அன்றைய பிரசங்கம் வெற்றிகரமாக முடிய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டு தாங்கள் சில நாட்களுக்கு முன்பு அனுப்பியிருந்த விஸ்வநாதரின் விபூதியை தரித்துக் கொண்டேன். பிரசங்கத்தின் போது வார்த்தைகள் கங்கா நதிப் பிரவாகத்தைப் போல ஒரு மணி பதினைந்து நிமிட நேரம் பாய்ந்து வந்தது எனக்குப் பெருவியப்பாக இருந்தது. எல்லோரும் மிக்க சந்தோஷமடைந்து உற்சாக மூட்டப்பட்டனர்.

புரொபஸர் ராமகிருஷ்ண பட், பெங்களூர்.

*   *   *

"யாராவது தேள்கடியினால் அவஸ்தைப் பட்டால் நான் தங்களையும் இறைவனையும் பிரார்த்திப்பதன்

மூலம் அவர்களைக் குணமாக்க முடிகிறது. தாங்கள் என்னைப் பலமுறை காப்பாற்றியிருக்கின்றீர்கள். நான் 1948 பிப்ரவரியில் டைபாயிட் ஜுரத்தினால் பீடிக்கப் பட்டிருந்த பொழுது தாங்கள் என் பக்கத்தில் இருந் ததைக் கண்டேன். நான் எதை மறந்தாலும் பக்தர்க ளிடத்தில் தங்களுக்குள்ள அன்பை மறக்க முடியாது.''

ஸ்ரீ G. ஸ்ரீனிவாச ராவ், பங்கனபள்ளி.

*　　　　*　　　　*

''ஒரு மாதத்திற்கு முன்பு ஒருநாள் காலையில் நான் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது தங்க ளுடைய திருமுகத்தை, தாங்கள் பிரத்யக்ஷமாக என் முன் இருப்பதைப் போலவே கண்டேன்.

ஸ்ரீ மஹாசீதா, பாரிஸ்.

*　　　　*　　　　*

''நேற்று சங்கீர்த்தனத்தின் போது, தெய்வீக வாழ்க்கையைப் பற்றி ஒருசில வார்த்தைகள் கூறுவ தற்கு முன்பு நான் தங்களை நினைத்ததுதான் தாமதம். என்ன விந்தை! தாங்கள் என்னுடைய இதய கமலத் திலும் சில சமயம் எனக்கு முன்பாகவும் வீற்றிருப் பதைக் கண்டேன்.''

ஸ்ரீ தாமோதரன், மைசூர்.

*　　　　*　　　　*

''தங்களுடைய ஆசிகளினால் என்னுடையமனைவி பூரண குணமடைந்து விட்டாள். நானும் எனது

மனைவியும் எங்களுடைய மந்திர ஜபமும், பஜனையும் செய்து வருவதோடு, தங்களுடைய தெய்வீகக் கருணையினால் உண்டாக்கப்பட்ட அற்புதமே தவிர வேறில்லை என்று கருதுகின்றேன்.''

ஸ்ரீ பாண்டுரங்கப்பா, மைசூர்.

*　　　*　　　*

''தென் கல்கத்தா கிளையைச் சேர்ந்த தென் இந்தியா காலனியிலுள்ள ஒவ்வொருவரும் தாங்கள் கல்கத்தாவுக்கு வந்து எஸ்ரா தெருவில் தங்கியிருப்பதாகவும், தங்களுக்கு பிச்சை இடும்படியான பாக்கியம்கூட சிலருக்குக் கிட்டியதாகவும் கூறுகின்றனர். ஆனால் உண்மையில் நீங்கள் (ரிஷிகேசத்தில்) ஆனந்த குடீரத்தில் இருக்கின்றீர்கள்.

ஸ்ரீ நாராயணஸ்வாமி, கல்கத்தா.

*　　　*　　　*

1947 ல் கோவிந்த மேனன் என்கின்ற மலையாளி ஒருவர் ஆனந்த குடீரத்திற்கு வந்து சேர்ந்தார். ஒரு விதத் தோல் நோயால் (leuco-derma) அவதிப்பட்டுக் கொண்டிருந்த அவர் இம் மஹரிஷியின் அனுக்கிரஹத்தினால் நோயைப் போக்கிக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையோடு அங்கு வந்திருந்தார். அவருடைய பக்தி சிரத்தையைக் கண்டு மஹரிஷி கவரப்பட்டார். அவர் அந்த வாலிபரைச் சிறிது காலம் தன்னுடன் தங்கியிருக்கும்படி கூறினார். கோவிந்த மேனன் முறையாக ஜெபம், கீர்த்தனை முதலியவைகளைச் செய்வதும், தினந்தோறும் கங்கையில் பலமுறை ஸ்நானம் செய்வதும், மஹரிஷியின் பாதங்களில்

வீழ்ந்து வணங்குவதும், கட்டுப்பாடுடன் கூடிய ஆகாரத்தைப் புசிப்பதுமாகக் காலம் கழித்து வந்தார். இரண்டுமாத காலத்தில் அவர் பூரண குணமடைந்து விட்டார் என்பதைக்கூற ஆச்சரியமாக இருக்கிறது. அவர் மஹரிஷியைப் புகழ்ந்தவாறு மிக்க சந்தோஷத்துடன் ஆஸ்ரமத்தைவிட்டுச் சென்றுர்.

"ஆனந்த குடீரத்தின் தூய்மையான சூழ்நிலையை நான் அனுபவித்துவரும் பொழுது தாங்கள் என்னை பேராசிரியர் என்று கூறி அழைத்தீர்கள். நான் தங்களிடம் பணிவாக நான் ஒரு துணைப் போதகாசிரியன்தான் (Assistant lecturer) என்று தெரிவித்தேன். இப்பொழுது தங்களுடைய கருணையினுல் தாங்கள் கூறிய வார்த்தைகள் பலித்துவிட்டன! நான் சென்னை கல்வித்துறையில் கெஜட் பதவிக்கு உயர்த்தப்பட்டு விட்டேன். நான் இதைப் புனிதமான ஆஸ்ரமத்திற்கு வந்ததினுடைய முதல் உலகாயதப் பலன் என்று கருதுகின்றேன். அவ்வாஸ்ரமம் இந்த உலகாயத அளவில் மேம்பாடடைய ஒரு படிக்கட்டாகவும், ஆன்மீக மட்டத்தில் மேலும் நிரந்தரமானவற்றை அளிக்கக்கூடியது என்றும் நினைக்கின்றேன்."

பேராசிரியர் T. K. ஸ்ரீனிவாசன்
புதுக்கோட்டை

* * *

இவைகள் இம்மஹரிஷி செய்த அற்புதங்களைக் குறிப்பிடுகின்ற அட்டவணை அல்ல. ஆனுல் துன்பத்தை இன்பமாகவும், தோல்வியை பெரும் வெற்றியாகவும், ஏமாற்றங்களை சாதனைகளாகவும், நோயைத் திடகாத்திரமாகவும், இன்னலை ஆழ்ந்த அமைதியாகவும், இருளை ஒளியாகவும், ஆரோக்கியத்தைச்சக்தி

பொருந்திய வாழ்வாகவும், வீழ்ச்சியை கொழிக்கும் வளப்பமாகவும் மாற்றக்கூடிய அற்புதங்களின் ஆசீர் வாதங்களைப் பெற நல்ல தகுதிபெற்ற தனிப்பட் டோரின் மனோநிலையையும், உள்ளத்தின் அமைப் பையும் நமக்கு எடுத்துக் காட்டுகின்ற உண்மையான கடிதங்களிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகளே ஆகும். மஹரிஷியின் தெய்வீக சக்திகளுக்குச் சான்று கொடுப் பவர்கள் அற்ப சொற்பமானவர்கள் அல்ல. ஆனல் மஹரிஷியினிடத்திலும், இறைவனிடத்திலும் பெரும் நம்பிக்கை பூண்டிருப் போரும், படித்த மேதை களும், அறிஞர்களும், இந்தியாவில் மட்டுமின்றி உலகின் எல்லாப் பாகங்களிலும் இருப்போருமாகிய ஆண் பெண் இருபாலாருமாவர்.

## 8. சிவா பக்தர்களை மரணத்தின் வாயிலிருந்து தப்புவிக்கிறார்

(பேராசிரியர் ஓ. பி. சர்மா. டெல்லி.)

பகவான் கிருஷ்ணர் புனித கீதையில் கூறியிருப் பதைப் போல், இறைவனே இக் கலியுகத்திலும்கூட பற்பல அவதாரங்களாகத் தோன்றுகின்றார். ஆனந்த குடீரத்து சிவானந்த முனிபுங்கவரும் இக் கலியுகத்தில் அப்பேர்ப்பட்ட அவதார புருஷர்களில் ஒருவர் என்று நாம் நிச்சயமாகக் கூறலாம்.

அவர் தற்பொழுது நம்மிடையே இறைவனின் பிரதிநிதியாக வீற்றிருக்கின்றார். அவருடைய ஈடு இணையற்ற பெருமையை அறிய விவாதம் எதுவும் அவசியமில்லை. நம் எல்லோர் முன்னிலையிலும் பிரத்தியக்ஷமாக விளங்கும் மெய்ப் பொருளை நாம் நேரடியாக அணுகவேண்டியதுதான். ஒரு குழந்தை

யைப் போல் அவர் புன்னகை பூப்பதையும் வேடிக்கை யாகப் பேசுவதையும் நாம் காண்கிறோம். சில வேளை களில் அவர் தன்னுடைய வியப்பு முழுவதையும் மறந்து விட்டுப் பேரானந்தக் கூத்தாட ஆரம்பித்து விடுகிறார். தெய்வீக ஞானத்தைப் புன்னகையுடன் அள்ளி அள்ளி வழங்குவதிலே அவரிடம் காணப்படும் உற்சாகமும் தயாள சிந்தையும் குழந்தையைப் போல் உள்ளது. இந்த உலக மாயையைப் பற்றியும் அவர் ஒருபொழுதும் அக்கறை கொள்வதும் இல்லை. கவலைப் படுவதும் இல்லை. நம்முடைய சுயநலப் பாங் குடன் கூடிய காரியங்கள் ஒவ்வொன்றையும் அவர் புன்முறுவலோடு கவனித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் எதைப் பற்றியும் ஒரு வார்த்தை கூடச் சொல்வது இல்லை. அவர் தினந்தோறும் நம்முடைய ஆன்மாக்களுக்கே மருத்துவராக விளங்கி வருகின்றார். அவருடைய கண்களின் நோக்கு ஒவ்வொன்றும் நம் முடைய ஆன்மாக்களுக்கு ஒருவகையான ஊசிபோடும் (Injection) மாதிரியாக விளங்குகிறது. அவருடைய தரிசனம் ஒன்றே நம்மைப் பிறப்பு இறப்பிலிருந்து விடு வித்து விடும். ஆகவே, நாம் அவரிடம் மெய்யன் போடு அணுகி நித்யானந்தமாகிய மோக்ஷத்தை அடைவோமாக. மற்ற உலகங்களுக்குப் பறந்து செல்ல விரும்புவது மனிதனுடைய அறிவீனத்தைக் குறிக்கிறது. நாம் எதற்காகச் சந்திர லோகத்திற்குப் போக முயற்சிக்க வேண்டும்! அம்மாதிரியான முயற்சி ஒவ்வொன்றும் நம்மை ஏமாற்றத்தில்தான் கொண்டு போய் விடும். பகவான் சிவானந்தர் என்கிற ஹெலி காப்டர் (Helicopter) உங்களுடைய இதயத்திலே வீற் றிருக்கிறது. நீங்கள் அதை நம்பி அதில் அமர்ந்து அமரலோகத்தை அடையலாமே. நம்பிக்கைதான் தேவை. அனுபூதிக்கு முதல்படியாக விளங்குவது

நம்பிக்கையே. நம்பிக்கை திடீரென்று ஏற்படுகின்ற ஒரு சந்தர்ப்பத்திலுல் உறுதிப் படுகிறது. அந்த நம்பிக்கைக்கு ஆனந்த குடீரத்திற்கு ஒருமுறை சென்று, குருதேவரைச் சந்தித்துவிட்டு வருவதன் மூலம் அச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. அவர் பகவானின் அவதாரமாகவே திகழ்கின்ருர். கடவுளின் வடிவம் பகவான் சிவானந்தரின் உருவத்தில் அகல விரித்து நீட்டிய கரங்களுடன் உங்களை வரவேற்கக் காத்திருக் கிறது.

ஒரு சந்தர்ப்பமும் அதைத் தொடர்ந்துவந்த சில அற்புதங்களுமே என்னுடைய நம்பிக்கையை உறுதிப் படுத்தி ஆழப் பதிய வைத்தது என்று நான் துணிந்து கூறுவேன். ஆகவேதான் எனக்கு முன் அமர்ந் திருக்கும் இந்தச் சரீரத்தை வெறும் பஞ்ச பூதங்களின் சேர்க்கை என்று கருதாது, இந்த மகிமை பொருந்திய எனது குருநாதராகிய சுவாமி சிவானந்தர் என்கிற உருவத்தின்மூலம்இறைவனேதன்னுடைய சுயஉருவத் தைக் காட்டிக் கொண்டிருக்கிருர் என்று எண்ணு கிறேன். என்னுடைய கண் பார்வையையே முற் றிலும் மாற்றியமைத்து ஒருசில அற்புதங்களைக் குறிப் பிட விரும்புகின்றேன். வாழ்க்கையின் போக்கையே மாற்றியமைத்த இந்தச் சம்பவம் நிகழ்ந்திராவிடில் நான் ஒரு நாத்திகனுகத்தான் இருந்திருப்பேன் என்பது நிச்சயம். என்னுடைய வாழ்க்கையின் ஒவ் வொரு சம்பவமும் பகவான் சிவாவின் ஆசியே யாகும். இது என்னுடைய உறுதியான நம்பிக்கை. 1942-ல் "இந்தியாவை விட்டு வெளியேறு" இயக்கம் தீவிர மாக இருந்தபோது, என்னுடைய பெற்ருேர்கள் ஸ்வர்க்காஸ்ரமத்திற்குச் சென்றிருந்தனர். அவர்கள் ரிஷிகேசத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருந் தார்கள். சுவாமிஜியையும் அவர்கள் தரிசிக்கலாம்

என்று டோங்காவாலா கூறினான். ஆகவே அவர்கள் மாலை 2 மணிக்கு ஆனந்த குடீரத்தில் இறங்கினார்கள். ஸ்வாமிஜியை மாலை 5 மணிக்குத் தரிசிக்கலாம் என்று அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது தான் அவர் வழக்கமாகக் குடீரை விட்டு வெளியே வருவது வழக்கம். சுவாமிஜியைப் பார்த்த மாத்திரத்தில் என்னுடைய தந்தையார் வசீகரிக்கப்பட்டு விட்டார். என்னுடைய தாயார் அப்படியே கவரப்பட்டு விட்டார். அவருடைய முகத்தில் தனக்கே உரித்தான தெய்வீக மணம் வீசிக் கொண்டிருந்தது. அவருடைய தோற்றம் முழுவதிலும் ஒரு உற்சாகமும் பூரிப்பும் காணப்பட்டது.

என்னுடைய தாயார் தன்னுடைய வாழ்க்கையின் பிற்பகுதி முழுவதிலும் கவலைப்பட்ட வண்ணமாகவே கழித்து வந்தார்கள். என்னுடைய தமையனார் R. C. குமார் எகிப்து நாட்டில் யுத்த சேவையில் ஈடு பட்டிருந்தார். நீண்ட காலமாக அவர் இருக்குமிடத்தைப் பற்றிய தகவலே எங்களுக்குத் தெரியவில்லை. அவர் எகிப்தில் யுத்தத்தில் மாண்டு போயிருக்கக் கூடும் என்ற முடிவிற்கு நாங்கள் வரவேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டு விட்டது. என்னுடைய தாயாரின் நிலை மிகவும் பரிதாபகரமாக இருந்தது. பகவான் சிவாவின் கம்பீரமான தோற்றம் புன்னகை பூத்து சில கருணை நிறைந்த வாக்கியங்களைக் கூறியது. "ஒரு பொழுதும் சோர்வடையாதீர்கள். உங்களுடைய மகன் நலமாக இருக்கின்றார். அவர் கூடிய சீக்கிரம் திரும்பி வந்து விடுவார்" என்பதே அவ்வாக்கியங்கள். அவ்வளவுதான். திடீரென்று என்னுடைய தமையனார் 1942 செப்டெம்பர் மாதம் 21-ந் தேதி சியால் கோட் வந்து சேர்ந்தது எங்களைப் பெரும் வியப்பில் ஆழ்த்தியது. அவர் இந்திய மண்ணை மிதித்ததும்

அவரிடமிருந்து முதல் கடிதம் பம்பாயிலிருந்து எங்களுக்கு வந்து சேர்ந்தது. இது நிச்சயமாக ஒரு மஹா அற்புதமாகும்.

யுத்த சேவையில் ஈடுபட்டிருந்தபோது, என்னுடைய தமையனுரின் வாழ்வில் பல சம்பவங்கள் நடந்திருக்கின்றன. அவர் ஒவ்வொரு தடவை தப்பியதும் ஆனந்த குடீரத்து சிவாவின் கருணையினுலேயே தான் என்பதை நாங்கள் உணருகின்ருேம். அவர் குறித்த காலத்தில் திரும்பி வந்து சேர்ந்தார். அவரை என்னுடைய தாயார் ஆனந்த குடீரத்திற்கு அழைத்து வந்திருந்தார். நாம் கண்ணுல் காணக்கூடிய உயிருள்ள தெய்வமாகிய சுவாமிஜி அவர்களால் புனித நீராட்டப்பட்டார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அவர் தற்பொழுது இந்தியாவிலுள்ள ஒரு பெரிய E.M.E. ஒர்க்ஷாப்பில் O/C ஆக வேலை பார்த்து வருகின்ருர்.

மற்ருெரு அற்புத சம்பவமும் நிகழ்ந்தது. 1947 ஆகஸ்ட்டில் அது நடந்தது. குழப்பம் நடந்து கொண்டிருந்த சமயத்தில் நாங்கள் எல்லோரும் சியால்கோட் நகரில் தங்கியிருக்கலாமென்று முடிவு செய்தோம். அரசாங்கம் மாறினுலும் மக்கள் மாற முடியாது என்ற ஒரு கருத்து எங்களிடம் இருந்தது. ஆகஸ்ட் 8ந் தேதி நள்ளிரவில் திடீரென்று ஏற்பட்ட ஒரு கனவினுல் திடுக்கிட்டு எனது தாயார் எழுந்தார். "இவ்விடத்தைவிட்டு உடனே அகன்று ஹரித்துவாரத்திற்குச் சென்று விடுங்கள்" என்று சுவாமி சிவானந்தஜீ உத்தரவிட்டதாக அவர் கனவு கண்டார். நாங்கள் தயக்கத்துடன் அதற்குப் பேசாது பணிந்தோம். நாங்கள் இந்திய எல்லைக்குள் நுழைந்ததுதான் தாமதம். எங்களுக்குப் பின்னே வந்து கொண்டிருந்த ரயில் முஸ்லீம்களால் வாளபிராபாத்

திற்குப் பக்கத்தில் தகர்க்கப்பட்டது என்பதைக் கேள்விப்பட்டு நாங்கள் திகைப்புற்றோம். தெய்வ சக்தி கண்டறிய முடியாதது. ஆனாலும் அதே கடவுள் இம்மாதிரி திடீரென ஏற்படுகின்ற கனவுகளின் மூலம் எங்களைக் காப்பாற்ற வருவதோடு எங்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியிலும் வழிகாட்டிக் கொண்டு செல்கின்றார். நாங்கள் ஹரித்துவாரத்தை அடைந்ததும் உடனே ஆனந்த குடீரத்திற்குப் புறப்பட்டு குருதேவரின் தரிசனத்தில் ஆறுதல் பெற்றோம். அவருடைய இதமான பாதுகாப்பில் அடைக்கலம் பெற்று அங்குத் தங்கியிருந்தோம். என்னுடைய தாயார் சுவாமிஜியின் தீவிர பக்தை. எனக்கும் அவரால் குரு மந்திரம் உபதேசிக்கப்பட்டது. சில சமயங்களில் நான் பாகிஸ்தான் பிரிவினையை ஏற்படுத்தி அதன் காரணமாக எங்களுக்கு சுவாமிஜியுடன் தொடர்பு கொள்வதற்கு எனக்கும், எங்கள் குடும்பத்தாருக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்து மறைமுகமாக ஆசீர்வதித்த ஜின்னா சாஹிபிற்காக பிரார்த்திப்பதுண்டு.

பாகிஸ்தானில் எங்களுக்குச் சொந்தமான அனைத்தையும் நாங்கள் இழந்த போதிலும் டெல்லியில் குடியேறிய நாங்கள் மிகவும் ஆசீர் வதிக்கப்பட்டவர்களானோம். இவை அனைத்திற்கும் காரணமாக விளங்குவது என்னுடைய குருதேவரின் ஆசிகளே என்பது எனது திடமான நம்பிக்கை.

கும்ப மேளாவின்போது ஹரித்துவாரத்தில் புனித கங்கையில் நீராடி வரும் பொருட்டு என்னுடைய பெற்றோர்கள் ஒரு வயதான பாட்டியையும் கூட்டிக் கொண்டு சென்றனர். அது சாதாரண நாள் அல்ல. கூட்டம் கணக்கிலடங்காது. ஆண்களும் பெண்களும்

எள்விழ இடமின்றி நெருக்கிக் கொண்டு மிதிபட்டுக் கொண்டிருந்தனர். எங்களோடு வந்திருந்த மூதாட்டியார் வழிதவறி கீழே தள்ளப்பட்டு விட்டார்கள். அவருக்கு உதவுவார் யாருமில்லாத நிலையில் "ஓ சிவா என்னைக் காப்பாற்று" என்று உரக்கக் கத்தி விட்டார்கள். நடந்தது இந்த அற்புத சம்பவம்தான். அவர் பிரத்யக்ஷமாக தன்னுடைய ஊனக் கண்களால் பகவானைக் கண்டார். அடுத்த கணத்திற்குள் அவருக்குப் பக்கத்தில் ஒரு நீண்ட கயிறு தொங்கியது. இந்த ஆதரவற்ற அம்மையார் கீழே கிடந்த இடத்திற்கு அருகிலேயே உள்ள ஒரு பெரிய வீட்டின் இரண்டாவது மாடியில் விளையாடிக் கொண்டிருந்த இரண்டு சிறுவர்கள் அவருடைய நிலையைக் கண்டு உடனே மேலிருந்து கயிற்றை இறக்கி இருந்தனர். அவர் அந்தக் கயிற்றைப் பிடித்துக் கொள்ளவே எல்லோரும் ஆச்சரியப்படும்படியான முறையில் அவர் மேலே தூக்கப்பட்டார்.

நான்காவது அதிசயம், இது எனக்கு என்னுடைய பெற்றோர்களுக்கும் ஏற்பட்ட அனுபவம். நான் டெல்லியிலுள்ள சாஜிமந்திரில் வசித்து வந்தேன். நான் பி. ஏ. தேர்வு எழுத வேண்டிய கேந்திரம் வீட்டிலிருந்து 5 மைலுக் கப்பாலுள்ள தர்யாகஞ்சு என்ற இடத்திலுள்ளது. பரீட்சை நாளான நவம்பர் 18ந் தேதியன்று எனக்குக் கடுமையான நியுமோனியாவும் அத்துடன் இன்புளுயன்ஸாவும் சேர்ந்து வந்து விட்டன. நான் மிகவும் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். முற்றிலும் ஆதரவற்ற நிலையில் இருந்தேன். ஒவ்வொரு விநாடியும் என்னுடைய நிலை மிகவும் மோசமாகிக் கொண்டு வந்தது. நான் நிச்சயமாக மரணத்தின் வாயில் அகப்பட்டுக் கொண்டிருந்தேன். குறைவுபட்ட அங்கங்களோடு கூடிய கன்னங்கரிய

நான்கு உருவங்கள் நீண்ட பற்களுடனும் அகன்ற தாடைகளுடனும் என்முன் நிற்பதைக் கண்டேன். அவர்கள் பருத்த கெட்டியான கயிறுகளைக் கையில் வைத்திருந்தனர். அவர்கள் என்னைக் கண்டு உறுமினார்கள். நான் பீதியடைந்து சத்தமிட முயற்சித்தேன். ஆனால் என்னால் முடியவில்லை. குடும்பத்திலுள்ளவர்கள் எல்லோரும் நான் இறந்து விடுவேன் என்று நினைத்து அழ ஆரம்பித்து விட்டனர். கடைசி நேரத்தில் என்னுடைய தாயார் கீதா பாராயணம் செய்ய ஆரம்பித்து விட்டார். நான் எதையும் கேட்கவோ, புரிந்து கொள்ளவோ முடியவில்லை. இவை எல்லாம் பின்னர் என்னுடைய பெற்றோர்களால் கூறப் பட்டவை. சோர்வுற்றிருந்த அந்த நேரத்தில்தான் தபால்காரர் கதவைத் தட்டி ஆனந்த குடீரத்திலிருந்து வந்த புக் போஸ்ட் ஒன்றைக் கொடுத்தார். அதில் சில துளசி இதழ்களும், விபூதி குங்குமப் பொட்டலங்கள் இரண்டும் இருந்தன. என்னுடைய தாயாரின் மனத்தில் சிறிது நம்பிக்கை வளர ஆரம்பித்தது. அவர் பொட்டலத்தை பிரித்து நீரில் அந்த விபூதியைக் கரைத்து பகவானுடைய அந்தப் பிரசாதத்தில் இரண்டு கரண்டியை எனது வாயில் விட்டார். நான் எனது கண்களைத் திறந்தேன். பிழைக்கக் கூடும் என்கின்ற நம்பிக்கை ஏற்பட்டது. பகவானுடைய கருணையினாலும் குருதேவருடைய கருணையினாலும் நான் அதிசயிக்கத்தக்க வகையில் காப்பாற்றப்பட்டு 1950 ஏப்ரல் மார்தம் நடந்த பி. ஏ. தேர்வில் என்னுடைய இருபதாவது வயதில் தேர்ச்சி பெற்றேன். இது பகவான் சிவானந்தரின் கருணையால் நடந்தேறியதே ஒழிய என்னுடைய முயற்சியால் அல்ல என்பது உறுதி.

என்னுடைய ஆரம்பகால வாழ்க்கையில் மற்ருெரு அதிசயம் நிகழ்ந்தது. இவை என்னுடைய வாழ்க்கையில் பிரத்தியக்ஷமாக ஏற்பட்ட பெரும் அதிசயங்களில் சிலவாகும். இவைகள் என்னுடைய ஆன்மாவில் மிக ஆழப் பதிந்திருக்கின்றன. என்னுடைய ஆனந்த குடீரத்து சிவானந்தரிடம் எனக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு. நான் என்னுடைய நண்பர்களுக்கும் அன்பர்களுக்கும் கூறுவது என்னவென்ருல் ஆனந்த குடீரத்து சிவாவிடம் தீவிரமான நம்பிக்கை வையுங்கள் என்பதுதான். அவருடைய இலக்கியத்தைத் திருப்பித் திருப்பிப் படியுங்கள். அது மிகமிக எளிமையானது. ஒரு குழந்தைகூட அதைப் படித்து அந்த மாபெரும் உண்மைகளைப் பின்பற்ற முடியும். அதன் உண்மையை நீங்கள் இப்பொழுது கூடக் காணலாம். அவருடைய விலையுயர்ந்த பரிசுகள் அவருடைய புத்தகங்களே. அவர் அவற்றை அளவு கடந்த அன்போடும் மனப் பூர்வமாகவும் வழங்குகின்ருர். அவருடைய நூல்களைத் திரும்பத் திரும்பப் படித்துவிட்டு அவற்றை உங்களுடைய நெருங்கிய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் படிக்கச் சொல்லி கொடுங்கள். அதன்மூலம் அவர்கள் பயனடைவர். அவற்றை ஒருபொழுதும் ஒரே இடத்தில் தேக்கி வைத்துக் கொண்டிருக்காதீர்கள். அவைகள் மற்றவர்களுடைய கைக்குக் கை மாறிக் கொண்டிருப்பதால் பலர் தங்களைத் திருத்திக் கொண்டு வாழ்க்கை முறையையே மாற்றியமைத்திருக்கின்றனர். இது என்னுடைய சொந்த அனுபவம். என்னுடைய நண்பர்கள் எல்லோருக்கும் நான் கூறுவது என்னவென்ருல் "சிவாவின் உபதேசங்களைப் பரப்புங்கள், சுயநலத்தோடும், குறுகிய நோக்குடனும் இருக்காதீர்கள், அவர் அகில உலகத்திற்கும் குருவாக விளங்குகின்ருர்.

ஒவ்வொருவரும் அவருடைய உபதேசங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். அவருடைய அணைப் பிலும் சேவையிலும் வருவதற்கு நாம் மற்றவர்களுக்கு மேலும் மேலும் சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொடுத் துக் கொண்டிருந்தால்தான் இவை அனைத்தையும் செய்ய முடியும். இதுபோன்ற அற்புதங்கள் பல எப் பொழுதும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் என்றும், அவைகள் நிலைபெற்றிருந்து புண்பட்ட நமது உள்ளங் களுக்கெல்லாம் எப்பொழுதும் ஆறுதல் அளித்துக் கொண்டிருக்கும் என்றும் கூறிக்கொண்டு இத்துடன் முடித்துக் கொள்கின்றேன்.

## 9. அற்புதம் செய்யும் சுவாமி சிவானந்தா

(கர்னல் A. N. S. மூர்த்தி B.A; B.L.)

சுவாமி சிவானந்தரின் வாழ்க்கையைப் பற்றியும், அவருடைய பிறப்பு, அவருடைய ஆரம்பகால கல்வி, மலேயாவில் அவர் மருத்துவராக ஆற்றிய பணி, மீண்டும் இந்தியாவிற்கு வந்தது, அத்மானுபூதி அடைய ரிஷிகேசத்தில் இயற்றிய தவம் முதலிய வற்றைப் பற்றிப் பலர் அறிந்திருக்கின்றனர். ஆத் மானுபூதி அடைந்த பிறகு அவர் தன்னுடைய புத்த கங்கள், கடிதங்கள், சொற்பொழிவுகள், அகில இந்திய யாத்திரை ஆகியவை மூலம் நமது பண்டைய பாரதத்தின் மதத்தையும், தத்துவத்தையும் பரப்பிப் புதுபித்து வருகின்ருர் என்பதையும் பலர் அறிவர். ஆனுல் அவர் செய்துவரும் பல அற்புதங்களை ஒரு சிலரே அறிவர்.

ஆம், நோயாளிகளைக் குணப்படுத்துதல், ஏழை களுக்கு அன்னமளித்தல் போன்ற அற்புதங்களை (ஒருவர் அவ்வாறு எடுத்துக்கொண்டால்) அவர்

செய்கின்றார். இவையெல்லாம் ஒருவர் அற்புதம் என்கிற வார்த்தையோடு சம்பந்தப்பட்ட அர்த்தமான மாயாஜால ரகத்தைச் சேர்ந்தவை அல்ல என்பது உண்மைதான். அவருடைய மருத்துவமனைகள், பிணியாளர்களைக் கவனித்துக் கொள்ளும் அவருடைய தொண்டர்கள், அவருடைய "லங்கர்", தினந் தோறும் இருநூறு பேர்களுக்கு உணவு தயாரித்துப் பரிமாறிவரும் "சாதுக்கள்", அவருடைய நூல்கள் பலவற்றை அச்சடித்து விநியோகிப்பதற்காக வேலை செய்துவரும் ஏராளமான அன்பர்கள் முதலியன எல்லாம் பார்ப்பதற்கு அதைப் போன்ற மற்ற ஸ்தாபனங்களிலுள்ளதைப் போல் இருக்கலாம்.

1951 ல் வெளியிடப்பட்ட "தெய்வீக வாழ்க்கை" "The Divine Life" சஞ்சிகையின் பிறந்த தின மலரில் பிரசுரிக்கப் பட்டிருந்த என்னுடைய முந்திய கட்டுரை ஒன்றில் இந்த ஆனந்த குடீரத்து முனிபுங்கவரைப் பற்றி வர்ணனை செய்து வருகையில் சுவாமிஜீ, அந்தக் கட்டுரையில் குறிப்பிட்டிருந்த, பணத்தையே ஆதாரமாகக் கொண்டு நடைபெறுகின்ற அத்தனை வேலைகளையும், எப்படித்தான் செய்து வருகின்றாரோ என்று ஆச்சரியத்தைத் தெரிவித்திருந்தேன். அந்த ஆச்சரியம் இன்னும் இருக்கிறது. இருந்தபோதிலும் இப்போது என் உள்ளத்தில் இருப்பது அதுபோன்ற அற்புதச் செயல்களைப்பற்றியன்று.

ஐந்து ரொட்டித் துண்டுகளிலிருந்து ஐயாயிரம் ரொட்டித் துண்டுகள் செய்வது, அல்லது ஒரு அத்தி மரத்தை சபிப்பது போன்றவைகள் நெடுநாட்களாகவே எனக்கு ஆச்சரியத்தைத் தோற்றுவிப்பதில்லை. இந்தியாவிலுள்ள நாம் அம்மாதிரியான காரியங்களை ஜால வித்தையில் கண்டிருக்கிறோம்.

முதலில் கூறப்பட்டது பேய் பிசாசுகளை வசப்படுத்தி மந்திர வாதிகள் செய்கின்ற சாதாரண ரகத்தைச் சேர்ந்தது. பின்னால் குறிப்பிட்டப் பட்டிருப்பது ஆன்மீக மானிடர்கள் இறைவனை நோக்கி முன்னேறிக் கொண்டு போகும் பொழுது அவர்களுக்கு வழியில் ஏற்படுகின்ற சித்திகளைச் சேர்ந்ததாகும். அவர்கள் தங்களுடைய யோக சக்திகளால் ஏற்பட்ட அந்தச் சித்திகளைக் காட்டுவதன் மூலம் ஏற்படுகின்ற சாதாரண புகழைக்கண்டு திருப்தியடைந்து ஆன்மீக ஏணியின் அந்தப்படியிலேயே நின்று விடுகின்றனர். இவைகள் உயர்ந்த ரகமாக இருப்பினும் இந்தியா இவைகளை எல்லாம் மந்திரவாதிகளைப் போலத்தான் கருதுகிறது.

இம்மாதிரி குறுக்கே ஏற்படுகின்ற சித்திகளை எல்லாம் கவனியாமல் கடைசி லக்ஷியமான இறை உணர்வை யார் பெறுகின்றாரோ அவரையே இந்தியாவும், பரம்பொருளும் முனிவர்களுக் கெல்லாம் முனிவராகக் கருதுகிறது. ஏனையோரெல்லாம் வழியிலே இடறிவிழுந்த மானிடர்களாகத்தான் கருதப்படுகின்றனர். ஆகவே அவர்கள் பூர்ணமாகப் பக்குவப் பட்டவர்களல்ல. சுவாமி சிவானந்தர் முதலில் கூறப் பட்ட இனத்தைச் சேர்ந்தவர். அவர் ஸ்ரீ சங்கராச் சாரியார், சுவாமி தயானந்தர், சுவாமி விவேகானந்தர் போன்ற ஆத்மானுபூதி பெற்ற தன்னலமற்ற ஆன் மாக்கள் வரிசையைச் சேர்ந்தவர். தங்களை உணர்ந்த இந்த ஆன்மாக்கள் இம்மாதிரியான சாதாரண அற்பு தங்களைச் செய்வது சரியல்ல என்று கருதி மனிதனையே மாற்றுகின்ற அந்த மகோன்னதமான அற்புதத்தைச் செய்து வருகின்றனர். ஸ்ரீ சங்கராச்சாரியார், சுவாமி தயானந்தர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர், தங்களுடைய வாழ்க்கையின் மூலமாகவும், தங்க

ளுடைய நூல்கள், சொற்பொழிவுகள் ஆகியவை மூல மாகவும் பல லட்சக் கணக்கானவர்களின் வாழ்க் கையையே மாற்றியமைத்திருப்பது சரித்திரம் கண்ட உண்மை. அதேபோல சுவாமி சிவானந்தருடைய வாழ்க்கை, அவருடைய நூல்கள், அவருடைய கடிதங் கள், சொற்பொழிவுகள் ஆகியவை பலருடைய வாழ்க் கையில் அற்புதங்களை ஏற்படுத்தியிருக்கின்றன. சரியான வழிதெரியாது அலைந்து திரிந்து கொண்டிருந்த பலபேர்கள் அவருடைய அறைகூவலைக் கேட்டபின்பு அவரைப் பின்பற்ற முடிவு செய்திருக்கின்றனர்.

ஆனந்த குடீரம் எனப்படும் அவருடைய எளிய இல்லத்திற்கு எல்லா இனத்தைச் சேர்ந்த மக்களையும் அவரால் கவர்ந்திழுக்க முடிகிறது. ஏழை, பணக் காரன், அரசன், உழவன், பாவிகள், முனிவர்கள், முதலிய எல்லோரும் வடநாடு, தென் நாடு, அண்டை யிலுள்ள இலங்கை முதல் நீண்ட தூரத்திலுள்ள பின்லாந்து தேசம் வரையிலுள்ள சகல இடங்களிலி ருந்தும் அவரிடம் சென்று திரும்பி வரும்போது ஊக்கு விக்கப்பட்டவர்களாய், மாற்றப்பட்டவர்களாய், அவ ருடைய உபதேசங்களைக் கடைபிடிக்கக்கூடிய உறுதி பெற்றவர்களாய், ஆன்மானுபூதிக்கு அழைத்துச் செல்ல வல்ல ஒழுங்கான, ஆன்மீக வாழ்க்கை நடத் தக்கூடியவர்களாய்க் காணப்படுகின்றனர்.

இதற்குமுன் மதத்தோடு ஒரு பொழுதும் சம்பந் தமே கொண்டிராத மக்கள் எல்லோரும் அவருடைய அறைகூவலுக்கு அடிபணிகின்றனர். இராணுவ ஜெனரல்கள், பிரிகேடியர்கள் போன்ற பெரும் அந்தஸ்து வகிக்கக்கூடிய இராணுவ உயர்தர பணி யாளர்கள் அவரிடம் சென்று முதல்தர மதவாதிகளாகத் திரும்பி வந்திருக்கின்றனர். பலர் இனிமேல் மதுவையோ, மாமிசத்தையோ எந்த ரூபத்திலும்

தொடுவதுகூட இல்லையென்று தீர்மானித் திருக்கின்றனர்.

இதேபோல் தூரதேசத்து மக்களில் பலர் அவருடைய உபதேசங்களை உற்சாகத்துடன் கடைப் பிடித்து வருகின்றனர். அவருடைய மாபெரும் செல்வாக்கு அவரோடு நேரடியாகத் தொடர்பு கொள்வதற்கு ஒரு தடையாக இருக்கவில்லை. அவருடைய நூல்களும் கடிதங்களும் அவருடன் நேரில் தொடர்பு கொண்டால் என்ன செல்வாக்கு இருக்குமோ அதே அளவு செல்வாக்கைப் பெற்றிருக்கின்றன. அவைகளைப் படித்தவர்கள் தங்கள் வாழ்க்கையை திருத்தியதோடு மட்டுமின்றி மற்றவர்களையும் அது போல் செய்ய உதவி செய்திருக்கின்றனர். இவ்வாறு அவர் இந்தியாவைவிட்டு பிரசாரத்திற்கென்று இது வரை எங்கும் வெளியில் செல்லாவிடினும் அவருடைய யோக வகுப்பு கேந்திரங்கள் உலகின் பல பாகங்களில் தோன்றியிருக்கின்றன.

சாட்சிகளே பேசட்டும். இதோ இங்கே அவர்கள் கூறியவைகள்; நியூயார்க்கைச் சேர்ந்த ஸ்ரீ ஹாரி டிக்மன் கூறுகிறார் "கருணையே வடிவான சிவானந்தஜீ தன்னுடைய ஆழ்ந்த ஞானத்தை இலவசமாக வழங்கியிருக்கிறார். அவர் பல ஐரோப்பியநாட்டு மானிடர்களுக்கு உபதேசங்களை அனுப்பியிருக்கிறார். உடல், மனம், ஆன்மா ஆகியவைகள் சம்பந்தப்பட்ட பிணிகளைப் போக்குவது எப்படி என்பது சம்பந்தமாக ஐரோப்பிய மாணுக்கர்கள் பலருக்குப் பாடங்கள் சொல்லியிருக்கிறார். இந்தியாவில் ஏராளமான பக்தர்களை வைத்துக் கொண்டு, இந்தியாவிலுள்ள பல மாதாந்திர, வாராந்திரப் பத்திரிகைகளுக்கு விஷய தானம் கொடுத்துக்கொண்டு சிவா எப்படித்தான் இதைச் சாதிக்க முடிகிறது என்று எண்ணிப் பார்க்கும்

போது அதிசயத்திலும் அதிசயமாகத் தோன்றுகிறது. நூல்களை எழுதுவதும், மாணுக்கர்களை எல்லாவழி களிலும் பக்குவப் படுத்துவதும், கீர்த்தனைகள், சொற்பொழிவுகள் நிகழ்த்துவதும், ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் சேவை செய்வதும் ஒரு மனிதரால் எப்படி முடிகிறது என்று நாங்கள் இங்கு வியப்பில் மூழ்கியிருக்கிறோம். ஆம், உலகிற்கு சித்த ஞானிகள் தேவையாக இருக்கிறது. சிவா அப்பேர்ப்பட்ட ஒருவர்.

ஸ்ரீ உசேன் காஸிமேடே ஐரான்ஷரிர் என்கின்ற ஜூரிச் சர்வ கலாசாலை புரொபஸர் கூறுவதைக் கவனி யுங்கள்:—"சுவாமி சிவானந்தா தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் ஜீவனுக இருப்பதோடு மட்டுமல்லாமல் மானிட வர்க்கம் முழுவதற்குமே வழி காட்டும் ஒரு களங்கரை விளக்கமாகத் திகழ்கின்ருர். உலக சீர் திருத்தவாதி, சக்தி பொருந்திய சமூக விஞ்ஞான சேவகர், நவீன கால மதாசாரியார், தத்துவஞானி, ஆசிரியர், பேச்சாளர், கவிஞர் ஆகிய இவர் அகில உலகிற்கும் மாபெரும் சேவை புரிந்து வருகின்ருர்."

கலிபோர்னியாவைச் சேர்ந்த ஸ்ரீமதி லிலியோன் சமஷ் கூறுவதாவது :—"அவருடைய நல்லெண்ணங் களும், ஆசிகளும் என்னைக் காப்பாற்றி மனத்திலுள்ள எல்லாவிதமான கெட்ட எண்ணங்களையும் நீக்கி, கர்மங்கள் அனைத்தையும் அழித்து, என்னுடைய மனோபலத்தை விருத்தி செய்கின்றன."

ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஸ்ரீ C. E. டைம்: சுவாமிஜியின் உபதேசங்கள் எண்ணற்ற தனி மனிதர் களின் உள்ளங்களுக்கு ஆறுதல் அளித்து புது நம்பிக் கையை ஊட்டுகின்றன. இங்கு ஆஸ்திரேலியாவில் நான் அவருடைய நூல்களையும், உபதேசங்களையும் பல நண்பர்களுக்கு வழங்கியிருக்கின்றேன். இந்த

மாதிரியாக ஆன்மீக ஞானத்தைப் பரப்புவதானது மக்களை ஒன்றுபடுத்தி நாம் எல்லோரும் உண்மையில் ஒன்று என்றும், ஆகவே நாம் மற்றவர்களால் எவ்வாறு நடத்தப்பட விரும்புகிறோமோ அதேபோல மற்றவர் களையும் மற்றும் இதரவாயில்லா ஜீவன்களையும் நடத்த வேண்டும் என்கின்ற முடிவான அனுபூதி நிலைக்கு அழைத்துச் செல்லும் என்பதில் ஐயமில்லை.''

சுவாமிஜிக்கு உலகமெங்கிலுமிருந்து வந்து குவிந்து கொண்டிருக்கும் பல்லாயிரக் கணக்கான கடிதங்களில் இவைகள் மாதிரிக்காகக் கொடுக்கப் பட்ட நான்கு கடிதங்களேயாகும். மேலும் இந்த ஆசிரியர், பலர் சுவாமிஜியிடம் வரும்வரை தீயவர் களாக இருந்து அவருடைய தொடர்பு ஏற்பட்டதன் காரணமாக ஆன்மீக மானிடர்களின் வழியை மேற் கொண்டிருப்பதைக் கண்டிருக்கிறார்.

மனிதனுடைய வாழ்க்கையை இறை வழிகளில் மாற்றியமைப்பது மிகச் சிறந்த அற்புதமல்லவா? ஆகவேதான் தொன்றுதொட்டு முனிவர்கள் மனிதனை நல்ல வழிக்குக் கொண்டுவரப் பாடுபட்டிருக்கிறார்கள்?

மனிதர்களை நீரின்மேல் நடக்க வைக்க வேண்டு மென்பதுதானா இயேசுவின் குறிக்கோளாக இருந்தது? தன்னைப் பின்பற்றுபவர்களை நெருப்பின்மீது நடக்க வைக்க வேண்டுமென்பதா ஜொரோஸ்ட்டரின் லக்ஷிய மாக இருந்தது? அவர்களுடைய ஒரே ஒரு பெரிய ஆசை மக்களை இறைவன் பக்கம் திருப்பிவிட்டு ஆண்டவன் அவர்களை என்ன நோக்கத்திற்காகப் படைத்தாரோ அதன்படி வாழவைக்க வேண்டு மென்பதுதான்.

இங்கு கொஞ்சம் மாற்றங்களும், அங்கு கொஞ்சம் மாற்றங்களும், அரசாங்க மாற்றங்களும், அந்தஸ்து மாற்றங்களும், இங்கு சிறிது செல்வத்தைக் கொடும்

பதும் அங்குக் கொஞ்சம் சந்தோஷத்தைக் கொடுப்பதும் உலகத்தின் கேடுகளைப் போக்குவதற்கு மேம்போக்காக எடுத்துக் கொள்ளும் வழியே தவிர வேறில்லை என்பதை மாமுனிவர்கள் அறிந்திருக்கின்ற காரணத்தால்தான் அவர்கள் சகல துன்பங்களுக்கும் ஆணி வேராக விளங்கும் மனிதனுடைய இதயத்தையே மாற்ற விழைந்தனர். மனிதன் மாற்றப்பட்டாலொழிய இம் மண்ணுலகில் வேறு எந்த மாற்றங்களும் சாந்தியையும் நல்லெண்ணத்தையும் உண்டாக்க முடியாது என்பது அவர்களுக்குத் தெரியும்.

சுவாமி சிவானந்தர் உலகில் தன்னுடைய ஞானத்தைப் பரப்பிக் கொண்டு எல்லோரையும் தெய்வீக வாழ்க்கை வாழும்படி அறைகூவி அழைத்துக்கொண்டிருக்கிறார். அவருடைய அறைகூவலுக்குப் பல பேர்கள் செவிசாய்த்திருக்கின்றனர். குறிப்பாக உலக மானது, யுத்தம், வெறுப்பு, உலக ஆசைகள் ஆகியவைகளால் வெறி பிடித்திருக்கின்ற இந்நாட்களில்—செவி சாய்க்கின்றனர் என்றால் அதை நான் அற்புதங்களுக்கெல்லாம் அற்புதம் என்று கருதுகின்றேன்.

## 10. குருபகவானின் அற்புதங்கள்

(ஸ்ரீ சச்சிதானந்த பிரஸாத் ஸின்ஹா)

நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி எனக்குக் குருதேவர் உண்மையாகவே கண்கண்ட தெய்வமாக இருக்கிறார். அவர் சர்வ வியாபியாகவும் சர்வ சக்தியாகவும், சர்வக்ஞராகவும் இருக்கின்றார். நான் அவருடைய பாதகமலங்களை வந்து அடைந்து ஒரே ஒரு வருஷ காலம்தான் ஆகிறது. இந்தக் குறுகிய காலத்தில் ஏற்பட்ட என்னுடைய ஒருசில அனுபவங்

களை இங்கு எழுதவேண்டுமென்கிற மனத்தூண்டுதலை என்னால் தடுத்து நிறுத்த முடியவில்லை.

பகவானுடைய கருணை முதன் முதலாக பொழியப் பட்ட அந்த நன்னாளை என்னால் மறக்கவே முடியாது. அன்றுதான் 1957 செப்டெம்பர் 8-ம் நாள் என்னுடைய நண்பர் ஒருவர் குருதேவரின் 71வது ஜயந்தி விழா கொண்டாடப்படுகின்ற அந்தப் புண்ணிய ஸ்தலத்திற்குத் தன்னுடன் வருமாறு என்னைத் தூண்டினார். நான் இதற்குமுன் குருதேவரைப் பார்த்ததும் இல்லை. தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தைப்பற்றி எதுவும் கேள்விப்பட்டதும் இல்லை. ஆனால் என்னை ஏதோ இன்னதென்று தெரியாத ஒரு உற்சாகம் தூண்டுவதாக உணரவே நான் அந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ளும்படி கட்டாயப் படுத்தப்பட்டேன். நான் அவருடைய திருவுருவத்திற்குப் பாதபூஜை செய்துவிட்டு அவருடைய சீடர்கள் ஆற்றிய அரிய சொற்பொழிவுகளில் கலந்து கொண்டேன். நமது குருதேவர் ஒரு நடமாடும் தெய்வம் என்பதை நான் அங்குக் கண்டு கொண்டேன்.

அவ்விழாவின்போது ஆற்றப்பட்ட சொற்பொழிவு களினால் நான் மிகவும் ஊக்குவிக்கப்பட்டேன். நான் அந்த நிகழ்ச்சி முழுவதையும் இடைவிடாது தியானித்த வண்ணமாக இருந்தேன். என்னுடைய இதயம் அத் தெய்வத்தின் தரிசனத்தைப் பெறவேண்டுமென்று துடியாய்த் துடித்தது. எனக்கு நல்ல தூக்கம் இல்லை. நான் எப்பொழுது பார்த்தாலும் நாம் எவ்வாறு ரிஷிகேசம் சென்று அவருடைய தரிசனத்தைப் பெறுவது என்று சிந்தித்த வண்ணமாகவே இருந்தேன். கடைசியாக குருதேவரின் கருணை என்மீது இறங்கவே பூஜா விடுமுறையின்போது எனக்கு ரிஷிகேசம் செல்லுகின்ற வாய்ப்பு கிடைத்தது. பகவானுடைய பாத

கமலங்களின்மீது என்னுடைய சென்னியை வைத்த பொழுது நான் பேரானந்தப் பரவச நிலையெய்தினேன். நான் மெய்மறந்து சொர்க்கத்தில் இருப்பதாகவே உணர்ந்தேன். நான் அவருடைய தெய்வீக ஆசிகளைப் பெற்று ஆஸ்ரமத்தில் 24 மணி நேரமே தங்கி இருந்துவிட்டு பாட்னாவிற்குத் திரும்பி வந்தேன்.

நமது பிரார்த்தனைகளுக்குச் செவி சாய்த்தல்: 1957 நவம்பர் மாதம் இங்கு பாட்னாவில் உள்ளவர்களின் நன்மைக்காக சாதனா வாரம் நடத்தலாமென்று கருதினேன். சாதனா வாரத்தை டிஸம்பர் மாதம் வைத்துக் கொள்ளலாமென்று முடிவு செய்தேன். ஏனெனில் அதற்கு முன் எங்களுக்கு வழிகாட்ட யாரும் கிடைக்கமாட்டார்கள். அந்நிகழ்ச்சியை ரிஷிகேசத்து தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தில் நல்ல பயிற்சி பெற்ற ஒரு சந்நியாசியைக் கொண்டு கால தாமதமின்றி நடத்த வேண்டுமென்று நான் மிகவும் ஆவலோடு இருந்தேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக எங்களிடம் நிதிவசதி இல்லை. நான் சதா இதைப்பற்றிச் சிந்தித்த வண்ணம் இவ்விஷயத்தில் சிறிது வழிகாட்டும்படி குரு தேவரிடம் பிரார்த்தித்தேன்.

ஒருநாள் நாங்கள் எங்களுடைய வாராந்திர சத் சங்கத்தில் சாதனா வாரத்திற்கான திட்டங்கள் போட்டுக் கொண்டிருக்கையில், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தைச் சேர்ந்த சிவானந்த பாத சேவக் சுவாமி ஸ்ரீனிவாசானந்தஜீ அவர்கள் எங்கள் முன் தோன்றினார். நாங்கள் ஆனந்தக் கடலில் மூழ்கினோம். அவர் தெய்வீக வாழ்க்கைச் சங்கக் கிளைகளைப் பார்வையிடுவதற்காக சூருவளிப் பயணம் செய்துகொண்டு எங்களுக்கு மிகவும் அவசரமாகத் தேவைப்பட்டபொழுது எங்களிடம் வந்து சேர்ந்தார். எங்களுடைய கிளையை கௌரவிப்பதற்காக அவரை அனுப்பி வைத்தது குரு

கிருபையே தவிர வேறில்லை என்று நான் உணருகின்றேன்.

ஒரு குழந்தையைக் குணப்படுத்தியது: 1958 பிப்ரவரி மாதம் நடுங்குகின்ற குளிரிலே காலையில் ஒரு நாள் என்னுடைய வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள என்னுடைய நண்பர் ஒருவர், மனமொடிந்த நிலையில் என்னிடம் வந்து, தன்னுடைய ஒரே பேரப் பிள்ளைக்கு அளவுக்கு விஞ்சிய காய்ச்சலாக இருக்கிறது என்று கூறினுர். அந்தக் குழந்தைக்கு 2½ மாதமே ஆகியிருந்தது. நான் உடனே அவரோடு சென்று குழந்தையைப் பார்த்தேன். அதற்குக் காய்ச்சல் 105 டிகிரி இருந்தது. குழந்தையினுடைய நிலை மிகவும் மோசமாக இருந்தது. நான் மிகவும் வேதனைக்குள்ளாகி ஒரு மருத்துவரை வரவழைக்க ஏற்பாடு செய்தேன். நான் என்னுடைய மாலையை எடுத்து கண்களை மூடிய வண்ணம் மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜெபிக்க ஆரம்பித்தேன். மருத்துவர்களுக்கெல்லாம் மருத்துவராகத் திகழும் குருபகவானைத் தியானித்தேன். அவருடைய கருணைக்காகவும் ஆசிகளுக்காகவும் பிரார்த்தனை செய்தேன்.

நான் ஆச்சரியப்படும்படியாக குருபகவான் ஒரு நீண்ட கம்பளிச் சட்டையை அணிந்துகொண்டு ஒரு கையில் ஊன்றுகோலைப் பிடித்தவாறு இருப்பதைக் கண்டேன். அவர் அக் குழந்தையை எடுத்துத் தன்னுடைய தொடையின்மீது வைத்துக் கொண்டு என்னிடம், சிறிது நேரத்தில் குழந்தை குணமடைந்து விடுவான் என்று சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டு அகன்றுர். என்னுடைய கண்களைத் திறந்து பார்த்தபொழுது நான் அங்கு அரைமணி நேரமாக உட்கார்ந்திருந்தது தெரிய வந்தது. நான் மறுபடியும் ஜுரம் எவ்வளவு இருக்கிறது என்று பார்த்த

பொழுது அது 103 டிகிரியாக இருந்தது. குழந்தை பழைய நிலைக்கு வந்து கொண்டிருந்தது. மாலையில் குழந்தை பூரண குணமடைந்து விட்டது. இது குரு கிருபை. அவர் தன்னுடைய பக்தர்கள் துன்பப்படுவதை விரும்புவதில்லை. யார் அவரிடம் பூரணமாக சரணடைந்து விடுகின்றார்களோ அவர்களுக்குப் பக்கத்தில் அவர் எப்பொழுதும் இருக்கின்றார்.

அபாயத்திலிருந்து பாதுகாப்பு: மற்றொரு சமயம் நான் மறுபடியும் பகவானுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேன். நான் நம்பிக்கை இழந்து காணப்படும் பொழுதெல்லாம் அவருடைய தயவை நாடி அவருடைய பாதார விந்தங்களைப் பற்றிக்கொண்டு காலதாமதமின்றி அவருடைய தெய்வீகக் கருணையைப் பெற்று வருகிறேன். 1958 மே மாதம் இந்தச் சம்பவம் நடந்தது. ஒரு திருமணத்திற்காக நான் என்னுடைய மனைவியுடன் மாமனார் வீட்டிற்குப் போக வேண்டியிருந்தது. அந்த ஊர் வட பீஹாரில் முஜாப்பூர் ஜில்லாவில் பாதையைவிட்டு உள்ளே தள்ளியிருக்கும் ஒரு கிராமம். பாதையில் மோட்டார் வண்டி செல்லக்கூடும். ஆனால் முஜாப்பூரை அடைந்ததும் பலத்த மழை காரணமாக 10 மைல் தூரம் ரஸ்தா மிகவும் பழுதுபட்டிருப்பதாகவும் பஸ் எதுவும் செல்ல முடியாது என்றும் எனக்குத் தெரியவந்தது. நான் அவ்வூருக்கு அன்றிரவே போய்ச் சேரவேண்டியிருந்ததால் நான் ஒரு மாட்டு வண்டியை அமர்த்திக் கொண்டு புறப்பட்டேன். ஆனால் வழியில் கொள்ளைக்காரர்கள் இருக்கக்கூடும் என்றும் ஆகவே என்னைப் போகவேண்டாமென்றும் அங்கிருந்தவர்கள் எச்சரிக்கை செய்தனர். எனக்கு குரு பகவானிடத்தில் உறுதியான நம்பிக்கை இருந்தது. ஆகவே பயம் என்பதே இல்லை. நான் வண்டிக்காரனை மேலே

போகும்படி சொன்னேன். அன்று நிலவொளி நன்றாக வீசிக்கொண்டிருந்தது. ஆகாயம் வெறுமையாக இருந்தது. நான் மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை பக்தி சிரத்தையுடன் ஜெபிக்க ஆரம்பித்தேன். நாங்கள் அபாய கட்டத்தை வந்தடைந்ததும் இரண்டு பக்கங்களிலிருந்தும் இரண்டு வெள்ளை எருதுகள் வந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அந்த இரண்டு காளைகளின் மீதும் கையிலே திரிசூலத்தைப் பிடித்த வண்ணம் குருபகவான் சவாரி செய்துகொண்டு வருவதையும் நான் கண்டேன். பக்திக் கண்ணீர் எனது கன்னங்களின் மீது உருண்டோடியது. என்னுடைய தொண்டை விக்கியது. குரல் கம்மியது. அந்த எருதுகள் எங்களை சுமார் மூன்று மைல் தூரம் பின் தொடர்ந்து வந்தன. நாங்கள் பத்திரமான இடத்தை வந்து அடைந்ததும் அவைகள் திடீரென்று மறைந்து விட்டன.

மேற்கூறிய கூற்றுக்களை மக்கள் நம்பட்டும் அல்லது நம்பாமல் போகட்டும். ஆனால் அவற்றை நான் பிரத்தியக்ஷமாக உணர்ந்திருக்கிறேன். எனக்கு அவைகள் அவருடைய அன்பைத் தவிர வேறில்லை. உபதேசங்களும் வழிமுறைகளும் அடங்கிய அவருடைய பல கடிதங்களை நான் பெற்றிருக்கின்றேன். அவருடைய பிரசன்னத்தை நான் எப்பொழுதும் எனது அருகில் உணருகின்றேன். நான் எப்பொழுதும் அவருடைய தெய்வீகக் கருணைக்காகவும், அவருடைய நீண்ட ஆயுளுக்காகவும் பிரார்த்திக்கின்றேன்.

— —

## 11. சிவானந்தரின் அற்புத லீலைகள் (விளையாட்டுகள்)

(ஸ்ரீ செல்லரமணி)

தொன்று தொட்டு எல்லா நாடுகளிலும் உள்ள பொதுமக்கள் மதத்தை அற்புதங்களோடு சம்பந்தப் படுத்தி வந்திருக்கின்றனர். இப்பொழுது கூடத் தங்களுடைய பலவிதமான பிணிகளைப் போக்கிக் கொள்வதற்காக மத குருமார்கள், சந்நியாசிகள். யோகிகள் ஆகியோருடைய உதவியை நாடுகின்ற மக்கள் எங்குமுளர். இந்தப் பழக்கம் பாமர மக்களிட மின்றி படித்தவர்களிடையேயும் சாதாரணமாகக் காணப்படுகின்றது. தங்களுடைய பகுத்தறிவில் பெருமிதம் கொண்டிருப்பவர்கள் கூடச் சகல முயற்சி களும் பலனளிக்காமல் போனபிறகு, கடைசியாக தெய்வீக வழிகளிலிருந்து உதவியைப் பெற எப்போ தாவது நிர்ப்பந்திக்கப்படுகின்றனர். சிலர் அற்புதங் களைச் செய்யக்கூடிய யோகிகளையும் மகாத்மாக்களை யும் தேடிக் கொண்டு இமயமலைக்குக்கூடச் செல்லு கின்றனர். ஆனால் அவர்கள் எதிர்பார்ப்பதை நிறை வேற்றி வைக்கக் கூடியவர்கள் யாரையும் காணாத பொழுது அவர்கள் ஏமாற்றமடைந்து திரும்பிவிடுகின் றனர்.

ஆனால் இந்நாட்டிலுள்ள பலர், அற்புதங்கள் நிறைந்த, அற்புதச் சித்தர் சுவாமி சிவானந்தர் வாழ்ந்து வருகின்ற சிவானந்த நகரைப் பற்றி மிகச் சிறிதே அறிந்திருக்கின்றனர். ஒருவருக்கு அவரிடம் தேவையான நம்பிக்கையும், உள்ளத் தூய்மையும் இருந்து, அவரால் சுவாமிஜியின் கருணைக் காகப் பூரண சரணாகதி அடைய முடிந்தால், அவர்

வாழ்வின் இன்னல்கள் அனைத்தையும் போக்கு வதற்குத் தவறுவதே இல்லை.

அவரைத் தியானித்து அவருடைய உதவியை நாடியதன் மூலம் நான் என்னுடைய சொந்த அனுபவத்தின் வாயிலாக அனுபவித்த அவருடைய அற்புதச் சக்திகள் சிலவற்றை இங்குக் குறிப்பிட விரும்புகின்றேன். அவைகளில் சிலவற்றை இதற்கு முன்பாக எழுதிய கட்டுரைகளில் குறிப்பிட்டிருக் கின்றேன்.

1948ல் நாங்கள் சிந்துவிலிருந்து இந்தியா விற்குக் குடிபெயர்ந்து வந்தோம். நான் என்னுடைய குடும்பத்தாருடன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டு வரும்பொழுது திடீரென்று பிர்பூர்காஸ் ஸ்டேஷனில் பாகிஸ்தானைச் சேர்ந்த ஒரு மாஜிஸ்ட் ரேட் எங்கள் முன் வந்து அவருடைய ஆட்களைவிட்டு என்னுடைய சாமான்களைச் சோதனைப் போடுவதற் காக இறங்கச் சொன்னார். இது தீய எண்ணத்தை மனத்தில் கொண்டு, வேண்டுமென்றே கொடுக்கப் படுகிற தொல்லையே தவிர வேறில்லை. ஏனென்றால் சிந்துவிலுள்ள ஹைதராபாத்தில் எங்களைப் பூரண மாகச் சோதனையிட்ட பிறகே ரயிலில் ஏற அனுமதித் தனர். மாஜிஸ்ட்ரேட்டின் முரட்டுப் போக்கைக் கண்டதும் நான் எனது கண்களை மூடிக் கொண்டு என்னுடைய சத்குரு சுவாமி சிவானந்தாவை மனப் பூர்வமாகப் பிரார்த்தித்து அவருடைய உதவியை நாடினேன். அதன்மேல் எதிர்பாராத வகையில் எனக்குத் தெரிந்த ஒரு பெரிய மனிதர் நடைப்பாதை யில் தோன்றி நான் அங்குத் தங்கவேண்டிய தொந் தரவிலிருந்து என்னை விடுவித்து அதே ரயிலில் நான் மேற்கொண்டு பயணத்தைத் தொடர்ந்து செய்யும்படி உதவினார்.

மறுபடியும், அதே ஆண்டில் நான் கேதார்நாத்-பத்ரிநாத் ஆலயங்களுக்கு யாத்திரை சென்றுகொண்டிருக்கையில் (இமயமலையின் உட்பிரதேசத்தில் 200 மைல் பிரயாணம் செய்ய வேண்டும்.) பாதி தூரம் நடந்து சென்றதும் எனது வலது காலில் தாங்கொணாத வலி ஏற்பட்டு, கால் வீங்கிவிட்டது. ஆகவே நான் ஓகி மடத்து ஸிவில் மருத்துவமனையில் சிகிச்சைக்காக நோயாளியாக அனுமதிக்கப்பட்டேன். அங்கு நான் ஒரு வாரம் முழுதும் தங்கியிருந்தும் அபிவிருத்தி காணப்படவில்லை. அதற்கு நேர்மாருக மருத்துவர் ஒரு அறுவைச் சிகிச்சை செய்யவேண்டும் என்று கூறினர். நான் மிகவும் ஏமாற்றமடைந்தேன். பிறகு நான் என்னுடைய சத்குரு சுவாமி சிவானந்தரை எண்ணி அவருடைய ஆசிகளைக் கோரி அவருக்கு ஒரு தபால் கார்டு எழுதினேன். அவருக்கு அக்கடிதம் (ஆனந்த குடீரம்) போய்ச் சேர்ந்த அன்றைய தினத்திலிருந்து நான் ஆச்சரியப்படும்படியான வகையில் அபிவிருத்தி ஆரம்பமாயிற்று. அறுவைச் சிகிச்சை எதுவும் செய்து கொள்ளாமலேயே நான் பத்ரிநாத் நோக்கி வெகு விரைவில் நடக்க முடிந்தது. இவ்வாருக நான் என்னுடைய புனித யாத்திரையை என்னுடைய குருவின் அற்புத விளையாட்டினுல் முடித்தேன்.

1950ல் நான் என்னுடைய மனைவியுடனும் மகளுடனும் மகாகும்ப மேளாவிற்குச் சென்றிருந்தேன். விழாவன்று நாங்கள் ஹார்-கி-பேடியில் புனித ஸ்னனத்தை முடித்துக் கொண்டு இருப்பிடத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருக்கும்பொழுது கட்டுக்கடங்காத யாத்ரீகர்களின் கூட்டத்தினுல் ஏற்பட்ட பரிதாபகரமான நெரிசலில் சிக்கிக்கொண்டு விட்டோம். சுமார் முப்பது பேர்கள் மிதிப்பட்டு

செத்ததை எங்கள் கண் முன்பாகக் கண்டோம். அந்த நெருக்கடியான ஆபத்தான நிலையில் நாங்கள் அச்சமின்றி சத்குரு சுவாமி சிவானந்தாவைத் தியானித்தோம். உடனே பருமனான கயிறுகள் மேலே இருந்து எங்கள்மீது இறங்கவே நாங்கள் ஒரு கட்டிடத்தின் மேல் மாடிக்கு யாரோ சில கருணை நிறைந்தவர்களால் மாயா வித்தைபோல் தூக்கப் பட்டோம். இவ்வாறாக சுவாமிஜியினுடைய கருணை யினால் எங்களுடைய உயிர்களைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது.

1951 ல் நான் ஒரு அஸிஸ்டண்ட் என்ஜினீய ராகப் பதவி உயர்வு அடைந்தேன். ஆனால் என் னுடைய குற்றம் எதுவுமில்லாமல் 1953ல் பழைய உத்தியோகத்திற்கே போடப் பட்டேன். அதே சமயத்தில் எனக்குப் பின்பு வந்தவர்கள் அஸிஸ் டண்ட் என்ஜினீயர்களாகவே தொடர்ந்து வேலை பார்த்து வந்தனர். நான் விண்ணப்பித்துக் கொண் டேன். ஆனால் திருப்திகரமான பலன் கிடைக்க வில்லை.

என்னுடைய நண்பர்கள் என்னிடம் டெல்லிக்குச் சென்று எப்படியாவது, அவசியப்பட்டால் நேர்மை யற்ற வழியிலாவது, பழைய உத்தியோகத்தைப் பெற்று வரும்படிக் கூறினர். ஆனால் நான் நேர்மை யற்ற வழிகளைப் பின்பற்ற விரும்பவில்லை. பணத்தை வீணாக்குவதற்குப் பதிலாக சிவானந்த நகரில் உள்ள விஸ்வநாதர் ஆலயத்தின் மூலதன நிதிக்காக ரூ. 500 நன்கொடை அளித்து பகவானுக்கு ஒரு விசேஷ பூஜை நடத்தும்படியாக என்னுடைய உள்ளத்தில் ஒரு தூண்டுதல் ஏற்பட்டது. நான் பேராச்சரிய மடையும்படியாக உடனே எனக்கு அஸிஸ்டண்ட் என்ஜினீயர் பதவி கிடைத்தது. சுவாமிஜி மகராஜ்

அவர்களின் ஆசிகளினுல் நான் இன்னும் அந்த உத்தி யோகத்தில் தொடர்ந்து இருந்து வருகின்றேன்.

நம்முடைய இந்த அற்புதச் சித்தர் நம்மிடையே நீடூழி வாழ்ந்து நம்முடைய துன்பங்களைத் துடைத்து நம்மை ஆன்மீகப் பாதையில் வழிகாட்டிச் செல்வாராக.

## 12. அற்புதச் சக்திகள் நிறைந்த குருதேவர்

(ஸ்ரீ அன்வாருல் ஹாஸன், ஆஜாம்கர்)

தற்கால குரு ஒருவர் ஆழ்ந்த தாரணையிலும் தியானத்திலும் தேர்ச்சி பெற்றவராக இருத்தல் அவசியம் என்பது தெளிவு. அப்பொழுதுதான் அவர் தொலைவிலிருந்து கொண்டு தொலைதூரச் செல்வாக் கைப் (telepathic influence) பிரயோகிக்க முடியும். தியா னக்கலையில் வல்லுநராக இருப்பதோடு மட்டுமின்றி அவர் தன்னுடைய ஆன்மீக அனுபவங்களைப் பூரண மாக எடுத்துக் கூறக் கூடிய இலக்கிய மேதையாகவும் இருக்க வேண்டும்.

இந்த இரண்டு அம்சங்களும் சுவாமி சிவானந் தரிடம் குறிப்பிடத் தக்க அளவு காணப்படுகின்றது. சுவாமிஜி சாதனையினுடைய தன்மையை எடுத்துக் காட்டி யிருக்கின்ருர். அதை அவரே இந்த ஆன்மீக ஞானத்தைப் பரப்புகின்ற புனித கைங்கரியத்தை மேற்கொள்ளுவதற்கு முன்பாக, செய்து பார்த்திருக் கின்ருர்.

அவருடைய அசாதாரண தாரணைச் சக்தியின் காரணமாகத்தான் சுவாமிஜியினுடைய சீடர்கள் கீழ்க் குறிப்பிட்டுள்ளதைப் போன்ற ஆன்மீக அனுபவங் களைப் பெறுகின்றனர்.

"நான் பிராணுயாமம் செய்யும் பொழுதெல்லாம் சுவாமிஜியினுடைய படம் என்முன் தோன்றுகிறது. அவரிடமிருந்து ஆன்மீக சக்தியைப் பெறுவதைப் போல் நான் உணருகின்றேன்...இப்பொழுது அடிக்கடி என்னுடைய தியானத்தில் நான் சுவாமிஜியைப் பார்க்கின்றேன். சந்தோஷமும், சாந்தியும் கூடிய ஒரு அலையானது என்மீது வந்து மோதுகிறது. நான் அவர் மீது தாரணை செய்யும்படியாகத் தடுக்கமுடியாத வகையில் கவரப்படுகின்றேன்." (ஸ்ரீமதி கேபி க்ரிட்ஷ், பெர்லின்)

நவீன குரு : ஒரு நவீன குருவிற்குத் தேவையான இரண்டு அத்தியாவசிய பண்புகளையும் தன்னகத்தே சேர்ந்தாற்போல் கொண்டிருக்கின்ற ஒரே ஒரு நவீன குரு சுவாமிஜிதான். ஏனைய பிரபல யோகிகள் சிலர் பக்தி அல்லது ஆன்ம விசாரத்தைத் தங்களுடைய சொந்த சாதனையாகக் கொண்டிருக்கின்றனர். சகல யோகத்திலும் நிபுணராக இருந்தும் தன்னுடைய அகச் சாதனையாகத் தியானத்தைக் கைக்கொண்டு பூர்ண யோக மார்க்கத்தை உபதேசித்து வருகின்ற யோகி, சுவாமிஜி ஒருவர்தான்.

மானிடர்களின் அனுபவங்கள் : தொலை தூரத்தி லிருந்து ஆன்மீக சக்தியைச் செலுத்தும் (Spiritual Telepathy) சுவாமிஜியின் சக்திக்கு அவருடைய பக்தர் கள் பல்வேறு இடங்களிலிருந்து எழுதிய கீழ்க்கண்ட சம்பவங்கள் சான்றுக விளங்குகின்றன. கனவுகளின் மூலம் தன்னுடைய சீடர்களை ஊக்குவிக்கின்ற சக்தி யைச் சிவானந்தர் பெற்றிருக்கின்ருர்.

ஹைதராபாத்தைச் சேர்ந்த ஸ்ரீ M. R. சிபால் எழுது கிருர் : "நான் என்னுடைய கனவுகளில் மேன்மை பொருந்திய தங்களிடமிருந்து யோகத்தையும், தத்து

வத்தையும் பற்றிய பாடங்களைப் பெற்று வருகின்றேன்."

"நான் யோகத்தைப் பற்றி ஒன்றும் அறியாதவன். ஆனால் என்னுடைய கனவுகளில் தங்கள் தரிசனத்தைத் தருவதன் மூலம் எனக்குக் கொஞ்சம் சக்தியைக் கொடுத்தருளியிருக்கின்றீர்கள்."

மேரி மில்கோவா, வான்கூவர்: நான் ஒரு கனவின் மூலம் சுவாமி சிவானந்தரைப் பற்றி அறிந்தேன். அது ஒரு விசித்திரமான கனவு. நான் அவருடைய பெயரைப் பார்த்து அவருடன் எவ்வாறு தொடர்பு கொள்வது என்பதைப் பற்றி அறிந்து கொண்டேன். சுவாமி சிவானந்தர் தன்னுடைய சீடர்களுக்கும் பக்தர்களுக்கும் அவர்கள் வெகு தொலைவிலிருந்தாலும் தனது தரிசனத்தை அவர்கள் விழித்திருக்கும்போது கொடுக்கக் கூடிய ஆற்றலைப் பெற்றிருக்கின்றார்."

வெங்கடசுப்பையா, ஹஸூர்: 1940 ல் சாதனா வார நிகழ்ச்சியின் போது தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் எங்களுடைய கிளையில் அகண்ட கீர்த்தனை நடந்தது. 22 வயதுடைய என்னுடைய மகள், சுவாமி சிவானந்தஜி மேடையின்மீது அவருடைய படத்திற்கு அருகிலேயே காவி உடையுடனும், கையில் கமண்டலத்துடனும் நின்றுகொண்டிருப்பதைக் கண்டாள். இந்தக் காட்சி சுமார் ஐந்து நிமிட நேரம் இருந்திருக்கிறது."

வாலிராம் ஹர்தாஸ்மல், ஹைதராபாத்: "சுவாமிஜி அவர்கள் என்னிடம் வந்து என்னுடைய துன்பத்தைப் போக்கியதை நான் பிரத்தியக்ஷமாய்க் கண்டேன்."

ரங்கசுவாமி ஐயங்கார், மதுரை: "நான் காலையில் தியானத்தில் அமர்ந்தபொழுது சுவாமிஜி எனக்கு முன்பாக நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். அவர் என்னை ஆசீர்வதித்து மறைந்தார்."

ஹோவார்டு வில்லியம்ஸ், இங்கிலாந்து : "நான் லண்டனில் உள்ள மருத்துவர் ஹரிபிரஸாத் சாஸ்திரியாரைப் போய்ப் பார்த்தேன். அவர் எனக்கு எளிய பிரசாத உணவு அளித்தார். அந்தப் பிரசாதத்தில் தாங்கள் பிரசன்னமாக இருந்தீர்கள். நான் அதில் பிரத்தியக்ஷமாகத் தங்களைக் கண்டேன்."

கீதா மார்கரிட்டா, ஜெனீவா : தியாஸாபிகல் தேவாலயத்தில் நடந்த நள்ளிரவு பிரார்த்தனைக் கூட்டத்தில், தாங்கள் சிலுவைக்கு முன்பாக பீடத்தின் மேல் அழகே வடிவாக, பிரகாசத்துடன், குழந்தை போன்ற தூய்மையுடன் அமர்ந்திருந்ததை நான் உண்மையாகவே பார்த்தேன். இது மயக்கமன்று. சில வேளைகளில் என்னுடைய மனத்தில் ஒரு நிச்சயமான காட்சியின்றி, விசித்திரமானதும், தீவிரமானதுமான தங்களுடைய பிரசன்ன உணர்ச்சி ஒன்று ஏற்படுகிறது."

இந்தச் சந்தர்ப்பத்தில் சிவானந்தஜியின் சக்திகளைக் காட்டக்கூடிய ஒரு குறிப்பிடத்தக்க சம்பவம் என்னவென்றால் ஜெர்மனியைச் சேர்ந்த ப்ராசார்லட் வாலின்ஸ்கி ஹெல்லர் (Frau Charlotte Walinski Heller) அவர்களுடையதுதான். கடந்த ஒரு வருட காலமாக ஒரு விநோதமான அசரீரியானது அவரை இந்தியாவிற்கு வந்து சுவாமி சிவானந்தரின் கீழ் யோகத்தைப் பயிலும்படிச் சொல்லி வந்தது. அதன் பலனாக அந்த அம்மையார் இந்தியாவிற்கு வந்து சில மாதங்கள் சிவானந்த ஆஸ்ரமத்தில் தங்கியிருந்தார்.

என்னுடைய உரையை, முடிக்குமுகத்தான் நான் குருவிடம் எப்படி நெருங்கிய தொடர்பு கொள்வது என்பதைப்பற்றிக் கூற விரும்புகின்றேன். குருவினுடைய நூல்களை ஆழ்ந்து வாசிப்பதன் மூலம் அவரோடு பூரணமான அறிவுப் பொருத்தத்தை அடை

யுங்கள். அவருடைய உபதேசங்களை பக்தி சிரத்தையுடன் கடைப் பிடியுங்கள். உங்களுடைய முயற்சிகளில் விடாப்பிடியாக இருங்கள். உங்களுடைய குருவினிடம் பூரண நம்பிக்கை வைத்திருங்கள். அவரைக் கடவுளைப் போலவே பாவியுங்கள்.

குருவினுடைய உருவத்தைத் தூய மனத்துடனும், தீவிரமான ஒருமைப்பாட்டுடனும் தியானிப்பதன் மூலம், ஒரு மானிடன் தன்னை குருவியினுடைய கருணை வெள்ளத்தைப் பெறுவதற்குத் தகுதியுடையவனுக்கிக் கொள்ள முடியும் என்பதைக் கூறத் தேவையில்லை.

எந்த ஒரு மானிடனும் ஆன்மீக வழிக்காகவும், ஆசிகளுக்காகவும் சுவாமிஜியிடம் மனப் பூர்வமாக அடைந்து, அவருடைய உபதேசங்களை நம்பிக்கையுடனும் விடாமுயற்சியுடனும் கடைப்பிடித்து வந்தால் குறுகிய காலத்தில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தியைக் காண்பது நிச்சயம் என்று நான் உறுதியாக நம்புகிறேன். சுவாமி சிவானந்தர் நீடூழி வாழ்க !

## 13. சிவானந்தரின் தரிசனம்

(ஸ்ரீ H. N. ராமகிருஷ்ணையா, பெங்களூர்)

1956 பிப்ரவரி 12ந் தேதி இரவு நான் ஒரு கட்டிலில் படுத்துறங்கிக் கொண்டிருந்த பொழுது யாரோ என்னுடைய கட்டிலைத் தட்டுவது போன்ற சத்தத்தைக் கேட்டேன். அதை, ஏதோ எலிகள் உருட்டுகின்ற சத்தம் என்று இருந்து விட்டேன். ஆனால் சில நிமிட நேரம் கழித்து ஜன்னல் வழியாக யாரோ என்னைக் கூப்பிட்டார்கள். பால்காரன் வந்து விட்டான் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டு நான் உடனே படுக்கையை விட்டு எழுந்து கதவைத் திறந்

தேன். வெளியில் யாரும் காணப்படவில்லை. ஆகவே நான் கதவை மூடிவிட்டு மறுபடியும படுக்கைக்குச் சென்று விட்டேன். அப்பொழுது விடியற்காலை 3-15 மணி. பிறகு சிறிது நேரம் கழித்து நான் மறுபடியும் ஒரு சத்தத்தைக் கேட்டேன். சரி, யாரோ கொள்ளைக் காரன் தான் வந்திருக்கிருன் என்று நினைத்துக் கொண்டு நான் மிகுந்த தைரியத்துடன் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். எனக்கு ஒரு வெளிச்சம் காணப்பட்டது. அந்த வெளிச்சத்தோடு நான் சுவாமி சிவானந்தாவையும் கண்டேன், அவர் என்னைக் கூப் பிட்டார். மிகுந்த ஆவலாக நான் கதவைத் திறந்த பொழுது சுவாமிஜியின் உருவம் மறைந்து விட்டது. ஆகவே சுவாமிஜியை அவருடைய ஆஸ்ரமத்தில் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்தேன். பிப்ரவரி 25ந் தேதி நான் ரிஷிகேசத்திற்குப் புறப்பட்டு பிப்ரவரி 29ந் தேதி சுவாமிஜியின் தரிசனத்தைப் பெற்றேன்.

## 14. அற்புதமாகக் குணப்படுத்தும் கருணை

(ஸ்ரீ தாமஸ் ப்ரௌன், இங்கிலாந்து)

நமது தெய்வீக குருஜி சிவானந்தரின் 71வது பிறந்த தின விழாவாகிய இந்தச் சந்தர்ப்பத்தில்,பரந்து கிடக்கும் அவருடைய "சாம்ராஜ்யத்தில்" வாழுகின்ற மிகப் பணிவான சீலர்களில் ஒருவனுகிய நான், இம் மாதிரி விழாக்கள் இன்னும் பல ஆண்டுகள் கொண் டாடுகின்ற பேறு நமக்குக் கிட்டவேண்டுமென்கிற என்னுடைய நல்லாசைகளையும் மனப்பூர்வமான பிரார்த்தனைகளையும் அனுப்பி வைக்கலாமா?

என்னை தார்மீக வழியில் நடத்திச் செல்லக்கூடிய ஒரு குருஜியை நான் எங்குப் பெறுவேன் என்று

பகவானிடம் நீண்ட காலமாகப் பிரார்த்தித்து வந்தேன். பிறகு உடல் நலம் குன்றி, தொழில் அழிவடைந்து சுக மான உலக வாழ்வை நடத்துவதற்கான பொருள்கள் அனைத்தும் காற்றிலே பறந்து போய், நான் மருத்துவ மனையில் படுத்திருக்கும் பொழுது பகவான் தன்னுடைய மிகப் பெருஞ் செல்வமான நமது சிவானந்த ஜியைக் கொடுத்தருளினார்.

குருஜியினுடைய அன்பு, அவருடைய நூல்கள் மிகவும் தேவைப்படுகின்ற சமயத்தில் ஆறுதலளிக்கும் அவருடைய கடிதங்கள் ஆகியவைகளைப் பற்றி நான் எவ்வாறு சொற்களால் விளக்குவேன் ?

இந்த அற்புதமான கடவுள் மனிதர் எனக்கு ஆன்மீக சுகத்தை மட்டும் கொடுக்கவில்லை. நான் உடல் நிலை குன்றியிருந்த பொழுது என்னைக் கவனித்துவந்த மருத்துவர்களும் திகைக்கும்படியாக அற்புதமான நிவாரணத்தையும் கொடுத்து கருணை பாலித்தார்.

ரிஷிகேசத்தில் தங்கியிருக்கும் பாக்கியத்தைப் பெற்றவர்கள் சிவானந்தருடைய தரிசனத்தால் அடையும் பேரானந்தத்தை நான் ஒருபொழுதும் அறிய முடியாமல் இருக்கலாம். ஆனால் அவருடைய கருணைக்கு நான் தகுதியற்றவனாக இருந்தபோதிலும் அவர் இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காது வாழ்கின்றார்.

குருஜியினுடைய சாம்ராஜ்யத்தின் எல்லைக் காவலர்களாக இருக்கின்ற நாங்கள் அவருடைய பெயரால் எப்பொழுதும் சேவை செய்வதின் மூலமாகத் தான் எங்களுடைய அன்பைக் காட்ட இயலும். அதனால் அவருடைய பெருமையையும், கருணையையும் அறியக்கூடிய பாக்கியத்தைப் பெற்றிராதவர்கள் சிவானந்தரை உண்மையான தெய்வீக வாழ்க்கையோடும் இறைவனிடம் உயர்த்தி அழைத்துச் செல்லுகின்ற

ஒவ்வொன்றோடும் இணைக்க வருவார்கள். அவர் நம்மை அவருக்குத் தகுதியுடைவர்களாக ஆக்கட்டும்.

## 15. சுவாமி சிவானந்தருடைய கருணையின் அற்புத அனுபவங்கள்.

(ஸ்ரீ தனம், தென் ஆப்ரிக்கா)

என்னுடைய மாமனுர் கடப்பை சச்சிதானந்த சுவாமிஜியைப் பின்பற்றுபவர். அவர் பிரார்த்தனை செய்வதையும், யோகத்தைப் பயின்று வருவதையும் நான் பார்ப்பது வழக்கம். நானும் ஒரு குருவிற்காக ஏங்கியிருந்தேன். 1947-ம் ஆண்டில் ஒருநாள் இரவில் நான் பலமாக அழுது கொண்டிருந்தேன். அதே இரவில் எனக்கு ஒரு கனவு தோன்றியது. கடப்பை சுவாமிகள் அந்தக் கனவில் என் முன்பாகத் தோன்றி "நான் உன்னுடைய குரு அல்ல; நாளடைவில் உனக்கு ஒரு குரு வாய்ப்பார் என்று கூறினுர். அக் குருவினுடைய உருவம் என் முன் தோன்றி "உன்னுடைய மாமனுரின் அறையிலிருக்கும் பெட்டி அறையைத் திற. அங்கு உனக்காக என்ன காத்திருக்கிறது என்று பார்" என்று கூறியது. அடுத்த நாள் காலையில் நான் கனவில் கண்ட அதே பெட்டி அறையைத் திறந்து "சிவானந்தரின் வைர விழா கொண்டாட்ட மலரை" வெளியில் எடுத்தேன். ஆனந்தம் பொங்க அந்த மலரைக் கையிலெடுத்துத் திறந்த மாத்திரத்தில் என்னுடைய குருநாதர் சுவாமி சிவானந்தஜி மஹராஜ் அவர்களின் அதே ஒளி பொருந்திய திருமுகம் அப் புத்தகத்தின் பக்கங்களில் பிரகாசித்தது.

இந்த அற்புத சம்பவம் நடந்ததும் உடனே நான் சுவாமி சிவானந்தஜி மஹராஜ் அவர்களுக்கு எழுதி

னேன். இரண்டு வாரங் கழித்து மறுபடியும் எனக்குச் சிவாவின் காட்சி காணப்பட்டது. அவர் தன்னுடைய பிரகாசம் பொருந்திய ரூபத்துடனும் அசைந்தாடும் ஆடைகளுடனும் தோன்றினர். அக்காட்சியில் அவர் எனக்குப் படிப்பதற்காக ஒரு புத்தகத்தைக் கொடுத்தார். அடுத்தநாள் காலையிலேயே சிவாவினால் அனுப்பப்பட்டிருந்த அதே புத்தகத்தைத் தபால்காரர் கொண்டுவந்து கொடுத்தார்.

அதற்கடுத்த நாள் எனக்கு மற்ருெரு காட்சி ஏற்பட்டு அதில் சிவா தோன்றினர். நான் ரிஷிகேசத்தில் உள்ள ஆஸ்ரமத்தில் இருப்பதைக் கண்டேன். பாய்ந்தோடும் கங்கை நதி, விண்ணை முட்டி நிற்கும் இமய மலை, சாந்தம் வழியும் சுற்றுப்புறம் பேரானந்தமளிக்கும் ஆஸ்ரமம் ஆகிய அனைத்தையும் நான் அக்காட்சியில் கண்டேன். நான் சிவாவின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி "ஓ பகவானே, எனக்கு இந்தப் பிறவியில் மட்டுமல்ல, இனி எடுக்கப் போகும் எல்லாப் பிறவிகளிலும் தாங்களே எனக்கு குருவாக இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டேன். சிவா எனக்கு மந்திர தீட்சை கொடுத்து,

"நானே உங்களுடைய ஆசீர்வதிக்கப்பட்ட குரு. நான் உங்களுடன் எப்பொழுதும் இருக்கிறேன்" என்று உறுதியும் அளித்தார். அப்பொழுதிலிருந்து சிவா எப்பொழுதும் என்னுடன் இருந்து ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றி லட்சியத்தை அடைய வழி காட்டிக் கொண்டிருக்கிறர். அப்பொழுதிலிருந்து என்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு பொழுதும் அற்புத அனுபவங்கள் நிறைந்ததாகவே இருந்து வருகின்றது. இங்கு நான் அவைகளில் சிலவற்றை மட்டும் குறிப்பிடுகின்றேன்.

மறுபடியும் எனக்கேற்பட்ட ஒரு காட்சியில் நான் ஆனந்த குடீரத்தில் இதற்கு முன் கண்ட காட்சியின் போது அமர்ந்திருந்த அதே மரத்தடியில் அமர்ந்திருப்பதாகக் கண்டேன். இம்முறை சிவா தென்னுப்பிரிக்க மக்களுக்காக ஒரு செய்தியை என்னிடம் கொடுத்து "பற்றறுத்துப் பற்றுக" (Detach - Attach) என்ற முக்கியத்துவம் வாய்ந்த இரண்டு வார்த்தைகளைக் கூறினுர். நான் இதற்கு முன் யாருடைய வாயிலிருந்தும் இந்த வார்த்தைகளைக் கேட்டதில்லை. ஒரு வாரம் கழித்து ஆஸ்ரமத்திலிருந்து எனக்கு ஒரு சிறு புத்தகம் வந்தது. அதை நான் திறந்தபொழுது "பற்றறுத்துப் பற்றுக" (Detach - Attach) என்ற இதே வார்த்தைகளைக் கண்டேன்.

ஒருநாள் நான் உபவாசமிருந்து கொண்டிருந்தேன் மாலையில் சற்று பலவீனமாகத் தோன்றவே, சிறிது கண்ணயர்ந்து விட்டேன். கண நேரத்தில் கண்ணைப் பறிக்கும் நீல நிற ஒளிவட்டத்திற்குள் சிவா அங்குத் தோன்றினுர். வீட்டின் கூரையே மறைந்து போய் விட்டதைப் போலவும், அந்தத் திறந்த வெளியின் வழியாக சிவா வீட்டிற்குள் இறங்கி வருவதைப் போலவும் இருந்தது. நான் அவருடைய பாதகமலங்களைப் பக்திப் பணிவோடு தொட்டு வணங்கினேன். அவர் என்னை ஆசீர்வதித்தார். சந்தோஷம் தாங்காமல் நான் வீறிட்டுக் கத்திவிட்டேன். சத்தத்தைக் கேட்டு என்னுடைய தாயார் அறைக்குள் ஓடி வந்தார்கள் அவர்களும் கண்ணைப் பறிக்கும் அந்த நீல நிற ஜோதியைக் கண்டார்கள். ஆனுல் சிவாவின் திருவுருவைக் காணவில்லை. அக்காட்சியானது என்னுடைய கற்பனை அல்ல என்பதையும், அது மிகவும் உண்மையானது என்பதையும் நான் அறிகிறேன்.

மாதந்தோறும் சிவப்பிரசாதமாகிய திருநீறு எனக்கு வர ஆரம்பித்தது. நான் அவற்றை மிகுந்தபக்தி சிரத்தையுடன் பாதுகாத்துவைத்திருந்தேன். மரித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு ஜீவனுடைய வாயிலும் ஒரு சிட்டிகை போடுவது என்னுடைய வழக்கம். இது அவைகளுக்கு அடுத்த முறை உயர்ந்த பிறவியை அளிக்கக்கூடும் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை.

மாலை நேரங்களில் நான் வீட்டில் தனியாக இருக்க வேண்டி இருந்ததால் நான் செல்லமாக ஒரு நாயை வளர்த்து வந்தேன். அது ஒருநாள் இறந்து கிடப்பதைக் கண்டேன். நான் அதன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு மஹாமிருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜெபிக்க ஆரம்பித்தேன். அதனுடைய வாயிலிருந்து ஏற்கனவே நுரை வந்திருந்தது. அதன்மீதும் அதனுடைய உடலின்மீதும் ஈக்களும் மற்றக் கிருமிகளும் உட்காராமல் இருப்பதற்காக ஒரு துணியைப் போர்த்தினேன். நான் வீட்டிற்குள் சென்று சிறிது பாலை எடுத்து, அதில் ஒரு சிட்டிகைத் திருநீற்றையும் போட்டுக் கொண்டுவந்தேன். நான் சிவாவினுடைய நாமத்தை மும்முறை ஜெபித்து அந்தப்பாலில் ஒரு துளியை நாயின் வாயில் விட்டேன். சுவாமிஜியின் கருணையை வேண்டி நான் அழுது உரக்கக் கதறினேன். "சுவாமிஜி, தங்களிடம் தெய்வீக சக்திகள் இருக்கின்றன. தாங்கள் எதையும் செய்ய முடியும் தாங்கள் விரும்பினால் இந்த நாயை மறுபடி பிழைக்க வைக்க முடியும்" என்று இவ்வாறு கூறினேன். மறுபடியும் மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜெபித்துக் கொண்டிருந்தேன். பிறகு நான் படுக்கையறைக்கு யாரையோ டெலிபோனில் கூப்பிடுவதற்காகச் சென்றேன். டெலிபோனுக்கருகில் நான் நின்று கொண்டிருக்கும்

பொழுது யாரோ என்னுடைய சேலையைப் பற்றி இழுப்பதைக் கண்டேன். எனக்குப் பின்னால் நான் கண்டது யார் என்று நினைக்கிறீர்கள்? நான் சுற்றிக் கட்டிய மஞ்சள் துணியோடு அந்த நாய் நின்று கொண்டிருந்தது. அது மறுபடியும் பிழைத்துக் கொண்டு விட்டது. சிவாவினுடைய நாமமும் அவருடைய கருணையும், அவருடைய தெய்வீகக் கருணையின் மகோன்னதமான மகிமையை எனக்கு உணர்த்துவான்வேண்டி அந்த நாயை எமலோகத்திலிருந்து திரும்பக் கொண்டு வந்திருக்கின்றன. என்னுடைய குருதேவரால் என்ன தான் செய்யமுடியாது? அடுத்த நாள் வீட்டிலும், டர்பனில் உள்ள தெய்வீக வாழ்க்கைச் சங்கத்திலும் சிவாவிற்காக பிரார்த்தனைகள் நடத்தினேன்.

ஒருநாள் மற்றொரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. நான் மாடியில் வழக்கம்போல சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தேன். சூரியனிடமிருந்து ஒரு தெய்வீக உருவம் கிளம்பி வந்து "சமையல் அறைக்கு உடனே விரைந்துசெல்" என்று எச்சரித்தது. முதலில் அது ஒரு தூண்டுதலாக இருக்கக்கூடும், நாம் அந்தக்குரலுக்கு செவி சாய்க்கக் கூடாது என்று எண்ணினேன். ஆனால் இந்த எச்சரிக்கை மறுபடியும் கேட்டது. பிறகு நான் சமையலறைக்குச் சென்றேன். நான் அதனுள் நுழையும் பொழுது அந்த மனிதன் பால் வைத்திருந்த கோப்பையில் ஏதோ ஒன்றை (அநேகமாக ஏதாவது விஷமாக இருக்கலாம்) போட்டுக்கொண்டிருந்தான். நான் அதைக் குடிக்கவில்லை. ஆகவே நான் மரணத்தினின்று காப்பாற்றப்பட்டேன்.

இவைகள் எல்லாவற்றிற்கும் சிகரமாக விளங்கக் கூடிய அற்புத சம்பவம் மூன்று ஆண்டுகளுக்கு முன்

நான் கண்ட சுவாமிஜியின் விஸ்வரூப தரிசனமே யாகும். பரம்பொருளாக விளங்குகின்ற சிவாவின் அற்புதமான விஸ்வரூப தரிசனத்தைக் கண்டேன். அவருடைய வாயினுள் பிரபஞ்சம் முழுவதும் இருக்கக் கண்டேன். அந்தக் காட்சியானது எனக்குச் சொல் லொணுத பேரானந்தத்தையும், மகா சாந்தியையும் அளித்தது.

என்னுடைய சிறிது பக்திக்காகவே சிவா இவ் வளவு செய்ய முடிகிறதென்ருல், நாம் அவர் உண்மை யிலேயே கடவுளின் அவதாரம் என்று ஏற்றுக் கொண்டு பிறவி தோறும் நம்மை அவருடைய சேவை யில் ஈடுபடுத்தி அவரிடம் பூரண சரணுகதி அடைவோ மாகில், அது எப்பேர்ப்பட்ட பெறற்கரிய பேருக இருக்கும் என்று நான் அடிக்கடி ஆச்சரியப்படுவ துண்டு.

சிவா எனக்கு பெரும் வாழ்வைக் கொடுத்திருக் கிருர். சிவாவே எனது தெய்வம். சிவா எனக்குச் சகலமும். அப்படியாஞல் அவருடைய மகிமைகளை நான் எவ்வாறு பாடுவேன் ?

பூமியே காகிதமாகி
சமுத்திரமே ஒரு மைக்கூடாகி
மரங்களே பேஞவாகி
காலமே எழுத்தாளஞகினும்
சிவாவினுடைய மகிமைகளை

எழுதி முடிக்க முடியாது.

அவர் இயேசுநாதர்; அவர் புத்தர்; அவர் இராமர்; அவர் கிருஷ்ணர்; அவர் சிவபெருமான்; அவரே தேவி. அவரிடம் எல்லாத் தேவர்களும், தேவிகளும் தங்க ளுடைய நிறைவைக் கண்டிருக்கின்றனர். அவருடைய புனித பாதத் துளியானது நம்மைத் தூய்மையாக்கி,

நம்முடைய வாழ்வை உயர்த்தி, நமது ஆன்மாவை ஒளிபெறச் செய்வதாக அவர் என்றென்றும் என்றென்றும், என்றென்றும் நீடூழி வாழ்க!

## 16. வெற்றியைக் கொடுத்த ஆசிகள்

(டாக்டர் D. K. விஸ்வநாதன்).

சிவானந்தரின் கருணையை வெளிப்படுத்திக் காட்டும் வண்ணம் எனக்கு ஏற்பட்ட மற்ருெரு சம்பவத்தைத் தங்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகின்றேன். பர்மாவிலுள்ள 2 கோடி மக்களையும் பாதிக்கக்கூடிய மலேரியா இயக்கத் திட்டத்தின் எதிர்காலம் பற்றிய பேச்சு வார்த்தைகள் வெற்றிகரமாக முடியவேண்டுமென்பதற்காகச் சில காலத்திற்கு முன் நான் அவருடைய ஆசிகளைக் கோரியிருந்தது உங்களுக்கு நினைவிருக்கலாம். தேச மக்களுக்கு அதன் அரசாங்க மூலமாக சேவை செய்வதற்குப் பணிவான கருவிகளாக இருக்கக்கூடிய ஒரு வாய்ப்பு எங்களுக்கு மறுக்கப்பட்டு விடுமோ என்ற பயம் ஏற்பட்டு விடும்படியான ஒரு நெருக்கடியான சூழ்நிலை அப்பொழுது ஏற்பட்டது. பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக ஜூன் மாதம் கடைசி வாரத்தில் நான் பர்மா வந்தடைந்த பொழுது, நான் மேலதிகாரிகளுடன் முதல் பேட்டி காணுவதற்கு முன் சிவாவினுடைய ஆசிகளை எதிர்பார்த்தேன்; உரிய காலத்தில் அவருடைய கருணை கிடைக்கப் பெருமல் மனத்திலே பெரும் பாரத்துடன் என்னுடைய சந்திப்பிற்குச் சென்றேன். பேச்சு வார்த்தைகள் மிகவும் மந்தமாக தெளிவற்று இருந்தன. நான் தங்கியிருக்குமிடம் திரும்பி வந்ததும் குருதேவருடைய ஆசிகள் ஒரு கடலடித் தந்தி

(Cable) மூலம் அவருக்கே உரித்தான அன்பு கலந்த உற்சாக மூட்டக்கூடிய மொழியில் வந்திருப்பதைக் கண்டேன். நான் என்னுடைய நண்பர்களிடம் என்னுடைய இயக்கம் மிகவும் தெளிவின்றி வெற்றிக்குரிய மார்க்கம் தெரியாத நிலையில் இருந்தபோதிலும் அதில் குருதேவருடைய ஆசிகள் என்கின்ற ஒருநல்ல அம்சம் இருக்கிறது என்று கூறினேன். மேகங்கள் சிறிது சிறிதாகமறைந்தன. பர்மாவிற்கு நான் சமீபத்தில் சென்றிருந்த பொழுது பேச்சு வார்த்தைகளில் வெற்றிக்குரிய மாறுபாடுகள் ஏற்பட்டு சுவாமிஜி கூறியது போல் "மக்களின் நன்மைக்கான பெருந்தன்மையான இயக்கத்தைத் தொடர்ந்து நடத்தலாம்" என்ற பெரு நம்பிக்கையில் இருக்கிறோம். குருதேவரின் ஆசிகளுக்கு நன்றி. சர்வதேச உறவானது எதிர்பாராத வகையில் கடைசி நிமிட நேரத்தில் தீர்மானிக்கப்படுகிறது என்பது நன்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இது பகுத்தறிவையும், விஞ்ஞான விளக்கத்தையும் திகைக்க வைக்கும். ஆனால் மனிதனுடைய எண்ணங்கள் அனைத்தையும் இறைவன் தீர்மானித்து முடிவு கட்டுகிறார் என்று ஒருவன் உணர்ந்தால், இதைப் புரிந்து கொள்வதில் சிரமம் இருக்காது. இதே பாங்கில் பர்மாவில் மலேரியா ஒழிப்புத் திட்டத்திற்கான பேச்சு வார்த்தைகளில் ஏற்பட்ட மாற்றம் சிவாவினுடைய கருணையினாலும் மனித வர்க்கம் முழுவதினிடத்திலும் அவருக்குள்ள கருணையினாலுமே ஏற்பட்டது என்று கூறுவது என்னுடைய மதிமயக்கம் அல்ல. இது ஒரு அற்புதமல்லவா ?—டாக்டர் D. K. விஸ்வநாதன் தென் கிழக்கு ஆசிய நாடுகளின் மலேரியா ஆலோசகர் W. H. O. புதுடெல்லி.

## 17. இருதயானந்தாவுடன் சிவானந்தரின் தரிசனம்

(ஸ்ரீ P. சேஷாத்ரி, தேவக்கோட்டை).

ஆடி அமாவாசையன்று பகவான் சுவாமி சிவானந்தர் இருதயானந்தாவுடன் என்னுடைய குடிசைக்கு வந்து என்னைப் பற்றியும் எனது குடும்பத்தைப் பற்றியும் விசாரித்தார். என்னுடைய பக்திப் பரவசத்தில் பகவானைச் சந்தித்துவிட்ட ஆனந்த மேலீட்டினால், நான் என்னுடைய மனைவியையும், குழந்தைகளான வஸந்தா, ஜெயலக்ஷ்மி ஆகியோரையும் உரக்கக் கூப்பிட்டு "ஓடிவாருங்கள், பகவானை வந்து பாருங்கள், மங்கள ஆரத்தியை உடனே கொண்டு வாருங்கள், தித்திப்புப் பலகாரங்கள் செய்யுங்கள், பாத பூஜைக்காக நல்ல அழகான மாலைகளுக்கும் புஷ்பங்களுக்கும் சொல்லி வையுங்கள்" என்று கூறினேன். பகவானை வரவேற்கப் பிரமாதமான ஏற்பாடுகளெல்லாம் செய்தேன். மங்கள ஆரத்தி எடுக்கப்பட்டது. அப்பொழுது பகவான் இருதயானந்தாவுடன் ஒரு முடிமன்னரைப் போல் ஆசனத்தில் அமர்ந்தார். கண்களில் பக்திக் கண்ணீர் பெருக்கெடுக்க, அவருடைய புனித பாத கமலங்களில் பக்தி சிரத்தையுடன் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி அவற்றைத் துளசி, தாமரை, ரோஜா மலர், முதலியவைகளால் வழிபட்டோம். பகவான் எங்கள் அனைவரையும் தன்னுடைய அன்பு நிறைந்த புன்னகையின் மூலம் ஆசீர்வதித்தார். பகவானுடன் நாங்கள் நீண்டநேரம் சத்சங்கத்தில் ஈடுபட்டிருந்தோம். அப்பொழுது இருந்த எங்களுடைய நிலையை வர்ணிக்க முடியாது. ஆழ்ந்த அமைதி, அந்தரங்க ஆனந்தம்

எங்கள் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும், கண்
காணுத, தடுக்கப்பட முடியாத ஒரு சக்தியினுல் நிரம்பி
யிருப்பதைப்போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அநேக
மாக நாங்கள் எல்லோருமே சமாதி நிலையை அனு
பவித்தோம். பகவான் நாங்கள் A. 1 (முதல் தரம்)
என்று கூறி அவருடைய நேசம் நிறைந்த புன்னகை
யினுல் எங்கள் அனைவரையும் ஆசீர்வதித்தார்.
பகவானுடைய ஸ்தூல சரீரத்தை எங்களுடைய
குடிசையில் கண்டோம், நான் ஒரு ஜெபமாலைக்கா
கவும், மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்திற்காகவும்
பிரார்த்தித்த பொழுது பகவான் சுவாமி இருதயானந்
தரிடம் ஒரு ஜெபமாலையும், மந்திரத்தின் பிரதி
ஒன்றும் அனுப்பும்படி கூறிவிட்டு எங்கள் எல்லோ
ரையும் ஆனந்த குடீரத்திற்கு வந்து ஒரு வாரம் இருந்து
விட்டு வரும்படி கூறி எங்கள் எல்லோரிடமிருந்தும்
அன்புப் புன்னகையின் மூலம் விடைபெற்றுக்
கொண்டார். இது நாங்கள் கண்கூடாக அனுப
வித்த நமது பகவானின் அற்புதமாகும். இறைவா!
தாங்கள் கருணைக்கடல், எங்களை ஆசீர்வதிக்கவும்,
தவருது எங்களைக் காப்பாற்றவும் எங்களுக்குச்
சரியான வழியைக்காட்டிக் காப்பாற்றவும் இதுதான்
நாங்கள் கேட்கும் ஒரே ஒரு வரம்.

## 18. குருதேவரின் கருணை

(டாக்டர் ஸ்ரீ சிவானந்த சுந்தரி)

என்னுடைய குழந்தைப் பருவத்தில் என்னுடைய
பெற்ருேர்கள் என்னிடத்தில் சுவாமி அகால்கோட்
மகராஜ், நாமதேவர், துக்காராம் போன்ற முனிவர்கள்

பக்தர்கள் முதலியவர்களைப் பற்றிய ஊக்கமூட்டக் கூடிய கதைகளைக் கூறுவது வழக்கம். அவர்களுடைய படங்கள் எங்களுடைய பூஜை அறையில் வைக்கப் பட்டிருந்தன. அகால்கோட் சுவாமிகள் அவருடைய இடத்திலிருந்து கொண்டே பல்வேறு இடங்களிலுள்ள அவருடைய சீடர்களுக்கு ஸ்தூல சரீரத்தோடு காட்சி கொடுப்பார் என்று அவரைப் பற்றிக் கூறியது என்னிடம் நன்ருகப் பதிந்துவிட்டது. மகாத்மாக் களின் அற்புதச் சக்தியைப் பற்றி நான் வியந்தேன். ஆனுல் இப்பொழுது என்னுடைய குருதேவர் சுவாமி சிவானந்தரின் மூலம் அது போன்ற அனுபவங்களைப் பெற்று வருகின்றேன். அவர் இமயமலையில் சிவானந்த நகரின் கண்ணே அமைக்கப் பெற்றிருக்கும் ஆனந்த குடீரத்தில் இருந்து கொண்டிருக்கும் போதே எனக்கு என்னுடைய வீட்டில் காட்சி கொடுத்திருக்கிருர்.

எனக்கு உறுதுணையாக இருந்த எனது தாயாரின் மரணத்திற்குப் பிறகு, இறைவன் அருளால் நான் ஒரு பட்டணத்து மருத்துவமனையில் R. M. O. (ரெஸி டெண்ட் மெடிகல் ஆபீஸராக)வாக வேலையில் அமர்த்தப் பட்டேன். அதனுல் தூங்குவதற்குக் கிடைக்கும் ஒருசில மணி நேரம் போக மீதி நேரம் முழுவதும் சதா வேலை இருந்துகொண்டே இருந்தது. ஆகவே நான் தனிமையில் இருப்பதாக எண்ணு வதற்குச் சந்தர்ப்பமே இல்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் தான், நான் செய்த ஏதோ தன்னலமற்ற சேவைக் காக யாரோ அன்பளிப்பாகக் கொடுத்த சுவாமிஜியின் நூல்களின் மூலமாக என்னுடைய குருதேவரைப் பற்றி அறிய நேர்ந்தது. ஒரு வருடத்திற்குப் பிறகு தான் அவருடைய பாத கமலங்களைத் தரிசித்து, அவருடைய ஆசிகளைப் பெற்று, அவருடைய சிஷ்யை

யாகத் திரும்பி வருவதற்குரிய விடுமுறையைப் பெற முடிந்தது.

இந்த மருத்துவமனையில் 3½ ஆண்டு கால சேவைக்குப் பிறகு ஒரு கிராமபுரத்து மருத்துவமனைக்கு மாற்றல் உத்தரவு கிடைத்தது. இதனால் நான் எப்படி அங்குத் தனியாகச் சென்று, ஒரு தனி வீட்டில் இருந்து வருவது என்ற கவலை எனக்கு ஏற்பட்டு விட்டது. ஏனெனில் அந்த மருத்துவமனையோடு தங்குவதற்கு வீடு இணைக்கப்படவில்லை. அன்று மாலை என்னுடைய மாற்றத்தைப் பற்றிச் சிந்தித்த வண்ணம் குரு தேவருடைய படத்திற்கு முன்பாக அமர்ந்துகொண்டு அதை உற்று நோக்கிக் கொண் டிருந்தேன். திடீரென்று எனக்குத் தெரிந்த ஒரு குரல் "டாக்டர், டாக்டர்" என்று முன்புறத்து வராந் தாவிலிருந்து கூப்பிட்டதைக் கேட்டேன். பிரசவ அறைக்குப் பக்கத்தில் நான் வழக்கமாக இரவு பகல் எந்நேரமும் தங்கியிருக்கும் பின்புறத்து கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அங்குதான் பின் புறக் கதவு வழியாக ஆஸ்பத்திரியிலிருந்து கடிதங்கள் பெறுவது வழக்கம். நான் முன்புறத்து கூடத்துக்குச் சென்று கதவைத் திறந்தேன். அங்கு எனது பூஜிக்கத் தக்க குருதேவர், கையில் தடியுடனும் முகத்திலே தெய்வீகப் புன்னகையுடனும் கதவை நோக்கி வந்து கூடத்துக்குள் நுழைவதைக் கண்டேன். அவருடைய புனித பாதங்களில் பயபக்தியுடனும், சந்தோஷத் துடனும் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி சில விநாடிகளுக்கு முன் என்னை "டாக்டர், டாக்டர்" என்று அழைத்த அந்த இனிய குரலை ஞாபகப்படுத்தி கொண்டேன். நான் எழுந்து பார்த்தபொழுது எனக்கு முன்பாக யாரையும் காணவில்லை. ஆகவே உடனே அவசர அவசரமாகப் பக்கத்து அறையில் சென்று

தேடினேன். நான் கதவை மூடிவிட்டு என்னுடைய வழக்கமான இடத்திற்குச் சென்று அமர்ந்து குரு தேவரைத் தியானித்தேன். அந்த விநாடியிலிருந்து நான் என்னுடைய உத்தியோக மாற்றத்தைப் பற்றித் தைரியமடைந்ததோடு அவருடைய தெய்வீக பிரசன்னத்தை எப்பொழுதும் எனக்குப் பக்கத்தில் உணருகின்றேன்.

வேலை நெருக்கடிக் காரணமாக நீண்ட விடுமுறை கிடைக்காததால் நான் சிவானந்தாஸ்ரமத்திற்கு இரண்டாவது முறையாக ஆறு ஆண்டுகள் கழித்துச் சென்றேன். ரயிலிலும், பஸ்ஸிலுமாக 7 நாட்கள் பிரயாணம் செய்த பிறகு ஒருநாள் காலை ஆஸ்ரமத்தை வந்தடைந்தேன். சுவாமிஜி நீண்ட நாள் உடல் நலக் குறைவிற்குப் பிறகு ஒரு மாற்றத்திற்காக ரூர்க்கியில் சில நாள் தங்கியிருந்து விட்டு அடுத்தநாள் வருவார் என்றும் அப்பொழுதுதான் குருதேவரின் தரிசனம் கிடைக்குமென்றும் தெரிய வந்தது. நான் மிகவும் ஏமாற்றமும் சோர்வுமடைந்தேன். ஆகவே அவருடைய தரிசனத்தைப் பெறுமுன் குளிப்போ உணவோ கொள்வதில்லை என்ற தீர்மானத்துடன் குடீரில் உட்கார்ந்து கொண்டேன். கண்களிலிருந்து நீர் பெருகவே அதை என்னுடன் வந்திருந்த சகோதரியிடமிருந்து மறைக்கும் பொருட்டு கண்களை மூடிக் கொண்டேன். சில நிமிட நேரத்தில் குடீரில் மின்னலைப் போன்ற ஒரு பிரகாசமான ஒளி தோன்றியதையும் குருதேவர் என் முன் நின்றுகொண்டிருப்பதையும் நான் கண்டேன். நான் எழுந்து நின்று அவருடைய புனித பாதங்களில் வீழ்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துவிட்டு எழுந்து என்னுடைய சகோதரியைக் கூப்பிடுவதற்குள் அவர் மறைந்து விட்டார். நான் குடீருக்கு வெளியே

சென்று அவரைத் தேடினேன். என்னுடைய சகோதரியிடம் குருதேவர் குடீருக்குள்ளேயோ அல்லது குடீரிலிருந்து வெளியேயோ போவதைப் பார்த்தாளா என்று கேட்டேன். அவள் இல்லை என்று கூறினாள். அவர் அப்பொழுது ரூர்க்கியிலிருந்தார் என்பதும் அடுத்தநாள் காலையில்தான் ஆஸ்ரமத்திற்கு வந்தார் என்பதும் உண்மை. என்னுடைய குழந்தைப் பருவத்தில் நான் அதிசயங்களாக நினைத்த பெரிய மகான்களின் ரகசிய சக்திகளை இது போன்ற அனுபவங்கள் எனக்கு வெளிப்படுத்திக் காட்டின. நமது குருதேவர் இந்த யுகத்தில் சர்வ வியாபகமான கிருஷ்ண பரமாத்மாகவும், பகவத் கீதைக்கு ஒரு நடமாடும் விமரிசனமாகவும் விளங்குகின்றார். அவருடைய பாத கமலங்களுக்கு என்னுடைய பணிவான வணக்கங்கள். அவருடைய ஆசிகள் நம்மனைவருக்கும் எப்பொழுதும் கிடைப்பதாக!

## 19. நான் கண்ட குருநாதர்

(ஸ்ரீ உமாகாந்த், Pd. ஷுக்லா, கௌரவ மாஜிஸ்ட்ரேட், ஹாஜிபூர்)

நம்பாதவர்கள் சிரிக்கக்கூடும். ஆனால் அனுபவித்த ஸ்ரீமத் சுவாமி சிவானந்தஜி மகராஜ் அவர்களின் சில ஒப்பற்ற அற்புதங்களை இங்கு எவ்விதத் தயக்கமுமின்றிக் கூறுகின்றேன்.

1950 மே மாதம் என்னுடைய மூத்த சகோதரர் லக்ஷ்மிகாந்த் ஷுக்லா நோய்வாய்ப்பட்டுப் படுத்துவிட்டார். அவர் மூத்திரக்காய், மற்றும் சில சிக்கலான நோய்களினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார். ஒருநாள் அவருடைய நிலை மிகவும் மோசமாகி திடுக்

கிடும்படியாக ஆகிவிட்டது. அவர் மூர்ச்சையற்ற நிலையில் கிடந்தார். இங்குக் கிடைத்த மிகச் சிறந்த வைத்தியமெல்லாம் செய்தும் அவருடைய ஆவி பிரிந்து கொண்டிருந்தது. அவருடைய நிலை நம்பிக்கையற்றதாகி விட்டது என்று சொல்லப்படவே அவருடைய மதிப்பு மிக்க ஜீவனில் எங்களுக்கிருந்த நம்பிக்கையும் போய்விட்டது. நாங்கள் ஓவென்று அழ ஆரம்பித்து விட்டோம். அந்த நேரத்தில் நான் சுவாமிஜி மகராஜ் அவர்களை நினைந்து என்னுடைய சகோதரரின் உயிரைக் காப்பாற்றும்படிப் பிரார்த்தித்து கொண்டேன். அதிர்ஷ்ட வசமாக என்னுடைய பிரார்த்தனைக்குச் செவிசாய்க்கப்பட்டு, பாட்னு மருத்துவர் வருவதற்குள், சில மணி நேரத்தில் தமையனுருக்கு உணர்வு ஏற்பட்டது. இவ்வாறு ஸ்ரீமத் சுவாமிஜி அவர்களின் கருணையால் என்னுடைய சகோதரர் பூரண குணமடைந்தார். என்னுடைய தமையனுர் உணர்ச்சி பெற்ற பிறகு, சுவாமிஜி மகராஜ் அவருக்குப் பக்கத்தில் நின்று கொண்டு அவருடைய தலையின்மேல் கையை வைத்துக்கொண் டிருந்ததாகவும், இந்தத் தெளிவான கனவைக் கண்ட வுடன் புத்துணர்ச்சி பெற்று எழுந்து விட்டதாகவும் கூறினுர்.

1951 ஜுலை மாதத்தில் கேதார்—பத்ரி யாத்திரையிலிருந்து திரும்பி வரும்பொழுது நான் திரேந்திரநாத் ஷுக்லாவுடன் புனித ஆனந்த குடீரத்திற்குச் சென்றிருந்தேன். அப்பொழுது வீட்டுக் கவலைகளைப் பற்றியும், சிக்கலான பிரச்சினைகளைப் பற்றியும் குறிப்பிட்டு என்னுடைய வீட்டிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தைக் கண்டதும் நான் சுவாமிஜி மகராஜ் அவர்களை அணுகி அந்தக் கவலைகள் நீங்க அவருடைய ஆசிகளை வேண்டி நின்றேன்.

சுவாமிஜி மகாராஜ் வழக்கம்போல புன்னகை பூத்த முகத்துடன் என்னைக் கூப்பிட்டார். ஆனால் விஷயம் எதுவும் கூறவில்லை. ஆனால் ஒரு வாரம் கழித்து நான் வீடு போய்ச் சேர்ந்தபொழுது வீட்டிலிருந்தவர்கள், அவ்வளவு கவலையையும், தொந்தரவையும் கொடுத்த பிரச்சினைகள் சில நாட்களுக்கு முன்புதான் மறைந்து போய்விட்டன என்று கூறினர். இது எல்லாம் குருநாதரின் கருணை.

உண்மையில் எனக்கு ஏதாவது துன்பம் ஏற்படும் பொழுது, உடனே நான் சுவாமிஜி மகராஜ் அவர்களை அவருடைய ஆசிகளுக்காகவும், தெய்வீகத்திற்காகவும் பிரார்த்தித்தும் நான் அத்துன்பத்திலிருந்து விடுபடுகிறேன். ஆனால் நாம் சாதாரண உலக விஷயங்களை அவரிடம் பிரார்த்திக்க் கூடாது என்று இப்பொழுது எண்ணுகிறேன். அமைதி, சாந்தி, தெய்வீக உணர்வு, கடவுள் பக்தி, குருபக்தி ஆகியவைகளுக்காத்தான் பிரார்த்திக்க வேண்டும்.

பொழுது, உடனே நான் சுவாமிஜி மகராஜ் அவர்களை அவருடைய ஆசிகளுக்காகவும், தெய்வீகத்திற் காகவும் பிரார்த்தித்ததும் நான் அத்துன்பத்திலிருந்து விடுபடுகிறேன். ஆனல் நாம் சாதாரண உலக விஷயங்களை அவரிடம் பிரார்த்திக்கக் கூடாது என்று இப்பொழுது எண்ணுகிறேன். அமைதி, சாந்தி, தெய்வீக உணர்வு, கடவுள் பக்தி, குருபக்தி ஆகியவைகளுக்காகத்தான் பிரார்த்திக்க வேண்டும். அவைகளை அடைந்து விட்டால் மேற்கொண்டு எதுவும் தேவையில்லை. பொதுவாக உலகை உய்விக் கவும், குறிப்பாக அவருடைய பக்தர்களுக்கு வழி காட்டி நல் ஆசிகளை வழங்கவும் அவர் நீடூழி வாழ் வாராக.

## 20. சிவா ஜெனிவாவில் தோன்றினர்

(ஸ்ரீ சிவானந்த மார்கரிட்டா)

என்னுடைய இதயம் தங்களால் நிரப்பப்பட்டுள்ளது. தங்களுடைய அன்பினுல் என்னுடைய ஆனந்தம் கரைபுரண்டோடுகிறது. நான் பேரானந்த வெள்ளத்திலே திளைத்திருக்கின்றேன்.

அற்புதங்கள் இன்னும் நிகழ்கின்றன. தாங்கள் அற்புதங்களுக்கெல்லாம் அற்புதமாக விளங்குகின்றீர்கள். எங்களை மகிழ்விப்பது எப்படியென்பது தங்களுக்குத் தெரியும். சந்தோஷமும் என்னிடத்தே ஊடுருவிப் பாய்ந்திருக்கின்றது. தங்களுடைய ஆசிகளின் காரணமாக நான் யோகத் தன்மையை உணருகின்றேன். எங்கும் ஒளி மயமாக இருக்கிறது.

ஆகா, எப்பேர்ப்பட்ட ஆனந்தமும், ஒளி விளக்கமும் பெற்ற கிறிஸ்துமஸ் பண்டிகையாக இருக்கிறது! இதற்கு முன்பு ஒருபொழுதும் இப்படி இருந்ததில்லை. தங்களுடைய நெருங்கிய தொடர்பு அப்பொழுது இருந்தது. தங்களோடு ஒருமைப்பாடு காணப்பட்டது.

24ந் தேதி மாலையிலே ஒரு கடிதம், கிறிஸ்துமஸ தினத்தன்று காலையிலே இமாலயத்திலிருந்து ஒரு தெய்வீகத் தந்தி, மாலையில் ஒரு கடிதம், மறுபடியும் அடுத்தநாள் தங்கள் அழகிய புகைப்படங்கள் அடங்கிய மற்ருெரு கடிதம்—இவைகள் எல்லாம் அதிசயத்திற்குமேல் அதிசயமாகத் தோன்றின.

இந்தக் கிறிஸ்துமஸ் நன்ஞளிலே வேறு யாரும் இவ்வளவு ஆசிகளைப் பெற்றிருக்க மாட்டார்கள். ஐரோப்பாவில் மிகப் பெரிய நெருக்கடியும் யுத்த அபாயமும் ஏற்பட்டிருந்தபொழுது தக்க சமயத்தில்

தங்களுடைய ஒளி மையம் உண்மையாகவே இங்கு இருந்தது. தங்களுடைய கிறிஸ்துமஸ் நற்செய்தி எல்லா நாடுகளுக்கும் அனுப்பப்பட்டு, யூதத் தொண்டர்களாலும், பிரம்ம ஞானிகளாலும் (Theosophists) வினியோகிக்கப்பட்டது. இது அதிசயமல்லவா? பிரம்மஞானிகள் என்னைப் பார்த்து, "நீங்கள் பெஸன்ட் அம்மையார்" என்று கூறினர். இது என்னை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. மற்றவர்கள் தங்களைப் பற்றி ஒரு பிரசங்கம் செய்யச் சொன்னார்கள்.

மாதாகோவிலில் நடந்த நள்ளிரவுப் பிரார்த்தனைக் கூட்டத்தின்போது நான் கண்டது பிரமை அல்ல. ஆனால் பிரத்தியக்ஷமாகத் தாங்கள் பலிபீடத்தின்மீது சிலுவைக்கு முன் அழகே வடிவாக, ஜோதி மயமாகக் குழந்தை போன்ற தூய்மையுடன் வீற்றிருப்பதைக் கண்ணுற்றேன். தியானத்திற்கான ஒரு அவசியத்தை நான் உணர்ந்தேன்.

தற்பொழுது நான் உடல் நலக் குறைவாகப் படுக்கையிலிருந்து கொண்டு இதை எழுதுகிறேன். தங்களுடைய பிரார்த்தனைகள் என்னைக் காப்பாற்றின. எனக்காகத் தாங்கள் பிரார்த்தனைகள் நடத்தும் பொழுது அதன் பலன்கள் அபாரமானவைகளாக இருக்கின்றன.

## 21. சிவானந்தர் எவ்வாறு என்முன் தோன்றினர்

(ஸ்ரீ லக்ஷ்மிகுமாரி, பெட்டையா).

இன்று காலை 8 மணி அளவில் வழிபாட்டு ஸ்தலத்தில், இன்றுமுதல் ஆரம்பமாகும் சுவாமிஜியின் அகில இந்திய யாத்திரையைப்பற்றிய எண்ணம் என்னுடைய

உள்ளத்தில் திடீரென்று உதித்தது. சுவாமிஜி எவ்வாறு தன்னுடைய மண்டலி (பரிவாரங்கள்) புடைசூழ பவனி வருவார் என்றும், நான் அந்தச் சந்தர்ப்பத்தில் அங்கு இருக்க முடியாமல் போனது எவ்வளவு துரதிருஷ்டவசமானது என்றும் கற்பனை செய்யத் தொடங்கினேன். நான் வடக்குத் திக்கை நோக்கிய வண்ணம் இந்தச் சிந்தனையில் ஆழ்ந்து மூழ்கியிருக்கும் பொழுது, திடீரென்று யாரோ மேற்குப் பக்கத்திலிருந்து மேற்குத் திக்கை நோக்கியவண்ணம் என்னிடம் வருவதைப் போல் உணர்ந்தேன். ஒரு அற்புதமான காட்சி என் முன் தோன்றியது. சுவாமிஜி மெதுவாக வந்து என் முன் நின்றார். ஆனந்தப் பரவசத்தினால் என்னால் பேசுவதற்குக்கூட முடியவில்லை. என்னைப் போன்ற ஒரு தகுதியற்ற ஜந்துவிடமிருந்து பூஜையை ஏற்றுக் கொள்வதற்காக சுவாமிஜி வருவார் என்று நான் ஒரு பொழுதும் நினைக்கவே இல்லை.

அதற்கு அடுத்தபடியாக ஒரு விசித்திரமான சம்பவம் நிகழ்ந்தது. பூஜைக்காக நான் தலைவணங்கிய பொழுது அவருடைய உருவம் மாறி கிருஷ்ண பரமாத்மா வடிவமாக ஆயிற்று. நான் சுவாமிஜியினுடைய புனித பாதகமலங்களுக்கு அபிஷேகம் செய்தேன். சுவாமிஜியின் தரிசனம் கிட்டிய காரணத்தால் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தோடியது. என்னுடைய தீவிரமான ஆசை எனக்கு ஒரு பெரும் ஆசியாக ஆயிற்று. நான் அவருடைய சரணாமிர்தத்தை என்னுடைய் குடும்பத்தார் எல்லோருக்கும் பகிர்ந்து கொடுத்துவிட்டு இன்னும் கூடச் சிறிதளவை பத்திரமாக வைத்திருக்கின்றேன்.

சுவாமிஜியினுடைய உபதேசங்களை முறையாகக் கடைபிடித்து வந்த காரணத்தினுல்தான் இவைகள் எல்லாம் ஏற்பட்டன. சுவாமிஜியினுடைய நல்லுபதேசங்களைப் பின்பற்றி வந்தால் பாவிகளும் துஷ்டர்களும் மோக்ஷத்தை அடைந்து துன்பங்களிலிருந்து விடுதலை பெற்றுவிடலாம்.

## 22. குரு எங்கும் நிறைந்த கடவுள்

(ஸ்ரீ சிவானந்த சாரதா, ஜெர்மனி).

என்னுடைய அறையில் எங்கிருந்தோ ஒரு அசரீரி கேட்டது. அந்த அனுபவம் பாரத நாட்டு இமாலயத்தின் மகா யோகியோடு தொடர்புகொள்ள வைத்தது. இதுமட்டுமல்ல.

ஏனெனில் 1951 ம் ஆண்டு கிருஸ்துமஸ் சமயத்தில், யோகி சிவானந்தர் அவருடைய காட்சியாகிய அபூர்வ அனுபவத்தை எனக்குத்தந்தருளினர். நான் எழுதிக் கொண்டிருக்கும் மேசைக்கு எதிராக இருக்கும் அவருடைய படத்தைக் காண்பதைப்போல அவ்வளவு தெளிவாக, ஜீவ களையோடு, உணரத்தக்க அளவில் கண்ணுரக் கண்டேன். இந்தச் சம்பவம் நிகழ்ந்து பதினைந்து நாட்கள் கூடக் கழிவதற்குள் இமாலயயோகியினுடைய யோக வேதாந்த ஆரண்ய வித்யாலயத்திலிருந்து வந்து ஒரு உறையை என்னுடைய கணவர் கொண்டு வந்து கொடுத்தார்.

அந்த உறையில் சுவாமிஜி அவர்கள் கையெழுத்திடப்பட்ட ஒரு சிறு புகைப்படம் வந்திருந்தது. இந்தப் படம் என்னுடைய வாழ்க்கையின் துணையாக ஆகிவிட்டது. நான் எங்கு, எப்பொழுது சென்றுலும் அது என்னைவிட்டு இணைபிரிவது இல்லை. சுவாஜியிடம்

என்னுடைய தொடர்பானது நான் அந்த யோகியிடம் கொண்டுள்ள கடிதத் தொடர்பைப் போல் உள்ளத்தள விலும் ஆன்மா அளவிலும் பலப்பட்டு விட்டது. சுவாமிஜியிடம் எனக்குள்ள ஆர்வம் வளர்ந்து வலு வடைந்து விட்டது. எண்ணத்திலும் ஆன்மாவிலும் நான் குரு நாதரின் தெய்வீகப் பிரசன்னத்தோடு ஐக்கியமாகி இருப்பதை எங்கு பார்த்தாலும் உணரு கின்றேன். ஏனெனில் பூர்த்தியாக மூன்று ஆண்டு கள், நான் பாரதத்திலுள்ள அவருடைய புனித ஆஸ்ரமத்திற்குச் செல்லப்பட்டு, அவரை இரத்தமும் சதையும் சேர்ந்த ஸ்தூல சரீரத்தோடு தரிசிக்கும் வரையிலும், 5000 மைல்களுக்கப்பாலிருந்து கண் காணுத வகையில் பயிற்சியளிக்கப் பட்டிருக்கின்றேன்.

ஆஸ்ரமத்தில் நான் வீட்டிலிருப்பதைப் போன்றே உணர்ந்தேன். நான் சுவாமிஜியினுடைய ஸ்தூல உருவத்திற்கு முன் இருந்தாலும், இல்லாவிட்டாலும் குருநாதரின் தெய்வீக பிரசன்னத்தோடு நான் எப் பொழுதும் தொடர்பு கொண்டிருந்தேன். ஏனெனில் குருநாதர் எனக்கு எங்கும் நிறைந்த பொருளாக இருக் கிருர். ஆஸ்ரமத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் அவருடைய தெய்வீக பிரசன்னத்தை வலிமையுடன் எடுத்துரைத்தன. கங்கையின் தெளிந்த நீரிலே, ஆஸ்ரமத்தைச் சூழ்ந்துள்ள கெம்பீரமான மலைகளிலே குருநாதரை வழிபட்டு அவரிடமிருந்து புதுவாழ்வைப் பெற்றுப் போக வந்திருந்த பலரகமான அன்பர்களிடத் திலே நான் சிவானந்தரைக் கண்டேன்.

நான் உள்பட ஆஸ்ரமத்தில் இருந்த ஒவ்வொரு வரும் சந்தோஷமாக இருந்தோம். நான் குருநாதருக்கு மிக நெருங்கி உட்கார்ந்து கொண்டு அவர் பார்ப் பவர்களுக்கு ஒரே சமயத்தில் பல வேலைகளில் ஈடு

பட்டுக் கொண்டிருப்பதைப் போலத் தோன்றினாலும்,
பரவசமான தியான நிலையில் அவர் எவ்வளவு ஆழ்ந்து
ஈடுபட்டிருக்கின்றார் என்பதைக் கவனிப்பது வழக்கம்.
அவருடைய கண்களிலிருந்தும், காதுகளிலிருந்தும்,
கைகளிலிருந்தும் எதுவும் தப்புவது இல்லை. இருப்
பினும் அவர் தன்னுடைய சொந்த அந்தரங்க ஆன்
மாவில் சிவானந்தருடைய ணிக்குக் பிரத்தியட்சமாக
காணலாம். இந்தத் தெய்வீக குருநாதரிடமிருந்து
நான் பெற்ற சொந்த அனுபவங்கள் இவரை ஒரு
மாமுனிவர், ஒரு யோகி, ஒரு ஞானி கலியுக தீர்க்க
தரிசி என்று நிரூபித்துக் காட்டிவிட்டன.

குருநாதருடைய ஸ்தூல பிரசன்னமானது அவ
ருடைய கண்ணுக்குப் புலப்படாத பிரசன்னத்தைப்
போல அவ்வளவு அற்புதமானது. குருநாதர் என்னி
டத்தே சந்தோஷத்தையும், சாந்தியையும் கொட்டி
நிரப்பிவிட்டார். நான் சந்தோஷமாக இருப்பதற்குக்
காரணம், நான் என்னுடைய குருநாதரால் உண்மை
யான சந்தோஷ ஞானத்தைப் பெற்றிருப்பதுதான்.
சிவானந்தர் ஜகத்குருவாக விளங்குபவர். அவரை
ஒவ்வொருவரும் அண்டி அவரை வழிபடுகின்றனர்.

சிவானந்தருடைய சீடர்களோடும் பக்தர்
களோடும் தொடர்பு கொள்வது எனக்கு ஒரு வற்றாத
ஆனந்தத்தைக் கொடுத்தது. இந்த மஹா யோகியி
னுடைய சீடர்களில் யாரும் குருநாதரின் மிக உன்னத
மான ஆசிகளையும், கருணையையும் நூற்றுக்கான வழி
களில் பெறாமல் இருப்பதில்லை. இரவு சத்சங்கத்தில்
குருநாதரின் உதவி எங்களுக்கு எப்படியோ கிடைத்து
விடுகிறது அவருடைய தெய்வீக தரிசனம் எங்களை
எப்பொழுதும் பாதுகாத்து வழிகாட்டுகின்றது. சுவாமி
சிவானந்தரைப் போன்ற ஒரு குரு எப்பொழுதும்
அவருடைய சீடர்கள் எங்கிருந்தாலும் அவர்களோடு

இருக்கின்றார் என்று நான் உறுதியாகக் கூறுகின்றேன் குருநாதருக்கு என்ன தேவை என்றால் நாம் அவரோடு எண்ணம், ஆன்மா ஆகியவைகளின் மூலம் வைத்துள்ள தொடர்புதான். குருநாதருடைய சீடர் ஒருவர் செய்ய வேண்டியதெல்லாம் என்ன வென்றால் அவர் தன்னுடைய அகங்காரத்தன்மையை ஒதுக்கி வைத்து விட்டு குருநாதரின் கருணையை ஏற்றுக் கொள்ளத் தகுதி பெற்றிருக்க வேண்டியதுதான். சீடர்களைப் பரிசோதிப்பதற்கு குருநாதர் தனக்கே உரித்தான விசேஷ வழிகளைக் கையாளுகின்றார். ஆஸ்ரமத்தில் உள்ள ஒவ்வொரு சீடரும் குருநாதரிடத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். அவர்கள் தங்களை குருநாதரிடம் பூரணமாக அர்ப்பணித்திருக்கின்றனர். யோகியும், ஞானியுமான சிவானந்தர் எனக்கு எப்பொழுதும் வழிகாட்டிக் கொண்டிருப்பார். ரிஷிகேசத்திலுள்ள குருநாதரின் ஆஸ்ரமம் என்னுடைய அந்தரங்க உலகமாக ஆகிவிட்டது. அது எனக்கு ஆன்மீக உணவையும், இருப்பிடத்தையும் கொடுக்கிறது. தெய்வீக குருநாதர் எல்லோரையும் ஒளிவிளக்கம் பெறச்செய்து ஆசீர்வதிப்பாராக.

## 23. சிவா ஒரு காட்சியில் தோன்றினார்

(ஒரு ஜெர்மன் அம்மையாரின் ஆன்மீக அனுபவங்கள்)

பாரத நாட்டின் பண்டைய யோகிகள் தங்கள் விருப்பம்போல் சஞ்சரித்து வந்த ஸ்தூல சரீரத்திற்கு மேம்பட்ட நிலையை இன்று ஆகாய விமானமும் வானொலியும், டெலிவிஷனும் மிகச் சமீபத்தில் கொண்டுவந்து விட்டன. ஆகாயத்தில் பறப்பதற்கும், ஆகாயத்திலுள்ள ஒலி, அல்லது ஒளி அலைகளைக்

கிரகிப்பதற்கும், உதவியாக இருக்கின்ற அந்தச் சிக்கலான இயந்திரங்கள் அவர்களைப் பொருத்த மட்டில் அவர்களுக்குள்ளேயே இருந்திருக்கின்றன.

பண்டைக்காலத்தில் மகா யோகிகள் அற்புதங்களைச் செய்ய முடிந்திருக்கிறது என்று அவர்களுடைய வாழ்க்கையிலிருந்து நாம் அடிக்கடி படித்திருக்கின்றோம். பகவான் இயேசுநாதருடைய வாழ்க்கையில் மனிதர்களால் செய்ய முடியாது என்று கருதப்பட்டவைகளை அவரால் செய்ய முடிந்தது என்று நாம் படிக்கின்றோம். (அவருடைய பிறந்த தினத்தைச் சென்ற வாரம் நாங்கள் கொண்டாடினோம்).

இது ஒரு பட்டிக்காட்டுப் பேதையின் கட்டுக் கதையோ குருட்டு நம்பிக்கையோ அல்ல. ஆனால் மனிதனிடமுள்ள ஜீவ சக்தியையும், மனத்தையும் அந்தரங்க முறையிலே பயிற்றுவிப்பதின் மூலம் அவன் இம்மாதிரி பஞ்ச பூதங்களையும் அடக்கியாள முடியும் என்பதும், அவனால், அணுகுண்டு, ராக்கட், டெலிவிஷன் ஆகியவைகளின் இயந்திர நுட்பங்களை நன்கறிந்திருக்கும் விஞ்ஞானியையும் திகைக்க வைக்கக் கூடிய தோற்றங்களை ஏற்படுத்த முடியும் என்பதும், இன்றும் உண்மையாக இருக்கிறது. ப்ரா சார்லட் வாலின்ஸ்கி ஹெல்லர் (Frau charlotte walinski-Heller) கண்ட விசித்திரக் காட்சியும், அவர் கேட்ட அசரீரியும் இந்தப் புராதன உண்மையை மறுபடியும் முன்னணிக்குக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கின்றன.

ஒரு பேட்டியின் போது பத்திரிகை நிருபர்கள் ப்ராவாலின்ஸ்கி அம்மையாரிடம் பலவிதமான திணற வைக்கும் கேள்விகளைக் கேட்டபொழுது அவர் மகா யோகி சுவாமி சிவானந்தரை 1951-ம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று மாலையில் ஒரு தெளிவான காட்சியில் கண்டதாகப் பிரகடனப் படுத்தினார். அவர்

அனுபவித்த அந்தப் பரவச அனுபவத்தை அவர் இன்னும் ஞாபக படுத்திப் பார்க்கும்பொழுது அவருடைய அகத்திலே தோன்றுகின்ற உவப்பும், மரியாதையும் முகத்திலே தெற்றென விளங்குகின்றன. அவருடைய முகம் அப்பொழுது ஆனந்த ஒளியை வீசி அந்த மகா அனுபவத்தை எடுத்து வர்ணித்துக் காட்டுகிறது. இந்த ஞானுனுபவம் தான் அவருடைய வாழ்க்கையிலேயே ஒரு பெரும் புரட்சியை ஏற்படுத்தி தெய்வீக வாழ்க்கைக்காக தனது வாழ்வையே அர்ப்பணிக்கும்படி செய்திருககின்றது.

அந்த அம்மையார் மேல் நாட்டு முறையிலே வளர்க்கப்பட்டுக் கல்வியளிக்கப்பட்டிருந்த போதிலும் அவர் இவ்வாறு தன்னுடைய வாழ்க்கையையே புரட்சிகரமாக மாற்றுவித்த இந்த யோகியானவர்; கடவுளைப் பற்றியும் கடவுளின் அவதாரங்களைப் பற்றியும் தற்பொழுது நிலவி வருகின்ற கருத்துக்களுக்கு மாறுபடுகின்ற நிலையில், கடவுளாகவே இல்லாவிடினும் கடவுளின் மிக நெருங்கிய அவதார புருஷர் என்கின்ற தன்னுடைய நம்பிக்கையில் உறுதி உடையவராகவும் இருக்கின்ருர்.

ஃப்ரா வாலின்ஸ்கி தன்னுடைய ஐம்பது ஆண்டு கால வாழ்க்கை முழுதும் பக்தியுடன் கூடிய சாதாரண கத்தோலிக்க வாழ்வு வாழ்ந்து வந்த நல்ல கல்வி அறிவுடைய ஜெர்மன் மாது. மனுேதத்துவ ரீதியிலே கவரப்பட முடியாத அளவிற்கு அவர் அறிவுத்திண்மையைப் பெற்றிருப்பவர். அவர் அற்புதமான வியாபார நுட்பமறிந்தவர். அவர் ஒரு புத்தக வெளியீட்டு நிலையத்தில் நிர்வாகியாக வேலைபார்த்துவந்தார் அவருடைய கணவஞர் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் அவர்களுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தனர். குழந்தைகளும் பெற்ருேரின் பக்தியைப் பெற்றிருந்தனர்.

கடந்த சில ஆண்டுகளாக அப்பிள்ளைகள் தங்களுடைய தாயாரின் ஆன்மீக அனுபவங்களினால் மிகவும் கவரப் பட்டிருக்கின்றனர். அவர்களுடைய பிள்ளைகளில் ஒருவர் அந்த அம்மையார் இந்தியா புறப்பட்டுச் சென்றபிறகு சுவாமி சிவானந்தஜி அவர்களுக்குத் தன்னை குருதேவரின் சந்நியாசி சீடனாக ஏற்றுக் கொள்ளும்படிக் கேட்டு எழுதியிருக்கின்றார். ஃப்ரா வாலின்ஸ்கி கூறுவது போல பெரிய ஆன்மீக குழந்தையான இளைய மகனுக்கு நான் சிவாவிடமிருந்து பெற்ற செய்திகள் அனைத்தும் நன்றாகத் தெரியும்.

கடந்த சில ஆண்டுகளாக இந்தப் பக்திக் குடும்ப மானது அவர்களுடைய தினசரி வாழ்க்கையில் குரு தேவரின் மூலம் அதிசயமான வழியில் பிரத்தியட்சமாக வழிகாட்டப்பட்டு வருகின்றது. "ஒவ்வொரு நாள் காலையிலும் சிவா என்னை எழுப்புகிறார்" என்று கூறுகிறார் ஸ்ரீமதி வாலின்ஸ்கி. "அவர் எங்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட பல பிரச்சினைகளைத் தீர்த் திருக்கின்றார். அவர் என்மூலம் வேலைசெய்து மானிட வர்க்கத்திற்குத் தொண்டுபுரிய உதவுவார் என்று நான் உறுதியாக இருக்கின்றேன்" என்று அவர் கூறு கின்றார். அவர் கேட்கின்ற அசரீரியை உறுதிபடுத்து கின்றவகையில் வருகின்ற குருதேவருடைய சொந்தக் கடிதங்கள் அவரை வேலை செய்து கொண்டே இருக்கு மாறு தவறாது தூண்டிவந்தது என்கின்ற உண்மை இங்கு முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது. "வீட்டிலே மனைவியாகவும், தாயாகவும் வேலை செய்யுங்கள். அலுவலகத்தில் உங்களுடைய கடமையைச் செய்வ தோடு உங்களால் முடிந்தவரை மக்களுக்கும் தொண்டு செய்யுங்கள்" என்பது தவறாத ஆணையாக இருந்து வருகிறது. ஃப்ரா அந்த ஆணைக்கு அப்படியே கீழ்ப் படிந்து பகல் முழுதும் வீட்டிலும் அலுவலகத்திலும்

வேலை செய்துவிட்டு இரவில் நெடுநேரம் வரை தன்னுடைய புத்தகங்களை எழுதுவதிலும், குருதேவருடைய நூல்களை ஜெர்மன் பர்ஷையில் மொழி பெயர்ப்பதிலும் ஈடுபட்டிருப்பார்.

இந்த ஆண்டு ஆகஸ்ட் மாதம் அவருக்கு ஏற்பட்ட ஒரு காட்சியில் குருதேவர் அவரைப்பார்த்து "நீங்கள் ஒரு நல்ல சிஷ்யையாக இருப்பீர்களா?" என்று கேட்டபொழுது அதற்கு அவர் "இருப்பேன்" என்று பதில் கொடுத்திருக்கிறார். பிறகு அந்த வாக்கு அவரை இந்தியாவிற்கு வரும்படி ஆணையிட்டது. ஆகஸ்ட் 7-ந் தேதி அவர் அக்காட்சியைக் கண்டார். செப்டெம்பர் 19-ந் தேதி குருதேவருடைய கடிதம் வந்தது அக்கடிதத்திலிருந்த விஷயம் முழுவதும் அவருக்கு முன்கூட்டியே தெரிந்திருந்தது. அவர் காணுகின்ற காட்சிகளும், அந்த 'அசரீரி'யிடமிருந்து தனக்கு வருகின்ற செய்திகளும் முற்றிலும் உண்மை என்பதை அவர் ஐயந்திரிபற உணர்ந்தார். தியான நேரத்தின் போது அவருடைய உள்ளத்தில் மானிட வர்க்கம் ஒரே குடும்பம் என்றும், உலகமனைத்தும் ஒரு பரமாத்மாவிடத்தில் பின்னப்பட்டிருக்கிறது என்றும், ஆன்மீக எழுச்சி பெற்றவர்கள் தங்களுக்குள் ஒருவரோடு ஒருவர் கண்டங்களுக்கிடையில், அருகருகே உள்ள இரண்டு அறைகளிலிருந்து மக்கள் பேசிக் கொள்வதைப் போல அவ்வளவு சுலபமாகப் பேசிக்கொள்ள முடியும் என்றும் ஒரு அந்தரங்க உணர்ச்சி எழுவதுண்டு. இவ்வாறு அவர் இந்தியாவிற்குப் புறப்படுவது என்று தீர்மானித்த பொழுது வழிச் செலவிற்கு வேண்டிய பொருள் வசதி, கணவனுடைய மனநிலை ஆகிய இரண்டு பிரச்சினைகள் எழுந்தன, "சிவா எல்லாம் சரியாகிவிடும் என்று கூறினர்" என்று ஸ்ரீமதி வாஸின்ஸ்கி கூறுகிறார். சில

நாட்களில் ஒரு நல்ல நண்பர் வழிப்பயணத்திற்கு வேண்டிய தொகையைத் தான் ஏற்றுக் கொள்வதாகக் கூறினர். என்னுடைய கணவர் என்னுடைய ஆன்மீக ஆவலைத் தீர்த்துவைக்க அவராகவே முன்வந்து வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தார். அதன் பயனக இப்பொழுது அவர் இந்தியாவில் குருதேவரின் பாதகமலங்களில் தங்கியிருக்கின்றனர்.

அவர் வந்தவுடனே குருதேவர் அவருக்கு மந்திர தீக்ஷை கொடுத்து அருளினர். அவர் ஆஸ்ரமத்தில் நடக்கின்ற எல்லா சத்சங்கத்திற்கும் சென்று வருகின்றனர். அவர் இந்தியா முறைப்படி குருதேவரின் பாதங்களுக்கருகில் அமருவதற்குத்தான் விரும்புகின்றனர். நாற்காலியில் அமர்வதற்கு மறுத்துவிடுகின்றனர். ஆஸ்ரமத்தை அடைந்த மறுநாளிலிருந்தே அவர் புடவை உடுத்திக் கொண்டார். இந்த மாற்றத்தை அவர் அவ்வளவு எளிதாகச் செய்ததைப் பார்க்கும் பொழுது முற்பிறப்பில் அவர் ஒரு இந்தியப் பெண்மணியாக இருந்திருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது; அப்பொழுதும் ஒருவேளை குருதேவரின் சிஷ்யையாக இருந்திருக்கலாம்.

ஃப்ரா்வாலின்ஸ்கி 'ஆன்மாவுக்குப் புனித தினம்' (Holy Day for the Soul) என்கின்ற ஐந்து நூல்களுக்கு ஆசிரியராக இருக்கின்றனர். ஜெர்மன் மொழியிலே உள்ள அவற்றை ஒரு ஜெர்மன் புத்தக வெளியீட்டுக்காரர் வெளியிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

## 14. ஒரு பரவசமூட்டும் காட்சி

### (ஸ்ரீ இர்ம்கார்ட் கௌபிஷ் வான் ஹெப்பெர்ட்)

மூன்று நாட்களுக்கு முன் என் தியானத்திற்குப் பின் இம்மாதிரி ஒரு காட்சி ஏற்பட்டது.

ஒரு ஏகாந்தமான மலையடிவாரத்தில் நான் சுவாமி சிவானந்தரைச் சந்தித்தேன். அது இலையுதிர் காலம் போலத் தோன்றியது. அவரைச் சுற்றி ஏழு சுவாமிகள் அமர்ந்திருந்தனர். மையத்தில் ஒரு கண்ணாடி இருந்தது அதன்மீது அசைந்தாடிக் கொண்டிருந்த தீபம் ஒன்று இருந்தது. சுவாமி சிவானந்தர் அத்தீப் பிழம்பினுள் நுழைந்தார். பிறகு அச்சுடர் தண்ணீராக மாறியது. நான் ஒரு பெரிய தடாகத்திற்குள் வலப்புறமிருந்து இடப்புறமாகச் சுற்றிச் சுற்றி நீந்திக் கொண்டிருப்பதைக் கண்டேன்.

பிறகு சுவாமி சிவானந்தரைத் தொடர்ந்து மற்ருெரு குகைக்குள் சென்றேன். அங்குப் பன்னிரண்டு சந்நியாசிகள் தியானத்தில் இருக்கக் கண்டேன் சுவாமி சிவானந்தர் இந்த வட்டத்தினுள் நுழைந்தார், நடுவில் நின்று கொண்டு கைகளை உயர்த்திய வண்ணம் அவர் "இவ்வாறு நாம் ஒன்று சேருகின்ருேம். இதனுல் நாம் ஐக்கியத்தை மறுபடியும் உணர முடியும்" என்று கூறினுர். இது ஒரு உன்னதமான செய்கை என்று நான் உணர்ந்தேன். பிறகு நாங்கள் மறுபடியும் அந்த மலையடிவாரத்தில் இருந்தோம்.

சுவாமி சிவானந்தர் எப்பொழுதும் என்னிடம் மூலிகை மணம் கமழ வந்தார். அவர் என்னிடம் இரண்டு நுனிகளும் சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய ஒரு தடியைக் கொடுத்து "இதைச் சரியான முறையில் பயன்படுத்த வேண்டும்" என்று கூறி மறைந்தார்.

அரசியல் நெருக்கடியான துரிதமாக சிக்கலை ஏற்படுத்தி வருகின்றது. நாங்கள் இந்திய நாட்டு மாதிரியில் அஹிம்ஸா வாதிகளைக் கொண்டதொரு கட்சியை ஏற்படுத்த விரும்புகின்ருேம். இதற்காக எங்களுக்கு சுவாமி சிவானந்தரின் ஆலோசனைகளும்

உபதேசங்களும் தேவை. நாங்கள் அவருடைய ஆஸ்ரமத்தில் தேவையான ஒழுங்கையும், பயிற்சி யையும் பெறவேண்டும்.

## 25. வாழ்க்கையை மாற்றும் சுவாமிஜியின் அற்புதங்கள்

(சுவாமி அம்பிகானந்தா)

முனிவர்களின் அந்தரங்க நடவடிக்கைகளை அறிவது என்பது கடினம். அவர்கள் பார்ப்பதற்கு அமைதியாகவும், எளிமையாகவும் இருந்தபோதிலும் அவர்களிடம் ஒரு சிறிது நம்பிக்கை வைத்து அவர் களுடைய உதவியை நாடி ஆறுதல் வேண்டு வோருடைய வாழ்க்கைகளை மாற்றி யமைப்பதில் அற்புதங்களைப் புரிகின்றனர். அதை ஒரு பொழுதும் அனுபவித்திராவர்கள் நம்பமாட்டார்கள். ஆனால் உண்மையில் முனிவர்களால் செய்யப்படுகின்ற அற்புதங்கள், சாதாரண சித்தி விளையாட்டுக்காரர் களின் சித்திகள் என்று சொல்லப்படுபவைகளைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு பெரிதாகும்.

நான் ஏற்கனவே என்னுடைய குருநாதரை என்னுடைய தந்தையாகவும், தாயாகவும் பாவித்து வருகின்றேன். ஆனால் வாழ்க்கையே மாற்றுகின்ற அவருடைய நடவடிக்கைகளைப் பற்றியும், அவருடைய இனிய அமைதியான கருணையைப் பற்றியும் நான் அவ்வளவு அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை. என் னுடைய சுவாமி சிவானந்தரின் ஆதரவு நிறைந்த செல்வாக்கைப் பற்றி என்னுடைய மகனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்த பொழுது நான் உண்மையி லேயே ஆச்சரியத்தால் ஸ்தம்பித்துப் போய்

விட்டேன். என்னுடைய மகன், சுவாமிஜியிடமிருந்து சில புத்தகங்களையும், சஞ்சிகைகளையும் பெற்ற பொழுது அவன் இந்த உலக சிந்தனையையே மறந்து அலுவலகத்திற்குச் செல்வதற்கே மறந்து போய்விட்ட அளவிற்கு அவைகளால் கவரப்பட்டு விட்டதாக எழுதுகிருன். அவன் சுவாமிஜியின் பால் அதிகம் கவரப்பட்டு அவருடைய நல்லாசியைப் பெறுவதற் காக அவருடைய தரிசனத்தை வேண்டி அங்கு வர விரும்புகின்ருன். இதற்கு முன் எந்தவிதமான ஆன்மீக புத்தகங்களைப் படிப்பதற்கோ ஒரு முனிவ ரோடு தொடர்பு கொள்வதற்கோ சந்தர்ப்பம் கிடைக்காத என்னுடைய மகனுக்கு இப்பொழுது என்னுடைய குருநாதரின் கருணையினல் அவனுடைய நோக்கத்திலும் போக்கிலும் திடீர் மாற்றம் ஏற்பட் டிருக்கிறது.

ஸ்ரீ சுவாமிஜிக்கு ஜே! இதைவிட அற்புதமான மற்ருெரு சம்பவம் என்னுடைய இளைய சகோதரி விஷயத்தில் ஏற்பட்டிருக்கிறது. அவளுடைய மகன் கடும் நோய்வாய்ப்பட்டு பிழைக்கக்கூடிய நம்பிக்கை இல்லாத நிலையில் இருந்தான். மருத்துவர்களிடம் வைத்திருந்த எல்லா நம்பிக்கையையும் இழந்தவளாய் கடைசியில் சுவாமிஜியின் கருணையையும் உதவியை யும் நாடினுள். சுவாமிஜியிடம் இருந்த நம்பிக்கை உறுதிபட்டது. தன்னுடைய பிள்ளையின் உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்று அவரிடமே வேண்டிக் கொண்டாள். என்ன ஆச்சரியம்! அற்புதமான வகையில் அவன் குணமடைந்து மறுபடி தொடர்ந்து பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிருன். இவ்வாறு அவள் மிகவும் சந்தோஷமாக இருப்பதுடன் சுவாமிஜி அவளுக்குச் செய்த உதவிகளுக்காக அவள் பெரிதும்

நன்றி செலுத்துவதை வார்த்தையால் வர்ணிக்க முடியாது.

இந்தச் சம்பவங்கள் மிக அண்மையில்தான் நடந்தன. கடவுளின் வடிவமாகவே திகழுகின்ற நமது தெய்வீக குருநாதரின் அதிசயமான கருணையை நாம் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்வோமாக.

குருநாதருக்கு ஜே !

## 26. சவனப்பிராஷ் அற்புதம்

(ஸ்ரீ N. ஸ்ரீனிவாசன், சென்னை)

1955 செப்டம்பர் மாதம் 25ந் தேதி வாக்கில் குருதேவருடைய பிரசாதமாக இரண்டு சவனப்பிராஷ் டின்கள் எனக்கு வந்தன. என்னுடைய உடல்நிலை மிகவும் திடகாத்திரமாக இருந்த காரணத்தினால் எனக்குச் சவனப் பிராஷ் தேவையில்லை என்று கருதினேன். தற்பொழுது ஆஸ்ரமத்தில் தங்கியிருக்கும் ஸ்ரீ M. சுப்பராவ் அவர்களுக்கு அப்பொழுது சவனப் பிராஷ் தேவையாக இருந்த காரணத்தினால் நான் அவருக்கு அந்த டின்களை குருதேவருடைய பிரசாதம் என்று சொல்லிக் கொடுத்து விட்டேன். அடுத்த நாள் திடீரென்று எனக்கு மிகுந்த பலஹீனம் ஏற்பட்டு இலேசாக ஜுரமும் அடிக்கத் தொடங்கியது. நான் உடனே என்னுடைய குருதேவரின் விருப்பத்தை மதிக்காமல் மிகப் புனிதமான பிரசாதத்தை மாதிரிக்குக் கூடச் சுவைத்துப் பார்க்காமல் மற்றொருவருக்குக் கொடுத்துவிட்ட அறிவீனத்தை உணர்ந்தேன். நான் குருதேவருடைய படத்திற்கு முன் அமர்ந்து அவருடைய மன்னிப்பிற்காகவும், கருணைக்காகவும் கெஞ்சினேன். என்ன அதிசயம் !

நான்கு நாட்களுக்குள் இரண்டு சவனப் பிராஷ் டின்கள் அடங்கிய மற்ருெரு பார்சல் எனக்கு வந்தது. உடனே நான் அந்த டின்களைத் திறந்து பயன்படுத்த ஆரம்பித்தேன். வீட்டிலிருந்த மற்றவர்களும் இதற்கு முன் கட்டாயப்படுத்திலுல் கூடச் சாப்பிடாதவர்கள் என்னோடு சேர்ந்துகொண்டு அவைகளை ஒரு வாரத்தில் காலி செய்து விட்டார்கள். மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் பிருந்தாவன் ஹோட்டலைச் சேர்ந்த ஸ்ரீ குப்புசாமி அவர்களிடம் ஒரு டின் வாங்கி வரலாம் என்று புறப்பட்டுக் கொண்டிருக்கும்போது தபால்காரர் ஒரு பெரிய டின் சவனப் பிராஷும், தைலமும் அடங்கிய மற்ருெரு பார்சலைக் கொண்டு வந்து கொடுத்தார். அப்பொழுது நான் ஆச்சரியத்தால் திகைத்துப் போய் ஸ்தம்பித்து நிற்பதைத் தவிர வெருென்றும் செய்ய இயலவில்லை. சமுத்திரத்தில் அலைகள் ஒன்றன்பின் ஒன்ருக வந்து கொண்டிருப்பதைப் போல் என் னுடைய குருதேவரின் கருணையும் கிருபையும் என்மீது இடைவிடாது சொரிந்து வண்ணமாக இருந்தன. என்னுடைய குருதேவரின் தாராள மனப்பான்மையை வள்ளன்மையை இந்த உலகத்தில் யார்தான் மிஞ்ச முடியும்? யாராலும் முடியவே முடியாது.

## 27. ஒரு கனவு

(ஸ்ரீ L. N. ராமன், பெங்களூர்)

1953ல் நடந்த சம்பவம். நான் சிவானந்த ருடைய நூல்கள் பலவற்றைப் படித்திருக்கின்றேன். என்னுடைய திருமணப் பேச்சு நடக்கவிருந்தது. நான் அப்பொழுது உள்ளத்தளவிலும், மனோதத்துவ

ரீதியாகவும் திருமணத்திற்குத் தயாராக இல்லை. "திருமணம் செய்து கொள்வதா" அல்லது "செய்து கொள்ளாமல் இருப்பதா" என்பதைப் பற்றி நான் முடிவுக்கு வராமல் இருந்தேன். 1953ம் ஆண்டு கடைசியில் நான் ஹரித்துவாரத்துக் கால்வாயில் நீந்திக் கொண்டிருப்பதாக ஒரு கனவு கண்டேன். தண்ணீரின் வேகம் என்னைப் பிரம்மகுண்டம் என்கின்ற மடு வரையிலும் அடித்துக் கொண்டு வந்து விட்டது. அங்கிருந்த தண்ணீர் முழுதும் திடீரென்று ஆவியாகப் போய்விட்டது. நான் மிகுந்த பிரயாசையுடன் அந்த மடுவிற்குள் விழுவதினின்று சமாளித்துக் கொண்டேன். உடனே எனக்குப் பின்புறம் சிறிது தூரத்திலிருந்து அதிகாரம் நிறைந்த தொனி ஒன்று என்னை "உள்ளே குதி" என்று ஆணையிட்டது. அந்தக் காரியத்தைச் செய்கின்ற அளவிற்கு நான் அறிவீனன் அல்லன் என்று நினைத்துக்கொண்டேன். அந்த அசரீரி மிகவும் அருகில் வந்து "குதித்து விடு" என்று கூறியது. இம்மாதிரி உத்தரவிடுகின்ற அந்த அதிசய மனிதர் யார் என்று சுற்றுமுற்றும் பார்த்தேன். எனக்கு முன் இருந்த அந்த மடுவினுடைய வாயிலில் சுற்றிலும் ஒளி வீசிக் கொண்டிருக்கும் பகவான் சிவானந்தரின் (மார்புக்கு மேற்பட்ட) ஒளி மயமான திரு உருவத்தைக் கண்டேன். அவர் மறுபடியும் "ராமன், நான் சொல்லுகிறேன், உள்ளே குதித்து விடு" என்று கூறுவதைக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டுத் திகைத்து நின்றுவிட்டேன். என்னுடைய எதிர்ப்புச் சக்தி தளர்ந்துவிடவே நான் மடுவினுள் குதித்துவிட்டேன். சுவாமிஜியினுடைய காட்சி மறைந்தது, வெளிச்சமும் மறைந்தது. மறுபடியும் பழையபடி என்னைச் சுற்றிலும் ஒரே இருள் மயம். நான் அந்த

மடுவினுள் சென்று கொண்டே இருக்கிறேன். கீழே போய்விடப் போகிறது என்ற பயம் என்னைப் பற்றிக் கொண்டு விட்டது. அங்குப் பாதாளத்தில் பாம்பு களும், முதலைகளும், வேறு பயங்கர ஜந்துக்களும் நிறைந்து ஒரே பாறையாக இருக்கும் என்று அஞ்சி னேன். கடைசியாக கீழே போய் தடால் என்று விழுந்தேன். என்ன ஆச்சரியம்! அங்கு தரை மிக மென்மையாக இருந்தது. நான் உடனே விழித்துப் பார்த்தபொழுது என்னுடைய படுக்கையின் மீது படுத்திருந்தேன். எனக்குச் சிலிர்ப்பும், சந்தோஷமும் ஏற்பட்டன. இந்தக் கனவின் முக்கியத்துவம் என்ன வாக இருக்கலாம் என்று சிந்தித்தேன். நான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்பது சுவாமிஜியின் ஆணை போலிருக்கிறது என்கின்ற கருத்து எனக்குப் பட்டது. நான் இந்தக் கனவை யாரிடமும் சொல்ல வில்லை. ஆனால் அடுத்தநாள் காலையில் திருமணத் திற்கு நான் என்னுடைய சம்மதத்தைத் தெரிவித்து எல்லோரையும் ஆச்சரியத்தில் மூழ்க வைத்தேன்.

## 28. சிவானந்தரின் சித்திகள்

(ஸ்ரீ சுமந்த் பிரஸாத் திரிவேதி)

இது என்னுடைய வாழ்க்கையில் உண்மையாக நிகழ்ந்த சம்பவங்களின் சுருக்கமான வர்ணனை. இங்குச் சுவாமி சிவானந்தரின் தரிசனம், பிரசாதம், என்னுடைய ஆன்மீக அனுபவங்கள் ஆகியவைகள் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. சுவாமி சிவானந் தஜி என்னுடைய மனைவி மதுவுடன் இந்தியில் பேசு கிறார். கவிதைகளையும் கீர்த்தனைகளையும் குஜராத்தி யில் எடுத்துச் சொல்கிறார். ஆகவே இது பிரத்தி யேகமாகக் குஜராத்தியில் எழுதப்பட்டிருக்கின்றது.

அன்று மங்களகரமான விஜய ஏகாதசி தினம். செவ்வாய்க்கிழமை பிப்ரவரி 10ந் தேதி, நதி வீட்டிலிருந்து அதிக தூரமில்லை. ஆற்றிற்குப் போகும் வழியில் ஸ்ரீ மது யாரோ ஒரு சந்நியாசி மெதுவாகத் தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். அவர் அவளை நெருங்கியதும், அவள் அவரை அடையாளம் கண்டு கொண்டாள். அவர் வேறு யாருமல்ல. நமது சுவாமி சிவானந்தர்தான்.

குருஜி: அம்மையே, எங்குப் போகிறீர்கள்?

மது: சுவாமிஜி, நான் ஆற்றிற்கு ஸ்நானம் செய்து கொள்வதற்காகச் செல்கிறேன்.

சுவாமிஜி: நீங்கள் எங்குத் தங்கியிருக்கின்றீர்கள்? நீங்கள் யார்?

மது: நான் குடியிருப்புச் சங்கத்தில் (Housing Society) தங்கியிருக்கிறேன். நான் ஒரு பிராமணப் பெண்.

குருஜி: எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது. தயவு செய்து எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடுப்பீர்களா?

மது: சுவாமிஜி, தாங்கள் நதியிலிருந்துதானே வருகின்றீர்கள்?

குருஜி: இல்லை. நான் நதியிலிருந்து வரவில்லை. நான் நெடுந்தூரத்திலிருந்து வருகின்றேன். வெய்யில் தகிக்கிறது. தயவு செய்து கொஞ்சம் தண்ணீர் கொண்டு வாருங்கள்.

இவ்வாறு சொல்லிவிட்டு, அவர் மணலின் மீது உட்கார்ந்து கொண்டார். தண்ணீர் கொண்டு வருவதற்காக மதுவிடம் ஒரு பாத்திரத்தைக் கொடுத்தனுப்பினார். மது நதிக்குச் சென்று அதில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். அவள் அவரைக்

கூர்ந்து கவனித்து இந்தச் சந்நியாசி சுவாமி சிவானந்தர்தான் என்று தேர்ந்தாள்.

மது: சுவாமிஜி, தங்களுக்குத் தண்ணீர் கொண்டு வந்திருக்கின்றேன்.

சுவாமிஜி கண்களைத் திறந்து தண்ணீரை வாங்கி அருந்தினார். அதுவரை மது விடாமல் சுவாமிஜியை உற்று நோக்கிய வண்ணமாகவே இருந்தாள். பிறகு அவள் மணலில் அமர்ந்து மண்டியிட்டு சுவாமிஜியை வணங்கினாள். சுவாமிஜி தன்னுடைய கரங்களை உயர்த்தி அவளை ஆசீர்வதித்தார்.

மது: சுவாமிஜி இன்று ஏகாதசிப் புண்ணிய தினம். தயவு செய்து என்னுடைய வீட்டிற்கு வந்து கொஞ்சம் பழங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்.

சுவாமிஜி: குழந்தாய்! இன்றைக்கு வேண்டாம். இனி எப்போதாவது நான் உங்களுடைய வீட்டிற்கு வருவேன், நீ போய் ஸ்நானத்தைக் கவனி என்றார். மது அப்பொழுது மெய் மறந்திருந்தாள். சுவாமிஜி இரண்டு மூன்று தரம் அவ்வாறு சொல்லவே அதைக் கேட்டு அவள் நதியை நோக்கிப் புறப்பட்டாள். சிறிது தூரம் சென்ற பிறகு அவள் திரும்பிப் பார்த்தாள். அப்பொழுது சுவாமிஜி தென்பட்டார். ஆனால் மறுமுறை திரும்பிப் பார்த்தபொழுது சுவாமிஜி மறைந்து விட்டார்.

1952 பிப்ரவரி 11ந் தேதி மது சுவாமிஜியின் படத்தை வழிபட்டுக் கொண்டிருந்தாள். மது சுவாமிஜியைப் பார்த்து "நேற்று தாங்கள் என்னை ஆசீர்வதித்தீர்கள். ஆனால் யாதொரு மந்திரமோ, உபதேசமோ அளிக்கவில்லை. என்றாலும் தங்களைக் கேட்க முடியவில்லை. நான் தங்களுடைய தரிசனத்தைக் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கி விட்டேன்.

புடனும் இருப்பேன் என்று ஆசீர்வதித்தீர்கள். ஆனால் அது எப்படி என்று எனக்குத் தெரியவில்லையே,'' மது இந்தக் கேள்வியைச் சுவாமிஜியினுடைய படத்தைப் பார்த்துக் கேட்டாள். ''நேற்று அப்படிக் கூறியது நான்தான். நான்தான் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி உன்னை ஆசீர்வதித்தேன்,'' என்று சொல்லி சுவாமிஜி கலகலவென்று சிரித்ததைக் கேட்டாள். அவர் கீதையிலிருந்து இரண்டு வரிகளை எடுத்துக் கூறினார்.

திடீரென்று அறைக்கதவு தானாகவே திறந்தது. சுவாமிஜி சிவானந்தஜி கையில் சித்தாருடன் (தம்புரா போன்ற வாத்தியக் கருவி) உள்ளே நுழைந்தார். மது சுவாமிஜியை வணங்கி ''சுவாமிஜி, மந்திர தீட்சை இன்றி நான் எவ்வாறு பரமானந்தத்தை அனுபவிப்பேன்'' என்று கேட்டாள். சுவாமிஜி ஓம் நமசிவாய என்று மும்முறை உச்சரித்தார். அதை மது திருப்பிக் கூறினாள். சுவாமிஜி அவளை ஆசீர்வதித்துவிட்டு மறைந்தார்.

1953ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 10ந் தேதி நான் என்னுடைய அறையில் வழிபாடு செய்துகொண்டிருந்தேன். மது அப்பொழுது காய் அரிந்துகொண்டிருந்தாள். திடீரென்று ஒரு தெய்வீக உருவம் எனக்கு முன் தோன்றி 'குருமகராஜ் அவர்கள் பகல் 12 அல்லது 12-30 மணிக்கு என்னுடைய வீட்டிற்கு வரவிருப்பதாகவும், பூசைக்கு வேண்டிய சாமான்கள் எல்லாவற்றையும் தயாராக வைத்திருக்கும்படியாகவும் கூறிவிட்டுச் சென்றது. 12-30 மணிக்கு மது இருந்த வாயிற் பக்கத்தில் இனிமையான ஓசை மதுவிற்குக் கேட்டது. கதவுகள் தானாகவே திறக்கப்பட்டன. குருதேவர் ஒரு சீடருடன் உள்ளே நுழைந்

தார். (அந்தச் சீடர் சுவாமிஜி அவர்களின் பரோடா யாத்திரையின்போது அவருடன் இருந்தவர்) சீடர் "வீட்டு விளக்கேற்றுமின்" என்ற பொருள்படப் பாடிக் கொண்டிருந்தார். குரு, சீடர் இருவருடைய கரங்களிலும் கமண்டலங்கள் காணப்பட்டன. சுவாமிஜியுடைய படமும், பூர்ண புருஷோத்தமர் ஸ்ரீ சகஜானந்தருடைய படமும் அங்கு வைக்கப் பட்டன. மது தீபத்தை ஏற்றி வைத்து சுவாமிஜியை யும் அவருடைய சீடரையும் வணங்கிவிட்டு உணவு அருந்துமாறு வேண்டினுள். அவள் சுவாமிஜிக்குப் பேரீச்சம்பழம், மிட்டாய்கள், பழங்கள், பால் ஆகிய வற்றைக் கொடுத்தாள். அவள் சுவாமிஜியைப் பார்த்து "தாங்கள் அப்பளமும் உருளைக்கிழங்கு கறியும் சாப்பிடுவீர்களா?" என்று கேட்டாள். குருஜி அவைகளை ஏற்றுக் கொண்ட பிறகு அவள் பாத பூஜை செய்தாள். அவள் சுவாமிஜியிடம் "சுவாமிஜி நான் பூர்ண புருஷோத்தம பகவான் சுவாமி சகஜானந்த மகராஜ் அவர்களைத் தொடர்ந்து வழி பட்டு வந்தால் போதுமா?" என்று கேட்டாள்.

குருஜி: நீங்கள் செய்து வருவது நல்லது. நான் கூட அவரை வழிபட்டிருக்கின்றேன். இங்கு நீங்கள் வைத்திருக்கும் இந்தப் படங்களில் எங்களுக்குச் சுவர்க்கலோகத்தில் இருக்கின்ற அதே மாதிரியான முகத்தோற்றம், அம்சங்கள், உருவம் முதலியன அமைந்திருக்கின்றன. சகஜானந்தர் இப்பூவுலகில் அவதரித்த பொழுது நானும் அவருடன் இருந்தேன். அப்பொழுது என்னுடைய பெயர் நிஸ்குலானந்தஜி. அந்தப் பலகையில் எழுதப்பட்டிருக்கும் அந்தக் கவிதையானது நான் நிஸ்குலானந்தஜியாக இருந்த பொழுது என்னுல் கட்டப்பட்டதாகும். நான் அமர வீட்டில் இருந்தேன். ஆண்டவனுடைய கட்டளைக்

கிணங்க நான் இப்பூவுலகில் சுவாமி சிவானந்தராக வந்திருக்கிறேன். ஸ்ரீ பூர்ண புருஷோத்தம் பகவான் ஸ்ரீ சஹஜானந்த மகராஜ் அவர்களால் ஸ்தாபிக்கப் பட்ட மதத்தை உபதேசிப்பதற்காகவே நான் இங்கு வந்திருக்கின்றேன்.

மது: சுவாமிஜி, தாங்கள் ஒரு தெய்வீக புருஷர். தாங்கள் எனக்கு ஆற்றங்கரையோரத்தில் இதே தெய்வீக வடிவில் தரிசனம் தந்தருளினீர்கள். ஆகா, தாங்கள் எப்பேர்ப்பட்ட தெய்வீகம் வாய்க்கப் பெற்ற வர்களாக இருக்கின்றீர்கள்!

குருஜி: நான் தெய்வீகத் தன்மை வாய்ந்தவனு? உங்களுக்கு அது தெரிந்திருந்தால் என்னுடைய தெய்வீக உருவத்தைப் பற்றிச் சற்று விளக்கமாகக் கூறுங்கள் பார்க்கலாம்.

மது பாடுகிருள். நான் தங்களை ஒரே ஒரு தெய்வமாகக் காண்கின்றேன். நீங்கள்தான் சிவா னந்தா, சிவன், பிரம்மா, விஷ்ணு.

சுவாமிஜி மிகுந்த சந்தோஷமடைந்தார். அவர் மதுவைப் பார்த்து ஒரு வரம் கேட்கச் சொன்னுர். அதற்கு மது "எனக்கு ஒன்றும் வேண்டாம். சுவாமிஜி தங்களுடைய கருணையால் நானும் எனது கணவரும் இறைவனைத் தளராத பக்தி சிரத்தையுடன் வழிபட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்பதுதான் என்னுடைய பிரார்த்தனை. தங்களுடைய தெய்வ தரிசனம் இங்குக் கிடைத்ததற்கு அடையாளமாக ஏதாவது தந்தருள வேண்டுகின்றேன்."

சுவாமிஜி: எதற்காக ஏதாவது வேண்டுகிறீர்கள்? நான்தான் எப்பொழுதும் இந்தப் படத்தில் பிரசன்ன மாக இருக்கின்றேனே?

மது: என்னுடைய கணவர் ஆபீஸிற்குப் போயிருக்கிருர். தாங்கள் இங்கு எழுந்தருளி யிருப்

பதற்கு அடையாளமாக அவர் திருப்தி யடையும் வகையில் ஏதாவது பிரசாதமோ அன்பளிப்போ கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். ஸ்ரீ ஸத்குருஜி ஒரு சிறிய அழகான கல்லில் செதுக்கப்பட்ட விக்கிர கத்தைக் கொடுத்து அது பார்வதிஜி என்று கூறினார். "அதை வழிபட்டு வாருங்கள். அன்னையை அறிந்து கொண்டால் பிறகு தந்தையைப் பற்றித் தானுகவே தெரிந்துவிடும்," என்று கூறி பார்வதிதேவிக்கு குங்குமத் திலகமிட்டு விட்டு இரண்டு கைகளிலும் குங்குமத்தைப் பூசி அந்த அடையாளத்தைச் சுவரில் வைத்து விட்டு அதையும் வழிபடும்படிக் கூறினார். பிறகு அவருடைய கமண்டலத்திலிருந்த ஒரு துணியி லிருந்து மூன்று வில்வ தளங்களை எடுத்து மதுவிடம் கொடுத்துச் சாப்பிடும்படிக் கூறினார். "என்னுடைய உதவி எப்பொழுது தேவைப்பட்டாலும் அப்பொழுது என்னுடைய கை அடையாளம் பொறிக்கப்பட்டுள்ள காகிதத்தை எடுத்து என்னை நினைக்கவும்," என்று கூறி மதுவைக் கண்ணை மூடிக் கொள்ளச் சொல்லி விட்டு வெளியேறி மறைந்துவிட்டனர்.

1953 பிப்ரவரி 20ந் தேதி குருதேவருடைய வாணியை மது கேட்டாள். அவளுக்கு மேலும் வில்வ தளங்கள் வேண்டுமா என்று அந்த அசரீரி கேட்டது.

அதற்கு மது "சுவாமிஜியின் சித்தம்" என்று கூறினுள்.

1953 மார்ச் மாதம் 16ந் தேதி இரவு 12-30 மணிக்கு மது பரோடாவில் ஒரு வீட்டில் உறங்கிக் கொண்டிருந்த பொழுது சத்குரு அவளுக்குத் தரிசனம் தந்து அவரும் அவளோடு பரோடாவிற்கு வந்து விட்டதாகக் கூறினார். மாலையில் பஜனை பாடிக்கொண் டிருந்தபொழுது அவர் அவளுக்கு எதிராக மாவு

அரைக்கும் கல்லுக்கும் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார்.

ஏப்ரல் 16ந் தேதி 14 வில்வ தளங்கள் மந்திரோச்சாடனத்துடன் கீழே விழுந்தன. குருதேவர் "ஸ்டோ பஜா குருதேவ்" என்ற பாட்டைக் கூறினர்.

மே மாதம் 26ந் தேதியும், ஜூன் மாதம் 4ந் தேதியும் ஸ்ரீ குருதேவர் முறையே நான்கு வில்வ தளங்களையும் இரண்டு வில்வ தளங்களையும் கொடுத்தார்.

ஜூன் 23ந் தேதி குருதேவர் பிரத்தியக்ஷ தரிசனம் தந்து மதுவை ஆங்கிலத்தில் "சௌக்கியமா?" (How are you?) என்று கேட்டார்.

அதற்கு மது "எனக்கு ஆங்கிலம் தெரியாது மகராஜ்" என்று கூறவே குருதேவர் சிரித்தார்.

1954 செப்டெம்பர் 29ந் தேதி 10 மணிக்கு குருதேவர் இரண்டு மிட்டாய்கள், குங்குமம், ஒரு வில்வ தளம் ஆகியவற்றைக் கொடுத்தார். மது நாம சங்கீர்த்தனம் செய்து கொண்டு வழிபாட்டில் ஈடுபட்டிருந்தாள். பிரார்த்தனையை முடித்துக் கொண்டு கண்களைத் திறந்து பார்த்தபொழுது அவளுக்கு முன்னல் பிரசாதம் இருக்கக் கண்டாள். "நான் செப்டெம்பர் 8ந் தேதியே இந்தப் பிரசாதத்தைக் கொண்டு வந்திருப்பேன். அளவுக்கு மிஞ்சிய வேலையின் காரணமாக நான் உங்களிடம் முன்னதாகவே வர இயலவில்லை. இன்றுதான் உங்களுக்கு செப்டெம்பர் 8ந் தேதி," என்று குருதேவர் அவளிடம் கூறிவிட்டு பிரசாதத்துடன் ஒரு சிறு புகைப்படத்தையும் கொடுத்து "இந்தப் பிரசாதத்தை நாளை காலை 8 மணியிலிருந்து 9 மணிக்குள் ஸ்ரீ சங்கர்லால்ஜி அவர்களிடம் கொடுத்து அவரிடம் உங்கள் குருதேவர் இந்தப் பிரசாதத்தை அனுப்பியிருக்கிருர் என்று

சொல்லி அவர்களிடமிருந்து புருஷோத்தம் பகவானுடைய பிரசாதத்தைக் கேட்டு வாங்கவும்" என்று சொன்னார்.

செப்டெம்பர் 30ந் தேதி குருதேவர் எங்களுக்கு ஆமதாபாத்தில் மரத்தினால் செய்யப்பட்ட இரண்டு பாதுகைகளைக் கொடுத்தார். தற்பொழுது சுவாமிஜியினுடைய பக்தர்கள் எல்லோரும் அந்தப் பாதுகைகளை வணங்கி வருகின்றனர். அன்றைய தினம் ஸ்ரீ குருதேவர், மது சமாதி பெற்று அனுபூதி அடைவாள் என்று முன்கூட்டி அறிவித்தார்.

1954 அக்டோபர் 24ந் தேதி பரோடாவில் நாங்கள் குருதேவரின் பாதுகைகளை வணங்கிக் கொண்டிருந்த பொழுது எங்களுக்கு மிட்டாய்கள் கிடைத்தன. மது சமாதி பெற்று சுவாமி சிவானந்தஜியின் தரிசனத்தைப் பெற்றாள்.

## 29. மென்மையாகக் குணமாக்குபவர்

### (ஸ்ரீ கார்ல் லெண்டில், ஜெர்மனி)

மூன்றாண்டுகளுக்கு முன் "வெள்ளைக் கொடி" (White Flag) என்ற பத்திரிகையில் ஹாரி டிக்மன் எழுதிய கட்டுரையின் மூலமாக நான் சுவாமி சிவானந்தர்பால் கவரப்பட்டேன். எங்களுடைய மகன் பிறந்த சில நாளில் வாதநோயால் தாக்குண்டது எங்களுக்கு ஆறாத்துயரத்தைக் கொடுத்தது. துயரக் கடலில் மூழ்கியிருந்த இந்தச் சமயத்தில் நான் சுவாமிஜியினுடைய உதவியையும் உபதேசத்தையும் நாடினேன். அவர் எனக்கு ஆறுதல் கூறி அனுப்பியிருந்த அந்தக்கடிதத்தை நான் ஒரு பொழுதும் மறக்கவே முடியாது. அவருடைய அன்பான வார்த்

தைகள் எங்களுக்கு எதிர்காலத்தை நம்பிக்கையுடனும் தைரியத்துடனும் எதிர் நோக்கி நிற்க ஒரு உறுதியை அளித்தன. நாங்கள் சுவாமிஜியோடு தொடர்பு கொண்டதிலிருந்து பையனுடைய நிலை சீரடையத் தொடங்கியது. எங்களுடைய உள்ளம் சந்தோஷத்தால் நிரப்பப் பட்டுள்ளது. அவர் எங்களுக்கு அளித்து வரும் மாபெரும் உதவிக்காக நாங்கள் அவருக்கு நன்றி செலுத்துகிறோம்.

இந்த மகாத்மாவை எல்லாம் வல்ல இறைவன் இன்னும் பல்லாண்டு நீடூழி வாழச் செய்து நமக்கு இவர் வழிகாட்டவும், ஒளி கொடுக்கவும் அருள் புரிவாராக.

## 30. என்னுடைய வாழ்க்கை எவ்வாறு மாற்றப்பட்டது.

(ஸ்ரீ N. S. கல்யாணராமன், பம்பாய்)

என்னுடைய சிறுவயதில் நான் மிகவும் பொறுப்பற்றவனாக, புகைபிடித்துக் கொண்டும், அடிக்கடி சினிமாவுக்குப் போய்க்கொண்டும் வாழ்நாளை வீணாக்கி வந்தேன். சுமார் 4 ஆண்டுகளுக்கு முன்னால் சுவாமிஜி அகில இந்திய யாத்திரை செய்தபொழுது பம்பாய் மாதுங்காவில் உள்ள ஆஸ்தீக சமாஜத்தில் சுவாமிஜியினுடைய தரிசனம் எனக்குக் கிடைத்தது. நான் சுவாமிஜியினுடைய சொற்பொழிவை மிகுந்த உற்சாகத்துடன் கேட்டேன். குறிப்பாக அவர் பாடிய "புகை பிடிக்காதே கோவிந்தா, மது அருந்தாதே கோவிந்தா" என்ற பாட்டு என்னை மிகவும் கவர்ந்தது. அன்றைய தினத்திலிருந்து நான் புகை பிடிப்பதில்லை என்றும்; புகையிலைக்கு அடிமையாக இருப்பதில்லை

என்றும் உறுதி பூண்டுவிட்டேன். சினிமாவுக்குப் போவதையும் விரும்பவில்லை. அதற்குப் பதிலாகத் தினந்தோறும் முடிந்தவரை ஓம் நமோ நாராயணுய என்கின்ற பகவானுடைய நாமத்தை உச்சரித்தவண்ணமாக இருந்தேன்.

ஒரு மாதத்திற்குப் பின் பயங்கரமான ஈரல் நோய் ஏற்பட்டுப்பெரிதும் அவஸ்தைக்கு ஆளானேன். ஒரு நாள் இரவு சுமார் ஒரு மணி அளவில் யாரோ வந்து என்னை சமய வாழ்வு வாழும்படி உபதேசிப்பது போல் தோன்றியது. இந்த உபதேசத்தை நான் தீவிரமாகவே ஏற்றுக்கொண்டு அடுத்த நாள் முதற் கொண்டு எங்களுடைய பரம்பரை வழக்கப்படி சந்தியா வந்தனம், சூரிய நமஸ்காரம் காயத்ரி ஜபம் முதலியவைகளை முறையாகச் செய்யத் தொடங்கினேன். நான்கு நாள் முடிந்ததும், அன்பிற்குரிய சுவாமிஜி, என்னுடைய நோய் மறைந்தது. உண்மையிலேயே இது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது. நான் உடலளவிலும், உள்ளத்தளவிலும் சந்தோஷத்தை அனுபவித்து வருகின்றேன். கிருஷ்ண பரமாத்மா நான் என்னுடைய தினசரி ஜெபம் முதலிய அனுஷ்டானங்களைச் செய்துவர எனக்குப் போதிய மனோபலத்தைக் கொடுத்து உதவுவார் என்று நம்புகின்றேன்.

## 31. குருதேவரின் அறைகூவல்

(ஸ்ரீ N. பரசுராம், பம்பாய்)

ஓம்... ஸ்ரீ குருதேவருக்கு வந்தனங்கள், சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

நான் பலவருடங்களாக குருதேவரின் தரிசனத்தைப் பெறவேண்டும் என்று மிகவும் ஏங்கி இருந்தேன்.

அந்தப் பொன்னான தினம் இப்பொழுது வாய்க்கப் பெற்று அவர் முன்னிலையில் இருப்பதை நினைத்து உளம் பூரிக்கின்றேன். இது திடீரென்று நான் பம்பாயி லிருந்து புறப்படுவதற்குச் சற்றுமுன்பாக ஏற்பட்ட தீர்மானத்தினாலும், அனுபவத்தினாலும் ஏற்பட்ட சம்பவமாகும்.

பம்பாய் மாதுங்காவில் சுவாமி வெங்கடேசா னந்தஜி அவர்களுடைய சொற்பொழிவிற்கு நான் ஆரம்பத்திலிருந்து செல்லாவிடினும், முறையாகச் சென்று வந்தேன். நான் ஒரு சமயம் சொற்பொழிவின் போது ஸ்ரீ G. V. பரமேசுவரன் அவர்களுடைய வீட்டில் சுவாமி வசந்தானந்தஜி அவர்களைச் சந்தித்திருக் கிறேன். தவிர பம்பாய் வார்டன் ரோடில் நடந்த ஒரு சத்சங்கத்திலும் நான் கலந்து கொண்டிருக்கிறேன். அன்று சத்சங்கம் முடிந்ததும் சுவாமி வசந்தானந்தஜி என்னையும் பரமேஸ்வரன் அவர்களையும் பார்த்து நாங்கள் தங்கியிருக்கின்ற கார் (khar) என்ற இடத்தில் ஒரு சொற்பொழிவுத் தொடருக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கூறினார். அடுத்த நாள் நாங்கள் வீடு திரும்பியதும் நான் தங்கியிருக்கும் 15-வது ரோடிற்கு அடுத்தாற் போலவே பிரசங்கத்திற்கான ஒரு இடத்தைப் பெற முடிந்தது. அங்குத் துளசிதாஸ் ராமாயணச் சொற்பொழிவு தொடர்ந்து நிகழ்ந்து வந்தது. அது 1-3-60 வரை நடக்க விருந்தது இந்தக் கட்டிடத்திற்கு "ஆனந்த குடீரம்" என்று பெயரிடப்பட்டிருந்தது. அதன் சொந்தக்காரரின் பெயர் ஸ்ரீ ஆனந்த் (ஒரு பஞ்சாபி பெரிய மனிதர்). நான் அந்தக் கட்டிடத்தைச் சொற்பொழிவிற்காகக் கேட்டபொழுது அவர் எல்லையிலா ஆனந்த மடைந்தார். அவர் அக்கட்டிடத்தை எங்களுடைய

உபயோகத்திற்காகக் கொடுக்க இசைந்ததுடன் நாங்கள் யோசித்து வைத்திருந்த கீதைப் பிரசங்கத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து கொடுக்கச் சித்தமாயிருந்தார். நான் இதைக்கேட்டுப் பேரானந்தமடைந்தவனுய் இந்தச் செய்தியை ஸ்ரீ G.V. பரமேசுவரன் அவர்களுக்குத் தெரியப்படுத்தினேன். ஸ்ரீ பரமேசுவரன் அவர்கள், அடுத்தநாள் டெலிபோன் கெட்டுப் போயிருந்தபடியால், ஸ்ரீ வசந்தானந்தஜி யுடன் தொடர்பு கொள்ள முடியவில்லை. ஆகவே அடுத்தநாள் காலை சுவாமிஜியினுடைய விலாசத்தைப் பெற்றுக்கொண்டு கீதைப் பிரசங்கத்திற்கு இடம் கிடைத்துவிட்ட செய்தியைத் தெரிவித்து விட்டுவருவதற்காகச் சென்றேன். ஆனல் சுவாமிஜி அம்மையார் தான் ரிஷிகேசம் புறப்பட்டுக் கொண்டிருப்பதாகவும் பிரசங்கத்தை ஓரிரு வாரங்கள் ஒத்திப் போடும்படியும் கூறினர்கள். அம்மையார் என்னைப்பார்த்து "நீங்கள் ஸ்ரீ குருதேவரின் தரிசனத்தைப் பெற்றிருக்கின்றீர்களா' என்று கேட்க, நான் "அதற்காகத்தான் ஏங்கிக் கொண்டிருக்கிறேன்" என்று பதிலிறுத்தேன். அம்படியானல் ஏன் நானும் அவரோடு ரிஷிகேசம் வரக்கூடாது என்று கேட்டார். இந்தச் செய்தியை நான் பரமேசுவரன் அவர்களிடம் மாலையில் அவர் வீட்டிற்குப் போயிருந்த பொழுது தெரிவித்தேன். இங்குதான் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. அப்பொழுது இரவு 8 மணி இருக்கும் பரமேசுவரான் அவர்கள் சாப்பாட்டிற்குச் சென்றுவிடவே நான் வீட்டின் முன்புற அறையில் தனியாக உட்கார்ந்திருந்தேன். இந்த அறையிலே ஸ்ரீ குருதேவருடைய கண்ணுடிப் புகைப்படம் (Transparent photo) ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பின்புறமிருந்து வெளிச்சம் போடப்பட்டிருந்தது. அதைத்தவிர அறையில் வேறு எந்தவித

மான விளக்கும் இல்லை நான் இந்தப் புகைப்படத்தை உற்று நோக்கிய வண்ணம் நாம் எப்பொழுது ஸ்ரீ குரு தேவரைநேரில் சென்று தரிசிக்கப் போகிறோம் என்று மனதிற்குள் சிந்தித்துக் கொண்டிருந்தேன் திடீரென்று அந்தப்படம் சற்று வடக்கு நோக்கி நகர்வதையும்சற்று நேரம் கழித்து மறுபடியும் அதேபோன்ற சலனத்தையும் கவனித்தேன். அந்தக் கணத்தில்தான் நான் எப்படியாகிலும் ரிஷிகேசத்திற்கு உடனே புறப்படுவது என்று தீர்மானித்தேன். இதை நான் குரு தேவருடைய நேர்முகமான அழைப்பு என்று கருதினேன். அடுத்தநாள் நான் (29-2-60 முதல் 5-3-60 முடிய) ஆறு நாட்கள் விடுமுறைக்கு விண்ணப்பித்திருந்தேன். விடுமுறை உடனே கிடைத்தது. (ஆபீஸி லிருந்து விடுமுறை பெறுவது மிகவும் கடினம். தவிர நான் சென்ற நவம்பரில்தான் விடுமுறையிலிருந்தேன்). குருதேவரிடமிருந்து எனக்குக் கிடைத்த அற்புத உதவியின் இரண்டாவது அனுபவம் ஸ்ரீ குருதேவரின் அத்தியந்த பக்தரான ரயில்வே கார்டு ஸ்ரீ கணேசன் அவர்களின் மூலமாக டீ-லக்ஸ் ரயிலில் ரிசர்வ் செய்யப்பட்ட இடத்தைப் பெற முடிந்தது. இந்த டீ-லக்ஸ் ரயில் புதுடெல்லியோடு நின்று விடுகிறது. இந்த ஸ்டேஷன் ஒரு சந்திப்பான காரணத்தினால் எல்லோரும் இங்கு இறங்கியாக வேண்டும். இந்த இடத்திற்கு நான் முற்றிலும் புதியவன். நான் பழைய டெல்லி ஸ்டேஷனுக்குச் செல்வதற்காக ஒரு டாக்சியை அமர்த்த ஏற்பாடு செய்து கொண்டிருக்கும் பொழுது ஒரு அன்பர் வந்து பழைய டெல்லிக்குச் செல்வதற்கு இன்னும் சிறிது நேரத்தில் மற்றொரு ரயில் இருக்கிறது என்று தக்க சமயத்தில் கூறினார். குருதேவர் எப்பொழுதும் என்னுடன் இருந்து எனக்கு வழி காட்டுகிறார் என்பதை உணர்ந்தேன். எனக்கு அவர் மேலும்

வழிகாட்ட வேண்டுமென்று விரும்புவதால் அவர் என்னை அவருடைய சிஷ்யனாக ஏற்று எப்பொழுதும் ஆன்மீக வழியைக் காட்டவேண்டுமென்று இடையருது பிரார்த்திக்கின்றேன். சத்குரு மஹராஜ்கி ஜெய் !

## 32. ஒரு அபூர்வக் காட்சி

(புரொபஸர் N. K. ஸ்ரீ வஸ்தவா M. A.; LL. B.)

ஒரு சமயம் நான் சிவாவை அணுகி வழக்கம் போல சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினேன். சுவாமிஜி தனது வழக்கமான புன்னகையோடு என்னைப் பார்த்து கோவிலுக்குப் பின்புறம் சென்று என்னுடைய குடும்பத்தாருடன் தியானத்தில் ஈடுபடும்படிக் கூறினர். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. "சரி பார்க்கலாம் என்ன இருந்தாலும் சுவாமிஜி ஒரு முனிவராயிற்றே. அவருடைய கட்டளைக்குக் கீழ்ப் படிவோம்" என்று எண்ணிக் கொண்டு நான் என்னுடைய குடும்பத்தாருடன் சென்று ஆளுக்கொரு மூலையில் உட்கார்ந்து கொண்டு ஜெபம் செய்ய ஆரம்பித்தோம். என்ன அதிசயம்! எங்கள் ஒவ்வொருவர் முன்னிலையிலும் சிவாவினுடைய தேஜோ மயமான உருவம் புன்னகை பூத்த முகத்துடன் தோற்றமளிப்பதைக் கண்டோம். நாங்கள் எல்லோரும் ஆச்சரியத்தில் மூழ்கினேம். சிறிது நேரம் கழித்து நாங்கள் குருதேவரிடம் மௌனமாகச் சென்று வணங்கி நின்ரேம். சுவாமிஜி எங்களைப் பார்த்து "என்ன உங்களுக்கு தியானம் சிறப்பாக அமைந்ததல்லவா? அது ஒரு நல்ல அனுபவம்" என்று கூறினர். சுவாமிஜியினுடைய மகிமையைப் பற்றி நான் கொண்டிருந்த சிறி

தளவு சந்தேகமும் இப்பொழுது முற்றிலும் நீங்கி விடவே நான் அவரிடம் பூரணமாக தன்னைத்தானே சரணாகதி அடைந்தேன்.

வேதாந்திகள் மிக உன்னதமான சமாதி அனுபவத்தைத் தவிர வேறு எதிலும் நம்பிக்கை கொள்வதில்லை. இருந்தபோதிலும் பரந்த் ஞானமும், அனுபூதியும் பெற்ற வேதாந்தியான சுவாமி கிருஷ்ணானந்தஜியினுடைய சரீரம் ஒருமுறை நோய்வாய்ப்பட்டது. பித்தமும் ஜுரமும் அவருடைய மெலிந்த சரீரத்தை இறுகப் பற்றிக் கொண்டு விட்டன. அவைகள் பல நாட்கள் அவரை விட்டு நீங்குகின்ற அறிகுறியைக் காட்டவில்லை. எந்தவித மருந்தும், உபவாசமும், வைத்தியமும் ஒரு பயனையும் கொடுக்க முடியவில்லை. உள்ளச் சோர்வு நெருங்கி வருகின்ற சமயத்தில் ஓய்வெடுத்துக் கொள்வதுதான் சிறந்தது என்று அவர் எண்ணினார். சில நிமிட நேரத்திற்குள் சோர்வுற்றிருந்த அவருடைய முகத்தில் ஒரு தெளிவு. ஒரு சக்தி வெள்ளம் அவரிடம் வந்து நிரம்பியது. அவர் கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தார். "நான் என்ன கனவு கண்டு கொண்டிருக்கின்றேன்? ஓ—நான் என்ன குடி மயக்கத்தில் இருக்கின்றேனா?" அவர் பார்த்த விடமெல்லாம் சிவா காட்சியளிக்கின்றார். சர்வம் சிவா மயம். சுற்றுப்புறச் சுவர்களிலே சிவா. நாற்காலியின்மீது சிவா. சிவாவே தண்ணீர்ப் பானையாக இருக்கின்றார். சிவாவே கதவாகவும், மிதியடிப் பாயாகவும், ஊன்றுகோலாகவும், படுக்கையாகவும், துணியாகவும் காணப்பட்டார். சிவா மட்டுமே இருந்தார். பித்த மயக்கம் மறைந்தது. ஜுரம் தணிந்தது. சில நிமிட நேரத்தில் கிருஷ்ணானந்தஜி குளித்துக் கொண்டிருந்தார்.

## 33. சுவாமி சிவானந்தரின் மனோசக்திகள்

(யோகி ஸ்ரீ ஆத்மானந்தா C. ராய்ட்டர், ஜெர்மனி)

ஆன்மாவில் நிலைபெற்றிருக்கும் ஒரு யோகிக்கு மனத்திற்கு மனம் செய்தியனுப்பும் சக்திகள் உண்டு. அது அவருடைய ஆன்மீக வளர்ச்சியின் காரணமாக இயற்கையாக ஏற்படுவது. ஆகவே ஜெர்மன் பத்திரிகைகள் சுவாமி சிவானந்தர் சார்லட் வாலின்ஸ்கி ஹெல்லர் அவர்களை யோகத்தைக் கற்றுக்கொள்ளவும் சுவாமிஜியினுடைய எண்ணங்களை ஜெர்மனியில் பரப்பவும் இந்தியாவிற்கு வரும்படி மானசீக அசரீரி மூலம் அழைத்ததை வெளியிட்டிருந்தன. அந்த அம்மையாரும் அவருடைய அழைப்பை ஏற்றார்கள்.

என்னுடைய விஷயம் என்ன?—எனக்கும் அதே போன்று ஏற்பட்ட அனுபவம் ஒன்றை இங்கு குறிப்பிடுகின்றேன். சுவாமி ஓம்கார் அவர்களால் தூண்டப்பட்டு 1953-ல் ஆரம்பிக்கப்பட்ட ஃப்ரீட் ("Friede") என்கின்ற ஒரு ஜெர்மன் சஞ்சிகையின் ஆசிரியன் என்கின்ற முறையில் அதனுடைய முதல் பிரதியை சுவாமி சிவானந்தருக்கு விமானத் தபால் மூலம் அனுப்பி வைத்தேன். சுவாமிஜிக்கு அப் பிரதி போய்ச்சேர்ந்த அதே தினத்தில் எனக்கு அவருடைய காட்சி தென்பட்டது. அவர் எனக்கு முன்பாக என்னைப் பார்த்து புன்னகை பூத்த வண்ணம் ஒரு நிமிட நேரம் நின்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். சங்கல்ப சக்தியின் மூலமாக வடிவத்தை எடுக்கவல்ல அளவிற்கு சுவாமிஜியினுடைய எண்ணங்கள் அவ்வளவு பலம் வாய்ந்தவைகளாக இருக்கின்றன. நாங்கள் எங்களுடைய சஞ்சிகையில் சுவாமி சிவானந்தருடைய கட்டுரைகளை அடிக்கடி வெளியிடுகின்றோம்.

அதன்மூலம் எங்களுடைய வாசகர்கள் உதவியையும் ஆன்மீக ஆதரவையும் பெறுகின்றனர். எங்களுக்கு வரையாது வழங்கி வரும் வள்ளல் சுவாமிஜி அவர்களுக்கு ஆண்டவனுடைய மிகச் சிறந்த ஆசிகள் கிடைக்குமாக.

## 34. சிவாவின் தூதர்கள்

சிவாவினுடைய பிரசாதம் செய்திருக்கும் அற்புத சம்பவங்கள் ஒருசில இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன.

"நான் தங்களுடைய ஆசிகளைத் துணையாகவும் தங்களுடைய பிரசாதத்தைக் கவசமாகவும் கொண்டு சிந்துவிலுள்ள ஐதராபாத்திலிருந்து என்னுடைய ஜங்கமச் சொத்துக்களை எடுத்துவரச் சென்றேன். தங்களுடைய பிரசாதம், ஆசிகள் ஆகியவற்றின் அற்புத சக்தியின் காரணமாக பம்பாய் வந்து கொண்டிருக்கும் ரயிலிலிருந்த வேறு பல பிரயாணிகளும் காப்பாற்றப்பட்டு எங்களுடைய உயிருக்கும், சொத்திற்கும் எந்தவிதச் சேதமின்றி பத்திரமாக வீடு வந்து சேர்ந்தோம். எனக்கு எப்பொழுதாவது உதவி தேவைப்பட்டாலோ அல்லது ஏதாவது கஷ்டத்தில் இருக்கும்பொழுதோ நான் தங்களை நினைத்துத் தியானிப்பதோடு தாங்கள் எனக்கு அனுப்பியிருக்கும் பிரசாதத்தையும் உபயோகித்து வருவது வழக்கம். நான் தங்களுடைய மாய தெய்வ சக்தியால் எவ்வாறு காப்பாற்றப்பட்டேன், எவ்வாறு சிக்கலிலிருந்து விடுபட்டேன் என்பதை என்னுடைய வார்த்தைகளால் விளக்கிக் கூறமுடியாது. தங்களுடைய அற்புத ஆசிகளை என்மீதும், சில சமயம் நோய்வாய்ப்பட்டுவிடும்

எனது தாயார், மனைவி ஆகியோரின் மீதும் பொழிய வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.''

—ஸ்ரீ துவாரகதாஸ், சென்னை.

*  *  *

நான் மாணவனாக இருந்தபொழுது வயிற்று வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். தாங்கள் எனக்குக் கருணைகூர்ந்து பிரசாதம் அனுப்பிவைத்ததோடு ஜெபம் செய்வதற்கு ஓம் நமசிவாய மந்திர உபதேசமும் செய்து வைத்தீர்கள். நான் கடந்த மூன்று நான்கு ஆண்டு காலமாக முறையாக ஜெபம் செய்து வருகின்றேன். என்னுடைய உடல்நிலை மிகவும் சீரடைந்து இருக்கிறது. இப்பொழுது எனக்கு வலி ஒன்றும் ஏற்படுவதில்லை.

ஸ்ரீ கோபால் ராவ் பாபட்

*  *  *

எனக்கு முதலில் அனுப்பியிருந்த மதிப்புமிக்க பிரசாதம் முடிந்து அடுத்தநாள் உபயோகத்திற்குப் பிரசாதம் இல்லாத நிலையில் அன்றைய தினமே தங்களுடைய பிரசாதம் வந்து சேருமாறு திருவருள் கூட்டி வைத்திருந்தது அதுதான் எனக்கு மருந்து.

—ஸ்ரீ வித்யானந்தா (அட்கார் ராஜு)

*  *  *

9

இது விசித்திரமாகத்தான் இருக்கிறது! எனக்கு இருந்த நோய்கள் குணமடைந்துவிட்டன. தங்களுடைய கடிதம் எனக்குக் கிடைத்ததும் நான் அதிலிருந்த பஸ்பத்தைப் பூசிய உடனேயே என்னுடைய நோய் குணமடைந்துவிட்டது. தங்களுடைய சக்தியைக்கண்டு என்னுடைய குடும்பத்தார் அனைவரும் திகைப்படைந்தனர்.

—ஸ்ரீ திரியோல் சுஸ்வர் பருவா, ஜோர்ஹத்

* * *

சீடர்களின் அனுபவங்கள்

# இரண்டாம் பாகம்

## 35. சிவானந்தரின் பூலோக விஜயம்

### காசியில் சிவானந்தர்

கடந்த நள்ளிரவில் என்னுடைய அறையில் தாங்கள் தோன்றி காட்சி கொடுத்தமைக்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன். இப்பேற்பட்ட கௌரவமான விஜயத்திற்குப் பாத்திரமாக நான் என்ன செய்து விட்டேன்? வனத்தில் ஏகாந்தமாக இருக்கும் தங்களுடைய ஆஸ்ரமத்தை விட்டுத் தாங்கள் மறுபடியும் வெளிவர மாட்டீர்கள் என்றல்லவோ நான் நினைத்து விட்டேன். ஆனால் தாங்கள் ஒரு மகா யோகி, ஞானியினுடைய நம்பமுடியா அழகுடனும், மகிமையுடனும் காணப்பட்டீர்கள், வர்ணப் பளிங்குக் கல்லைவிட சிவப்பாக இருந்த தங்களுடைய முகம் தங்கள் ஒளி பொருந்திய கண்கள் இரண்டையும் இரண்டு சூரியர்கள் என்று வர்ணித்தது. தங்களுடைய ஒரு கரம் எனக்குத் தங்களுடைய அற்புதமான நூல்களைக் கொடுத்தது. மற்றொருகரம் கமண்டலத்தைப் பற்றியிருந்தது. குழந்தை போன்ற ஒப்பற்ற இனிய குரலில் பாடிக் கொண்டே அகன்று சென்றீர்கள். ஓம் நம: சிவாய என்று தங்களை அறிமுகப் படுத்தினீர்கள் ஆகவே தங்களுடைய அடையாளத்தைப் பற்றி இம்மியளவும் சந்தேகம் இல்லை. தாங்கள் நிலவொளியில்

சந்தோஷமாகத் திரும்பிச் சென்று மறுபடியும் இமய மலைக் காட்டில் தங்கள் இருப்பிடத்தில் தங்கியிருப்பீர்கள் என்று நினைக்கின்றேன்.

—ஸ்ரீ C. P. சக்ரவர்த்தி; பனாரஸ்

* * *

## கல்கத்தாவில் குருதேவர்

ஜூலை 23-ந்தேதி சனிக்கிழமையன்று இரவு 10 மணிக்கு நாங்கள் வழக்கம்போல் பஜனை செய்து கொண்டிருக்கும் பொழுது என்னுடைய மகள் முரளி யாரோ கதவைத் தட்டுவதைக் கேட்டாள். அவள் எழுந்து கதவைத் திறந்து பார்த்தபொழுது அவளைத் திகைக்க வைக்கும் வகையில் ஸ்ரீ குருதேவர் கையில் ஊன்று கோலுடன் அவளை நோக்கிப் புன்னகை புரிந்து கொண்டு நிற்பதைக் கண்டாள். அவள் இந்தத் திகைப்பிலிருந்து மீளுவதற்குள் ஒரு நிமிஷ நேரத்தில் ஸ்ரீ குருதேவர் உள்ளே நுழைந்து நேராக பஜனைக் கிடையிலேயே பூஜை அறைக்குள் சென்றுவிட்டார். சௌ: முரளி ஸ்ரீ குருதேவரின் அடிச்சுவட்டைப் பின் பற்றிக் கற்பூரத்தை உடனே பற்றவைத்தது எங்களுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணியது. ஏனெனில் பஜனைக்கிடையில் இம்மாதிரி கற்பூர ஆரத்தி எடுக்கும் வழக்கமில்லை. பஜனை முடிந்ததும் நான் முரளியை விசாரித்த பொழுது அவள் மேற்கூறிய சம்பவத்தை எடுத்துக் கூறினாள். அதைக்கேட்டு நான் பரவசத்தால் கட்டுக்கடங்காது போய்விட்டேன். குருதேவா, எங்களிடம் தாங்கள் காட்டிய எல்லையில்லாக் கருணையை என்னென்று சொல்வது? நான் தங்களுடைய கருணையையும் ஆசிகளையும் பற்றி கனவுகளில்

எனக்குப் பலவித அனுபவங்கள் ஏற்பட்டதுண்டு. ஆனால் முரளிக்குக் கிடைத்தது போன்ற தங்களுடைய தரிசனத்தைப் பெறும் பேற்றை யான் அடைய முடியாமல் போயிற்று. நான் அவளிடம் இதைப்பற்றித் தங்களுக்கு எழுதச் சொன்னபொழுது அவள் "ஸ்ரீ குரு தேவருக்கு எல்லாம் தெரியும் எழுதுவதற்கு என்ன இருக்கிறது?" என்று கூறினாள். இருப்பினும் என்னுடைய உள்ளத்தைத் தங்களிடம் திறந்து காட்டாமல் திருப்தியாக இருக்க முடியவில்லை. ஸ்ரீ பகவானிடம் அடியார்களாகிய எங்களுடைய தாழ்மையான விண்ணப்பம் என்னவென்றால் தாங்கள் எங்கள் மீது கருணை பாலித்து வர்ணிக்க வொண்ணாத அந்தப் பரமானந்த நிலையை அடைய எங்களுக்கு வழிகாட்ட வேண்டுமென்பதுவேயாகும்.

ஸ்ரீ சிவானந்த நீலகண்டன், கல்கத்தா

* * *

## பரோடாவில் சிவானந்தர் (1)

1956 ஆகஸ்ட் 30ந் தேதி என்னுடைய மனைவி சந்திரகாந்தா மாலை 3 மணி சுமாருக்கு ஒரு உறவினர் வீட்டிற்குச் சென்றிருந்தாள். தினந்தோறும் மாலை 3 மணியிலிருந்து 4 மணி வரை சந்திரகாந்தாவும், குடும்பத்திலுள்ள ஏனையோர்களும் சேர்ந்துகொண்டு

"ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே,
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே"

என்ற மகா மந்திர கீர்த்தனையைப் பாடுவதுண்டு. 3 மணிக்குச் சுவாமிஜி அவள் முன்பாகத் தோன்றி கீர்த்தனைக்கு நேரமாகி விட்டபடியால் அவளை

வீட்டிற்குச் செல்லும்படிக் கூறினார். அப்பொழுது அவள் பரவச நிலையில் மெய்மறந்திருந்தாள். சுவாமிஜி அவளுடைய வீட்டிற்கு ஓடுவதைக் கண்டதும் அவளும் சுவாமிஜியைப் பின் தொடர்ந்து வீட்டிற்கு ஓடினாள். வீடு வந்து சேர்ந்ததும் அவள் அங்கிருந் தோரிடம் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டாள். அவள் இன்னும் அசாதாரண நிலையிலேயே இருந்தாள். அவள் சுவாமிஜியின் படத்திற்கு முன் அமர்ந்தவுடன் அப்படத்திலிருந்து செய்தித்தாளில் சுற்றப்பட்டிருந்த ஒரு நூல் புடவை வெளிவந்தது. வீட்டிலிருந்த ஒரு சிலரும் இந்தச் சம்பவத்தைக் கண்ணாரக் கண்டனர்.

ஸ்ரீ சிவானந்த சுமந்த் பிரஸாந், பரோடா.

* * *

## பரோடாவில் சிவானந்தர் (2)

1955 செப்டெம்பர் மாதம் 15ந் தேதியன்று தாங்கள் எனது மகள் பிரேமிளாவுக்கு மாலை 5-30 மணியளவில் தரிசனம் கொடுத்தருளியிருக்கிறீர்கள். அவள் தங்களுக்கு சமைத்த காய்கறிகளையும் இரண்டு நிலக்கடலை உருண்டைகளையும் அளித்திருக்கிறாள். தாங்கள் எங்கள் மீது கருணை கூர்ந்து ஒரு உருண்டை யில் முக்கால் பாகத்தையும் காயில் ஒரு துண்டையும் எடுத்துக் கொண்டீர்கள். பிறகு தாங்கள் ஒரு நீண்ட (Fools cap) வெள்ளைக் காகிதத்தில் காலடிச் சுவட் டைப் பதித்துக் கொடுத்துக் கருணை பாலித்தீர்கள். பாதக்குறியைக் கொடுத்த பிறகு தாங்களே அந்தக் காகிதத்தின் மேல் பகுதியில் 'ஓம்' என்றும் கீழ்ப் பகுதியில் 'ஸ்ரீ' என்றும் எழுதினீர்கள். தாங்கள் அவளை ஆனந்த குடீரத்திற்கு வந்து தங்கள் தரிசனத்

தைப் பெறும்படிக் கூறினீர்கள். கமண்டலத்திலிருந்து ஒரு கை ஜலத்தை அளித்துவிட்டுத் தாங்கள் மறைந்து விட்டீர்கள்.

*ரமணிக்லால் பாரிக்,* பரோடா.

* * *

சென்னையில் சிவானந்தர்

பம்பாயைச் சேர்ந்த ஸ்ரீ P. அண்ணுசுவாமி ஐயர் என்பவர் இன்று காலை தாற்காலிமாக என்னை வந்து சந்தித்தார். எங்கள் சம்பாஷணைக்கிடையிலேயே நான் அவருக்கு எங்கள் தெய்வீக வாழ்க்கைச் சங்க மண்டபத்தைச் சுற்றிக் காட்டினேன். அவர் அம்பாபாய் தேவியினுடைய அத்தியந்த பக்தர். அவர் தங்களுடைய படத்தை உற்றுநோக்கியவாறு சில நிமிட நேரம் மனத்தை அதில் குவிய வைத்தார். அவர் தன்னை மறந்த நிலையை அடைந்து தங்களுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தது போல் தோன்றியது. இதை அவர் சமாதி நிலை கலந்ததும் உறுதிப்படுத்தினார்.

T. A. *ராமராவ்,*
தெய்வீக வாழ்க்கைச் சங்கம், சென்னை

* * *

நான் சென்னையிலுள்ள ஸ்ரீ ராமராவ் அவர்களின் வீட்டிற்குச் சென்றிருந்த பொழுது அவர் என்னை 10ந் தேதி செவ்வாய்க்கிழமை 11-40 மணிக்கு தெய்வீக வாழ்க்கைச் சங்க மண்டபத்தினுள் அழைத்துச் சென்று காட்டினார். நான் தங்களுடைய படத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தேன். சில

நிமிட நேரத்தில் தங்களை நேரில் கண்டேன். தங்கள் உடலின் எல்லா அங்கங்களிலிருந்தும் ஜோதிக் கிரணங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. உடனே நான் பாவ சமாதி நிலையை அடைந்தேன். அப்பொழுது நம்மிடையே ஏதோ சம்பாஷணை நடந்தது. அது எனக்குச் சரியாகத் தெரியவில்லை. நான் ஸ்ரீ ராமராவ் அவர்களை இந்த விஷயத்தைத் தங்களுக்கு தெரியப்படுத்தி உறுதிப் படுத்துமாறு கேட்டுக் கொண்டேன். நான் ஒரு சாதாரண மனிதன். ஸ்ரீ அம்பாஜியினால் எனக்குச் சில சக்திகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதன் மூலம் அல்லல்படும் மானிட வர்க்கம் ஓரளவு ஆறுதலைப் பெறுகின்றது.

ஸ்ரீ P. அண்ணுசாமி, B.A.,
அக்கௌண்டன்ட் சென்ட்ரல் ரயில்வே, V. T. பம்பாய்.

* * *

ஜோஹன்னஸ்பர்க்கில் சிவானந்தர்

பிப்ரவரி 2ந் தேதி மாலை நான் தங்களைக் கண்டேன். தாங்கள் எனக்கு முன் நின்றுகொண்டிருந்தீர்கள். தாங்கள் சர்க்கரை சாப்பிடக் கூடாது என்று நான் கூறினேன். அதற்குத் தாங்கள் "நான் சர்க்கரை சாப்பிடலாம்" என்று கூறினீர்கள். பிறகு தாங்கள் என்னைப் பார்க்கவே நான் தங்களுடைய தெய்வீக சக்தியை உணர்ந்தேன். நான் இதற்கு முன் எப்பொழுதும் இருந்ததைவிடத் தற்பொழுது தங்களுக்கு மிகவும் சமீபத்தில் இருப்பதாக உணர்கின்றேன். இதுபோல நான் தங்களுடைய தரிசனத்தை அடிக்கடி பெறவேண்டுமென்று விரும்புகின்றேன்.

குருதேவா, தங்களுடைய கடிதங்களைக் காண நான் மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். அவைகள்

ஞானபொக்கிஷமாக இருப்பதால் நான் அவற்றைப் படிக்குந்தோறும் புதுப் புதுக் கருத்துக்கள் எனக்குத் தோன்றுகின்றன. தாங்கள் எனது கேள்விகள் அனைத்திற்கும் பதில் கூறி இருக்கிறீர்கள்.

ஸ்ரீ ஒட்டி.ஃ.ப்ரீட்மேன், ஜோஹன்னஸ்பர்க்.

* * *

## அக்ரா (Accra)வில் சிவானந்தர்

சுவாமிஜி எனக்கு நவம்பர் 1954ல் எழுதிய கடிதத்தின் மூலம் எனக்கு அளித்திருக்கும் உபதேசங்களுக்கும், ஆசிகளுக்கும், காட்டியிருக்கும் வழிகளுக்கும் நான் மிகுந்த நன்றியுடையவனாக இருக்கின்றேன். நான் கண்ட காட்சியில் சுவாமிஜி அவர்கள் பல அன்பர்களுக்கும் பக்தர்களுக்கும் வெகுமதிகள் வழங்கிக் கொண்டிருக்கக் கண்டேன். பிறகு அவர் என்னுடைய வலது மணிக்கட்டைப் பற்றிக்கொண்டு புன்முறுவல் பூத்தவண்ணம் என்னோடு கைகுலுக்கினார். பருவ காலத்தில் மரங்கள் இலைகளை உதிர்ப்பது போலவும், பறவைகள் இறகுகளை உதிர்ப்பது போலவும் சுவாமி சிவானந்தஜி உடலைப் பூர்ணமாக்கவும் இன்னும் செய்யவேண்டிய மாபெரும் வேலைகளுக்காக ஆன்மாவைத் தூய்மையாக்கவும் தன்னுடைய உடலிலுள்ள நோய்களை உதிர்த்து விட்டிருக்கிறார்.

G. C. அக்வெட்டி கோட்டி, அக்ரா.

• • •

## ஸ்விட்ஜர்லாந்தில் சிவானந்தர்

அன்புள்ள சிவானந்தஜி நாங்கள் தங்களைச் சில ஆண்டுகளாகவே அறிந்திருக்கின்றோம். நாங்கள் எங்களுடைய சகோதரராகிய உங்களையும் மனித வர்க்கம் முழுவதற்கும் தாங்கள் ஓயாது செய்துவரும் தன்னலமற்ற சேவைகளையும் நேசிக்கின்றோம். ஒரு வருடத்திற்குமுன் எனக்கு ஒரு அனுபவம் ஏற்பட்டது. நான் திடுக்கிட்டு எழுந்து பார்த்தபொழுது தங்களை என் முன் கண்டேன். தாங்கள் இப்பொழுது ஆண்டவனைத் துதிக்கவும், அவருக்கு நன்றி செலுத்தவும் உரிய நேரமாகி விட்டது என்று கூறினீர்கள். ஒரு புதுமையான அமைதி என்னிடத்தில் ஏற்பட்டதை உணர்ந்தேன்.

*ஸ்ரீமதி மார்க்ரெட் விட்ஜிக் பெர்ன், ஸ்விட்ஜர்லாந்து.*

* * *

## ஜெக்கோஸ்லோவேக்கியாவில் சிவானந்தர்

தங்களுடைய அழகான புகைப்படத்தையும், மதிப்புமிக்க நூல்களையும் எனக்கு அனுப்பி வைத்தமைக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். புத்தகப் பார்சல் வந்த அன்றைய தினம் குதூகலமான நாட்களில் ஒன்முக இருந்தது, நான் தங்கள் திருமுகத்தைப் பார்த்துக் கொண்டிருந்கும் பொழுதே சக்திமிக்க ஆன்மீக ஓட்டத்துடன் கூடிய தங்கள் கருணையை நான் உடனே உணர்ந்தேன். அது என்னுடைய சாதனைக்கு மிகுந்த உதவியாக இருந்தது. என்னுடைய ஐக்கிய நிலை நாளுக்கு நாள் ஆழ்ந்து செல்கிறது. தங்களைப் பற்றிய காட்சிகள் எனக்கு ஏற்பட்டிருக்கின்றன. முதலில்

ஏற்பட்ட காட்சியில் தாங்கள் பூர்ண சூரிய பிரகாசத்துடன் சில கட்டிடங்களுக்கு முன் சிலருடன் நின்று கொண்டிருந்தீர்கள். தாங்கள் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்து நிற்கையில் திடீரென்று தங்களுடைய வலது கை மேலே உயர்ந்தது. மற்றொரு காட்சியில் தாங்கள் ஆசனத்தில் அமர்ந்தீர்கள். உடனே எழுந்து நின்றீர்கள். நான் மறுபடியும் இரண்டு தடவைகள் தங்களைப் பார்த்தேன். இந்தக் காட்சிகள் எல்லாம் எனக்குக் காலை 6 மணியிலிருந்து 7 மணிக்குள்ளாக ஏற்பட்டன.

தினந்தோறும் நான் அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு தங்களுடைய கீர்த்தனைகளைப் பாடும் பொழுது அற்புதமான பாவ சமாதி நிலையை அடைகின்றேன். நான் "வாழ்க்கையின் லக்ஷியமும் அதை அடையும் வழியும்" ("Goal of life and its Attainment") என்கின்ற தங்களுடைய புத்தகத்தில் தாங்கள் 1954 மார்ச் மாதம் டேராடூனிற்கு விஜயம் செய்திருந்த போது ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பாடியதாகப் படித்தேன். நான் முன்னைவிட அதிகமாக பாட முயற்சித்த பொழுது அது அற்புதமாக இருந்தது. இது தங்களுடைய புதிய புத்தகத்திலிருந்து கிடைத்த அருமையான உபதேசமாகும். நான் தினந்தோறும் மஹா மந்திரத்தை ஜெபித்து வருகின்றேன். தங்களுடைய அன்புகூர்ந்த பாதுகாப்பிற்கு நன்றிகள் பல உரித்தாகுக.

தங்களுடைய அன்பு கலந்த ஜூலை 1-ந் தேதிய கடிதத்திற்கு அநேக நன்றிகள். தங்களுடைய கடைசி கடிதத்துடன் ஒரு பெரிய ஆன்மீக அலையும் வந்தது. அது எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. என்னுடைய முன்னேற்றம் நல்ல முறையில் இருக்கிறது. குறிப்பாகத் தாங்கள் கூறியபடி தங்களுடைய ஆன்மீக

அலைகளை அனுப்பும்போது மிகவும் நன்றாக இருக்கிறது. தங்களுக்குப் பல நன்றிகள். என்னை ஆன்மீகத் துறையில் இவ்வளவுதூரம் பாதுகாத்து வருவதற்காக நான் நன்றி செலுத்துகின்றேன். தங்கள் கருணை என்மீது எப்பொழுதும் இருந்து வருகிறது. மிகுந்த பக்தி சிரத்தையுடன் தங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன்.

நான் படிப்பதற்காகத் தங்கள் அன்பு கூர்ந்து அனுப்பி வைத்துள்ள மதிப்பு மிக்க நூல்களை தினந்தோறும் படித்து வருகின்றேன். ஆகவே நான் எப்பொழுதும் தங்களுடனேயே இருப்பதாக உணர்கின்றேன். நான் தங்களுடைய அழகான படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதோ அல்லது தங்களை நினைத்த மாத்திரத்திலோ தங்களுடைய அபாரமான ஆன்மீக அலைகளை உணர்கின்றேன். இது எனக்காகச் செய்யப்படும் மாபெரும் உதவியாகும்.

—புரொபஸர் கரேல் V. L. K. டர்னேவ்,
ஜெக்கோஸ்லோவேக்கியா.

* * *

## ஜெர்மனியில் சிவானந்தர்

தங்களுடைய கடிதம் கண்டு பெருமகிழ்வெய்துகின்றேன். மிக்க நன்றி. நான் பாரதம் வருகின்றேன். முதன்முதலில் நான் ஆங்கிலம் இன்னும் சரளமாகக் கற்றுக் கொள்ளவேண்டும். தங்களுடைய அன்பிற்கு நன்றி செலுத்துகின்றேன். நான் பிறகு முன்னேறக் கூடும் என்கின்ற நம்பிக்கையும் அதற்குரிய பொறுமையும் என்னிடம் இருக்கிறது. 1948–49-ல் எனக்கு இரவில் ஒரு காட்சி ஏற்பட்டது. இப்பொழுது ஞாபகத்திற்கு வருகிறது. நான் தங்களை ஸ்தூல வடி

வத்தில் வெள்ளை ஆடையுடன் இருந்ததை அப்படியே கண்டேன். தாங்கள் ஒரு பெரிய மண்டபத்தில் பெரும் திரளான மக்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தீர்கள். இப்பொழுது தங்களுடைய படத்தைப் பார்க்கின்றேன். இந்தப் புகைப்படம் நான் கண்ட அதே காட்சியின் பிரதி பிம்பமாக இருக்கிறது.

ஸ்ரீமதி ஸ்டியூர் நகேல்—ஷெய்ட் (Mrs. Steuernagel-Scheiatt)
டஸ்ஸல்டார்ப், ஜெர்மனி.

* * * *

## இங்கிலாந்தில் சிவானந்தர்

"சிந்தீஸ் யூனிவர்ஸேல்" (Synthese universelle) ஆசிரியரும் எனது உயிர் நண்பரும் சகோதரருமான டாக்டர் ஷ்னெய்டர் (Dr. Schneider) அவர்களுடன் கடிதப் பரிவர்த்தனை செய்து கொள்ளும்படியான வாய்ப்பு எனக்குச் சமீபத்தில் கிடைத்தது. அவர் ஐரோப்பாவிலுள்ள பல தேசங்களிலும் தெய்வீக-வாழ்க்கைச் சங்கத்திற்கு ஒரு சர்வதேசப் பிரதிநிதிக் குழுவை (International Body of Representatives) ஏற்படுத்துவதற்கான முன்னேற்பாடுகளைப் பற்றி எனக்குத் தெரிவித்திருந்தார். இங்கிலாந்து தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் உதவித் தலைவர்கள் பதவி வகிக்கும் பொருட்டு என்னையும், என்னுடைய தோழர் எலியனூர் அப்டன் அவர்களையும் குறிப்பிட்டிருந்தார். பெறுதற்கரிய இந்தக் கௌரவத்தை ஏற்றுக் கொள்ள நாங்கள் உளம் பூரித்து எங்களுடைய அபிப்பிராயத்தை அவருக்குத் தெரியப் படுத்தினோம். இந்த முக்கியமான ஆன்மீக சேவை செய்வதில் நாங்கள் சந்தோஷமடைகின்றோம்.

எங்களுடைய இதயத்துடிப்பிற்குச் சமமானவரும், எங்களுடைய கனத்திற்குரியவரும், மிகவும் போற்றப் படுபவருமாகிய தங்களுடைய ஆசிகள் நிறைந்த உபதேசங்கள், ஒத்துழைப்பு, விரிந்த அன்பு நிறைந்த உள்ளம் ஆகியவற்ருேடு, சேர்ந்து இறைவனுக்குந் தொண்டாற்றுவதைவிட வேறு சிறந்த வழி எது இருக்க முடியும்? இந்தத் தெய்வீக லட்சியத்திற்காக நான் தங்களுடன் என்னுலியன்ற அளவு தொண் டாற்றத் தயாராக இருக்கின்றேன். நான் தங்களைச் சந்தித்து ஏராளமான ஆன்மீக விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டுமென்கின்ற ஆவல் நிறைந்தவனுக இருக்கின்றேன். இந்த எண்ணம் ஒரு நாளைக்குக் கைகூடும் என்று நம்புகிறேன்.

எனக்கும் எலியனுர் அப்டன் அவர்களுக்கும் தங்களைப்பற்றிய தெளிவான கனவுக் காட்சிகள் ஏற்பட் டிருக்கின்றன. அதில் நாங்கள் தங்களைப் பார்த்துப் பேசி யிருக்கின்ருேம். கிருஸ்துமஸ் பண்டிகைக்கு ஒரு சில வாரங்களுக்கு முன் இதுமாதிரியான ஆன்மீக அனுபவம் ஒன்றில் நான் தங்களை அணுகி தாங்கள் என்னிடம் மிகுந்த தாராள மனப்பான்மையுடனும் அன்புடனும், இருப்பதாகவும் என்னுடைய தகுதிக்கு மேல் தங்கள் வழங்கி இருப்பதாகவும் கூறினேன். அன்பு கலந்த தங்களுடைய பதில் கீழ்க்கண்டவாறு உறுதியானதாக இருந்தது. "ஆம், எனக்குத் தெரியும் நான் உங்களைச் சோதித்துப் பார்த்தேன். அதனுல் உங்களுடைய போக்கு எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்க விரும்பினேன்." சில வாரங்களுக்குப்பின் தலைமைப் பதவியைப் பற்றி டாக்டர் ஷ்னெய்டரிட மிருந்து வந்த கடிதத்திலிருந்து நான் இதை அறிந்து கொண்டேன். ஆகவே இதற்கு அதனேடு ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று ஆச்சரியப் படுகிறேன்.

பிறகு மறுபடியும் கிருஸ்துமஸ் சமயத்தின் போது ஒருநாள் விடியற்காலையில் மாஸ்டர் மோர்யா (Master Morya) அவர்களின் ஆவிவடிவத்தை எலியனுர் அப்டன் அவர்கள் கண்டார். இந்தப் பொதுச் சேவையில் நாங்கள் தங்களுடன் இணைந்து கொள்ளவேண்டும் என்பது திட்டத்தின் ஒரு பகுதி என்றும் அவர் கூறினுர். அதி முக்கியத்துவம் வாய்ந்த இந்த ஆன்மீகக் கூட்டுத் திட்டத்திற்குப் பின் இந்த குரு வேலை செய்து வருகின்றுர் என்று நாங்கள் யூகித்துக் கொண்டோம். அதன் பிறகு எனக்கு ஏற்பட்ட மூன்று தெளிவான கனவுகளில் தாங்கள் தோன்றினீர்கள். இந்த விஷயங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்த பொழுது இவைகள் எல்லாம் தாங்கள் தொலைதூரத்தில் இருந்து கொண்டு செய்யும் அற்புதங்கள் என்றும் தங்களுடைய எண்ண அலைகள் எங்களுடைய அந்தரங்க உணர்வின் வழியாக அடிமனத்தின் சில பகுதிகளைக் கிளறி விடுவதனுல் நாங்கள் காட்சிகள் ரூபத்தில் தெளிவான படப்பதிப்புகளைக் காண்கிறேம் என்ற முடிவுக்கு வந்தேன்.

எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய நண்பர் அவர்களே, எனக்கும், எலியனுர் அப்டன் அவர்களுக்கும் வாழ்க்கையின் ஒரே லட்சியமாக இருப்பது தங்களைப் போலவே எங்களுடைய அன்பர்களுக்கு ஒளி, அன்பு, சாந்தி ஆகியவற்றைக் கொடுப்பதின் மூலம் மானிட வர்க்கத்திற்குச் சேவை செய்வது தான் என்பதைத் தங்களுக்கு உறுதியாகக் கூற விரும்புகின்றேன்.

கடந்த சில ஆண்டுகளாக என்னுடைய பேச்சுக்களின் போது நான் என்னுடைய மாணுக்கர்களிடம் தாங்கள் ஒரு தெய்வீக ஞான ஊற்று என்று தங்களைப் பற்றி அடிக்கடி கூறிவந்திருக்கிறேன் எங்களுக்கு

முறையாக அனுப்பப்பட்டு வரும் தங்களுடைய புத்த கங்களும் சஞ்சிகைகளும் இங்கு வெகுவாகப் பாராட் டப்படுவதுடன் தங்களுடையபுனித ஆஸ்ரமத்தொடும் அதன் அற்புதமான வேலைகளோடும் தொடர்பு வைத்துக்கொள்ள வாய்ப்பளிக்கின்றன.

ஜோஸப்
'தி வாய்ஸ்'
ஸஸ்ஸெக்ஸ், இங்கிலாந்து

* * *

நியூ யார்க்கில் சிவானந்தர்

மதிப்பிற்குரிய ஸ்வாமிஜி மஹராஜ்,

சமீபத்தில் தங்களுடைய மாட்சிமை மிக்க காட்சி யொன்றைப் பெற்ற நான் பலத்த யோசனைக்குப் பின் இக்கடிதத்தைத் தங்களுக்கு எழுதுவது என்று தீர்மா னித்தேன். என்னுடைய குழந்தைப் பருவத்தி லிருந்தே யோகத்தைப் பற்றியும், அது சம்பந்தப்பட்ட விஷயங்களும்தான் எனக்கு உற்சாக மூட்டுவனவாக இருந்து வந்திருக்கின்றன. நான் (ஒரு வெள்ளை ரஷியனாக) சைனாவில் பிறந்து வளர்ந்து வந்தபோதே தங்களுடைய நூல்களோடு தொடர்பு கொண்டிருக் கின்றேன். கடந்த 12 ஆண்டுகாலமாக பல ஆசிரியர் களிடம் யோகத்தைப் பயில முயற்சி செய்திருக்கிறேன். துரதிருஷ்டவசமாகத் தகுதிபெற்ற ஆசிரியர்கள் யாரும் கிடைக்கவில்லை இப்பொழுது தங்கள் சீடரான, யோகி ராஜ் ஸ்ரீ ஹாரி டிக்மென் அவர்களைச் சந்திக்கின்ற வாய்ப்பு கிடைத்ததை எண்ணி மகிழ்ச்சி அடை கின்றேன். எனது வழக்கமான யோகாப் பியாசங்களை முடித்துக்கொண்டு நான் தியானம் செய்ய ஆரம்பித்த

பொழுது திடீரென்று தங்களுடைய திருவுருவம் என் முன் தோன்றி ஒரு ஊன்று கோலின்மீது சாய்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தது. அன்று நான் தங்களைப் பற்றியோ அல்லது வேறு யாரையும் பற்றியோ நினைக்க வில்லை என்பது இங்கு முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது. நான் குறிப்பாகக் கண்களினின்று வீசிய ஒளியினால் மிகவும் கவரப்பட்டேன். உருவத்தைச் சுற்றி ஒரு புதுமையான ஒளி வீசிக் கொண்டிருந்தது. அது மாபெரும் சக்தியை அதிகரிக்கச் செய்தது. அது வார்த்தைகளைக் காட்டிலும் தெளிவாக அந்தரங்க ஞானத்தை எடுத்து விளக்கிக் கொண்டிருந்தது. அந்த உருவம் கையை உயர்த்தி படத்தின் பின்னணியி லிருந்த பனிமூடிய மலைகளைச் சுட்டிக் காட்டியது. நான் இத்தனை ஆண்டுகாலமாக எதற்காக ஏங்கிக் கொண்டிருந்தேனோ அது அங்கே இருக்கிறது என்று சுட்டிக்காட்டுவதைப் போல இருந்தது. பிறகு நான் தங்களுடைய மற்றொரு கரத்தில் அழகான கருநிறம் பொருந்திய தாமரை மலர் வடிவைப் போன்றதொரு சாம்பிராணிச் சிமிழ் இருந்ததைப் பார்த்தேன். அதன் மீது சிறு குமிழ் ஒன்று இருந்தது. அதைத் தாங்கள் என் பக்கமாக ஆட்டிய பொழுது நான் வாசனைப் புகை மண்டலத்தால் சூழப்பட்டேன். திடீரென்று தங்களைச் சுற்றிலும் நீண்ட கறுப்பு அங்கியையும் நீண்ட கூர்மையான முனையையுடைய கருப்புத் தொப்பிகளையும் அணிந்த விசித்திரமான உருவங்கள் தங்கள் முன் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கின. அவர்கள் தங்களை மையமாகக் கொண்டு வட்ட வடிவமாக அமர்ந்திருந்தனர். அந்தக் காட்சியானது சிறிது நேரம் நீடித்திருந்தது. ஆனால் வார்த்தைகள் எதுவும் பரிமாறிக் கொள்ளப்படவில்லை. அது

முற்றிலும் உண்மையாகவும், நிச்சயமானதொரு செய்தியை அறிவிப்பதாகவும் இருந்தது. தாங்கள் எனக்கு வழி காட்ட வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

*டமாரா பூர்கௌன், நியூயார்க்.*

* * *

தென் அமெரிக்காவில் சிவானந்தர்

ஒன்றரை ஆண்டுகட்கு முன் ஒரு நாள் மாலையில் நான் கிழக்கு நோக்கி என்னுடைய அறையில் சாதனை செய்து கொண்டிருக்கும் பொழுது எனக்கு ஒரு அதியற்புதமான அனுபவம் ஏற்பட்டது. திடீரென்று தாங்கள் தங்களுடைய திருக்கண்களால் என்னை உற்று நோக்குவதைக் கண்டேன். தங்களுடைய உதடுகள் அசைந்தன. ஆனால் சப்தம் கேட்கவில்லை. நான் மேலும் நன்றாக உற்றுநோக்கிப் பார்க்க முயற்சிக்கையில் தாங்கள் மறைந்து விட்டீர்கள்.

மற்றொரு சமயம் நான் தங்களுடைய ஆலோசனையின்படி ஒருநாள் காலையில் யோகத்தைப் பயின்று கொண்டிருக்கும் பொழுது தாங்கள் என்னுடைய படுக்கையின் கால்புறம் நின்றுகொண்டு, பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து சாதனையைத் தொடங்குங்கள் என்று எனக்குக் கட்டளையிட்டதையும் கண்டேன்.

உண்மையாகவே இறைவனுடைய வழிகள் விசித்திரமானவைகளாக இருக்கின்றன. இவைகள் எல்லாம் நம்பிக்கை இல்லாதவர்களால் நம்பமுடியாத அற்புதங்களாகும். சுவாமிஜி நீடூழி காலம் வாழ்ந்து மானிட வர்க்கத்திற்கு ஆன்மீக வழியைக் காட்டி உய்விப்பாராக.

ஸூஸானே ஓரிட்ஜ்.

## ஆஸ்திரேலியாவில் சிவானந்தர்

ஞாயிறு இரவு தாங்கள் எனக்கு முன் தோன்றினீர்கள். தங்களுடைய கண்கள் விசாலமானதாகவும், பிரகாசத்துடனும், ஊடுருவிப் பாயக் கூடியதாகவும் இருந்தன. அவைகள் என்னை நேராகத் துளைத்துக் கொண்டு செல்வனபோல் காணப்பட்டன. ஒரு மின்சார சக்தி என் உடல் முழுவதும் பரவியதைப் போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. பிறகு ஒரு ஒளி தோன்றியது. அது ஒரு புள்ளி வடிவாகி பிறகு மறைந்தது. என்னுடைய நினைவில் இருக்கின்ற கடைசி விஷயம் எனது உடலில் ஏற்பட்ட ஒரு சல சலப்பாகும். நான் பூர்ண நினைவை இழந்தேன். அது நான் ஒரு சூன்ய சமுத்திரத்தினால் விழுங்கப் படுவதுபோல் இருந்தது. அப்பொழுது நான் மூர்ச்சை யற்று இருந்த காரணத்தால் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது.

மூன்று நாட்களுக்குப் பிறகு தாங்கள் மறுபடியும் என்முன் தோன்றினீர்கள். நீங்கள் பிரயாணத்திற் கான் கம்பளி ஆடைகளை உடுத்தியிருந்தீர்கள்.

அன்பார்ந்த ஆத்மன், தாங்கள் அனுப்புகின்ற தெய்வீக எண்ணக் கிரணங்கள் காரணமாக எனக்குத் தங்களிடம் எல்லையற்ற விசுவாசம் ஏற்படுகிறது. தங்களுடைய ஆக்ஞா சக்கரத்திலிருந்து கிளம்பும் இந்தக் கிரணங்களைப் பார்க்கும்பொழுது அவைகள் அழகான ஒளிக் கிரணங்களைப் போல் தோன்று கின்றன. சக்தி மிக்க இவ்வலைகள் பெரும் உதவியாக இருக்கின்றன. அவை எங்களுக்குத் தக்க சமயத்தில் காரியத்தை வெற்றிகரமாக முடிப்பதற்கு உதவி புரிகின்றன. தங்களுக்கு மிக்க நன்றி.

தங்களுடைய பிறந்த தினத்தில் பேரானந்தம் ஏற்பட வேண்டுகின்றேன்.

இறைவன் தங்களுக்கு எப்பொழுதும் நல்ல ஆரோக்கியத்தையும் நீண்ட ஆயுளையும் அளிப்பாராக.

மாட் E. வில்ஸன், ஆஸ்திரேலியா

* * *

தாங்கள் அனுப்பி வைத்த நூல்களுக்காக மிக்க நன்றி. அவைகள் ஏற்கனவே பலர் கைகளுக்குச் சென்று பெரும் நன்மைகளை உண்டுபண்ணி வருகின்றன. துண்டுப் பிரசுரங்கள் இங்கிலாந்து, பிலடெல்பியா, பிரேஸில், ஜெர்மனி மற்றும் இதர நாடுகளுக்கும் அனுப்பி வைக்கப்பட்டிருக்கின்றன. சில பிரசுரங்கள் சிட்னியிலுள்ள கடைகளில் விநியோகிக்கப்பட்டுள்ளன. நான் நேர்முகமான உள்ளுணர்வினால் வழி காட்டப்படுகின்றேன். சிறு வெளியீடுகள் மிகச் சிறந்தவைகளாக இருக்கின்றன என்று பொது மக்களால் பாராட்டப்படுகின்றன. இந்தத் தெய்வீக உதவிக்குத் தங்களுக்கு மிக்க நன்றி.

என்னுடைய ஆழ்ந்த தியானத்தின் போது தாங்கள் எனது அறையில் தோன்றி நாற்காலியின் வலப்புறத்தில் நின்றீர்கள். தாங்கள் தங்களுடைய கரத்தை மூலாதார சக்ரத்திலிருந்து மேல் நோக்கி நகர்த்தினீர்கள். சக்தியானது சமீப கேந்திரங்கள் எல்லாவற்றினுள்ளும் நகர்ந்து சென்றது. எல்லா கேந்திரங்களிலும் தாங்கள் ஓம் என்று சொன்னதைக் கேட்டேன். அது அற்புதமாக இருந்தது. ஓம் ஓம் ஓம். தங்களுடைய படத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதாலேயே எனக்குத் தெம்பும் தெய்வீக சக்தியும்

ஏற்படுகிறது. ஓம் ஓம் ஓம். அதிர்ஷ்டக் குறைவான சகோதர சகோதரிகளுக்கு உதவுவதற்கான அந்தரங்க பலத்தை அளிக்குமாறு வேண்டுகின்றேன். பகவான் தங்களுக்கு இமயமலையின் பலத்தை அருளுவாராக. அதனால் தங்கள் சமீப உடல் நலக் குறைவிலிருந்து சுகம் பெறுவீராக. சாசுவதமாக ஆரோக்கியத்திலும் பலத்திலும் பெரியவராக இருப்பீராக. வேதங்களின் புனித சக்தி மற்றவர்களின் கர்மங்களிலிருந்து தங்களைக் காப்பாற்றுவதாக.

மற்றொரு புத்தகக் கட்டிற்காக மிக்க நன்றி. அவற்றைப் பலர் படித்து வருகின்றனர். அவைகள் பொது மக்களிடம் பெரு நன்மையை விளைவித்து வருகின்றன. அவைகள் தேச முழுதும் தங்களுடைய தெய்வீக அன்புச் செய்தியைப் பரப்பிக் கொண்டிருக்கின்றன. நூல் நிலையம் பொது முன்னேற்றத்தை அடைந்து கொண்டிருக்கிறது. நான் வருத்தப்பட்டேன். தங்களுடைய கடிதம் எனக்குக் கிட்டவில்லை. சிட்னியிலுள்ள நூற்றுக்கணக்கான மக்களில் அதிருஷ்டவசமாக அக்கடிதம் ஒரு வேதாந்த மாணவியிடம் கிடைத்திருந்தது. அதை அவர் அன்புடன் திருப்பி யனுப்பி விட்டார். தங்களுடைய கடிதத்தின் புனித அலையே அதற்கு வழிகாட்டக் காரணமாக இருந்தது. மேலும் அக்கடிதத்தைப் பெற்ற மாணவிக்கும் அது உதவி புரிந்திருக்கிறது. அவருக்கு ஒரு விபத்து ஏற்பட்டிருந்தது. அவர் தங்கள் கடிதத்தைப் பார்த்தபொழுது டாக்டரைப் பார்த்துவிட்டு வீடு திரும்பி வந்துகொண்டிருந்தார். கடிதத்தை என்னிடம் திருப்பிக் கொடுத்தமைக்கு நான் அந்த அம்மையாருக்கு மிகவும் நன்றி செலுத்தினேன். கடவுள் விசித்திரமான வழிகளில் வேலை செய்கின்றார். இது

எல்லாம் அற்புதமே. தங்களுடைய தெய்வீக உதவிக்கு மிக்க நன்றி.

அன்பார்ந்த சிவானந்தஜி, தங்கள் மருத்துவமனையிலிருந்து சிறிது விபூதிப் பிரசாதம் அனுப்பி வைப்பீர்களா? எனக்குத் தாங்கள் அளித்திருக்கும் தெய்வீக உதவிக்கும் பாதுகாப்புக்கும் மிக்க நன்றி. பேரானந்தமும், மங்களகரமுமே வடிவான தாங்கள் உலகெங்கிலுமுள்ள பக்தர்களுக்குப் பரமானந்தத்தை அளித்து வருகின்றீர்கள். தங்களுக்குக் சாஷ்டாங்க நமஸ்காரங்கள். ஆண்டவன் தங்களுக்கு எப்பொழுதும் நல்லாரோக்கியத்தை அருளுவாராக. ஓம் ஓம் ஓம்.

### அனுபவங்கள்

நான் சனிக்கிழமை இரவு ஸ்ரீ ஜங், ஸ்ரீ ஸ்மித் ஆகியோருடன் தியானத்திலிருக்கும் பொழுது தாங்கள் மூன்று முறை தோன்றினீர்கள். முதல் முறை தாங்கள் தோன்றிய பொழுது தங்களுடைய சந்நிதானத்தை நன்ருக உணர்ந்தேன். என்னுடைய முகத்திலுள்ள தசைகள் மாறுவதையும், உடல்முழுவதிலும் ஒருபூரண மாற்றத்தையும் உணர்ந்தேன். ஒரு முறை தங்களுடைய இடது கையில் ஒரு இறகுப் பேனவை வைத்துக் கொண்டு நாற்காலியின்மீது கைகளை ஊன்றிக் கொண்டு நிற்பதைக் கண்டேன். அந்தக் காலத்து இறகுப் பேன புராதனக் கருத்துக்களை எடுத்துக் கூறுவதுபோல் இருந்தது. அந்தச் சக்தியானது என்னை நாற்காலியை விட்டுத் தூக்குவதைப் போலவும் அந்தச் சமயத்தில் நான் எழுந்து நிற்கலாம் என்றும் தோன்றியது. அது ஒரு அற்புதமான இரவு.

தாங்கள் எனக்கு வார்த்தையால் எடுத்தியம்ப முடியாத அளவுக்கு உதவி புரிந்திருக்கின்றீர்கள்.

நான் மனப்பூர்வமாக தங்களுக்கு நன்றி செலுத்து கின்றேன். தங்களுடைய பிரார்த்தனைகள் எனக்கு வழிகாட்டி யிருக்கின்றன. இந்தப் பிறவியில் எனக்கு உற்ற தோழர் தாங்கள் ஒருவரன்றி வேறில்லை. தாங்கள் ஆரோக்கியம், பலம், நீண்ட ஆயுள் ஆகியவற்றுடன் நீடூழி வாழ்வீராக.

M. E. வில்ஸன் ஆஸ்திரேலியா.

* * *

ஜூலை 12-ந்தேதி என்னுடைய ஆவி உடலை பிரிந்து மன நோயால் அவஸ்தைப் படுவர்கள் நிறைந்த ஒரு அறைக்குள் நுழைந்தது. ஒரு மாது மன நோயால் மிகவும் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார். அவர் இனிமேல் ஒருபொழுதும் தான் குணமடையப் போவதில்லை என்று கூறினார்.

நீங்கள் ஏற்ற இடத்திற்கு வந்திருக்கிறீர்கள் என்று அவர் ஆங்கிலத்தில் கூறினார். அவருடைய கூந்தல் கருமையாகவும் முகம் பொலிவிழந்து வெளுமை யாகவும் கவலை தோய்ந்தும் காணப்பட்டன. அந்த அறை சிறியது. அதனுள் தாங்களும் நுழைந்தீர்கள். அப்பொழுது சொர்க்கமே அவ்விடத்தில் இருந்ததைப் போலக் காணப்பட்டது. என்னுடைய ஜீவன் உயர்த்தப் படுவதை உணர்ந்தது. பிறகு தாங்கள் அறையின் இடது புறத்தில் அந்த நோயாளிப் பெண் அமர்ந்திருந்த இடத்திற்குப் பக்கத்திலிருந்த கதவு வழியாக அறையை விட்டு வெளியே சென்றீர்கள்.

அந்தச் சமயத்தில் ஒரு பெண்மணி தோன்றினார். அவர் துன்பமே வடிவாக இருந்தார். அவருடைய துன்பம் கீழே குற்றுயிராகக் கிடத்தி வைக்கப்பட் டிருந்த ஒரு குழந்தையோடு சம்பந்தப் பட்டதாகக்

காணப்பட்டது. அவர் திரும்பி ஓடிவிட்டார். தாங்கள் மும்முறை அக்குழந்தையைப் பெயர் சொல்லி அழைத்து அதனுடன் பேசினீர்கள். தாங்கள் அக் குழந்தையின் ஆத்மனுக்கு விடுதலை அளித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்ற எண்ணம் அப்பொழுது எனக்குத் தோன்றியது. பிறகு தாங்கள் அக்குழந்தை யின் சடலத்தை எடுத்துக் கொண்டு சென்றுவிட்டீர் கள். இந்தப் புனித அனுபவத்தைக் காண்பதற்கு என்னை அனுமதித்தது எனக்கு ஒரு பேறு ஆகும்.

இரவு வகுப்பின் போது தாங்கள் வகுப்பிற்கு வந்து ஸ்ரீஜங் அவர்களுக்குப் பக்கத்தில் நின்று கொண்டீர்கள். தாங்கள் அவருக்குப் பலத்தையும் சக்தியையும் அளித்துக் கொண்டிருந்தீர்கள் என்ற எண்ணம் எனக்கு உதித்தது. தாங்கள் தங்களுடைய கரங்களை அவருடைய தோள்களின்மீது வைத்தபொழுது அந்தப் புனித அதிர்ச்சியை நாங்கள் பெற்றோம். இந்த அனு பவத்திற்குப் பிறகு நாங்கள் உயர்த்தப் பட்டதுடன் பேரானந்தமும் அடைந்தோம்.

ஸ்ரீமதி மாட் வில்ஸன்
ஹர்ஸ்ட்வைல் ஸௌத், N.S.W.
ஆஸ்திரேலியா

* * *

எங்களுக்குப் பத்திரமாக வந்து சேர்ந்த சிறு வெளியீடுகளுக்கு மிக்க நன்றி. அவைகள் நூற்றுக் கணக்கான ஆத்மாக்களுக்கு பேருதவியையும், சந்தோஷத்தையும் அளிக்கும். அதிலுள்ள பொதுவான பிரார்த்தனை உண்மையிலேயே அழகாக இருக்கிறது. "பேரானந்த வடிவாக இருப்பவரும், பிரம்மனும் ஆகிய அந்த ஸத்குருவை நான் சாஷ்டாங்கமாக நமஸ்

கரிக்கின்றேன்'' என்று வரும் பகுதி ஒருவரிடத்தில் நல்ல பலனை அளிக்கவல்லது. அது ஒருவருடைய உணர்வை மிக உன்னதமான நிலைக்கு உயர்த்த வல்லது.

ஓம் ஓம் ஓம்

அக்டோபர் 25ந்தேதி ஸ்ரீமதி K. அவர்கள் மனமுடைந்து இருந்தார்கள். நான் அவர்களைச் சமாதானப்படுத்த முயன்றேன். அப்பொழுது நான் தங்களை நினைத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று நான் தங்களைக் கண்டேன். தாங்கள் தோன்றியதைப் பற்றி அந்த அம்மையாரிடம் எடுத்துக் கூறி இன்னும் சில தினங்களுக்குள் தங்களிடமிருந்து அவருக்குச் செய்தி கிடைக்கும் என்றும் கூறினேன். தங்களுடைய புனித சன்னிதானம் அவரை ஆன்மீக ரீதியில் உயர்த்தி விடுகின்ற சக்தி பொருந்தியதாக இருந்தது. அவர் முற்றிலும் மாறுபட்டவராக ஆகிவிட்டதோடு விரைவில் கவலையிலிருந்து தேறியும் விட்டார். மூன்று நாட்களுக்குப் பிறகு தங்களுடைய கடிதம் வந்து சேர்ந்தது. அது எங்களுடைய சந்தோஷத்திற்கு முடிசூட்டியதைப் போல் அமைந்தது. அந்த அம்மையார் பேரானந்தக் களிப்புற்று அமைதியுடன் இருக்கிறார்.

ஓம் ஓம் ஓம்

எங்களுடைய அன்பிற்குரிய நோயாளிகளைத் தெய்வீக சக்தியால் குணப்படுத்தி வருவதற்காகத் தங்களுக்கு நன்றி. எங்களுக்கு உதவி தேவைப்படும் பொழுதெல்லாம், நான் தங்களை நினைக்கும் பொழுதெல்லாம், நான் தங்கள் சந்நிதானத்தை உணர்கின்றேன். தங்களுடைய அன்பு கலந்த கரங்களினின்றும் எனக்குக் கிடைக்கும் தெய்வீக சக்திக்காக நான் தங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன்.

ஓம் ஓம் ஓம்

நவம்பர் 12ந்தேதி வெள்ளிக்கிழமை இரவு நான் ஸ்ரீமதி K. அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். தாங்கள் அவருடைய சிகிச்சை அறைக்குள் நுழைந்து மேஜைக்குப் பக்கத்தில் நின்றதைக் கண்டேன். தங்களுடைய கரங்களில் நீண்டதொரு காகிதச் சுருள் இருந்தது. அழகிய வர்ணங்கள் நிறைந்த ஒரு வான வில் தங்களுடைய சிரசிற்கு மேலாகக் காணப்பட்டது. இந்த வானவில் அந்த அம்மையாரின் அறையின் குறுக்கே காணப்பட்டது. நான் அவரைப் பார்த் தேன். அவர் அந்தக் காட்சி ஏற்பட்டதற்குப் பிறகு சந்தோஷமாகவும் அமைதியாகவும் இருக்கிறார்.

ஸ்ரீமதி M. E. வில்சன்.

* * *

தங்களுடைய உடல்நிலை சீரடைந்திருப்பதுகண்டு மகிழ்ச்சியடைகின்றேன். தாங்கள் பூரண குண மடைந்து நல்லாரோக்கியத்துடனும் பலத்துடனும் இறைவனருளால் எங்களுடன் எப்பொழுதும் இருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன். ஓம் ஓம் ஓம்

எங்களுக்குத் தங்களுடைய உபதேசம் தேவை யாக இருக்கிறது. அது இல்லாவிடில் நாங்கள் உலகாயதமாகிய கானகத்தில் வழி தவறிய ஆடுகளைப் போலாகி விடுவோம். தாங்கள் இப்பொழுதும் எப் பொழுதும் எங்களோடு இருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன். ஓம் ஓம் ஓம்

அன்புடைய தங்களுடைய அழகான புகைப்படத் திற்காக எனது மனப்பூர்வமான நன்றிகள். அது அழகாக இருக்கிறது. அதைப் பார்த்துக் கொண் டிருப்பதால் அது பார்ப்பவருக்குத் தெய்வீக சாந்தி யைக் கொடுக்கிறது. ஓம் ஓம் ஓம்

நான் முதலில் தங்களுடைய கடிதத்தைத் திறந்து பார்த்ததும் அதிலிருந்து தெய்வீக சக்திக் கிளம்பியது. அது என்னுடைய உடல் முழுதும் பரவியது. அது அளவு கடந்த சந்தோஷத்தை அளித்தது. தங்களுடைய புனித சக்திக்காகத் தங்களுக்கு எனது நன்றிகள். தாங்கள் சத் - சித் - ஆனந்தமாகவும், பூஜிக்கத்தக்க சிவ-ஆனந்தமாகவும் விளங்குகின்றீர்கள்.
ஓம் ஓம் ஓம்

வாசிப்பதற்காகத் தாங்கள் அனுப்பியிருக்கும் புத்தகங்களுக்காக நன்றி. அவைகள் மிக உன்னதமான முறையில் விளக்கம் தருவனவாக உள்ளன. ஸ்ரீ A. அவர்கள் சனிக்கிழமை அவருடைய நோய் நிவாரணத்திற்கு ஏதாவது செய்யும்படி என்னை அனுமதித்தார். நான் என்னுடைய கைகளை அவர் மீது வைப்பதற்கு முன் தங்களுடைய நாமத்தை மானஸீகமாக ஜெபித்த பொழுது தங்கள் திவ்ய ரூபத்தையும் மனத்தில் கண்டேன். பிறகு நான் ஓம் என்ற பிரணவ மந்திரத்தை ஜெபித்தேன். பிறகு நான் என்னுடைய கையை நாடியில் வைத்து மனத்தைக் குவிய வைக்க ஆரம்பிக்கும் பொழுது தாங்கள் நோயாளியின் படுக்கையின் தலை பாகத்தில் திவ்ய ரூபத்துடன் நின்று கொண்டிருந்தீர்கள். நான் உற்று கவனித்தபொழுது சூரிய கிரணங்கள் தங்களிடமிருந்து கிளம்பி வந்தன. ஒரு உஷ்ணக் கதிரானது என்னுடைய கைகளின் வழியாகக் கடந்து செல்வதைப் போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டதைத் தொடர்ந்து என்னுடைய உடல் அக்னியின் மீது இருப்பதுபோலத் தோன்றியது. எங்களுக்கு உதவி செய்து வருவதற்காக நான் தங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். தங்களுடைய தெய்வீக சக்தியினுல் இந்தச்

சிகிச்சைக்குப் பின் அவர் நலமடைந்து வருவதை உணர்கின்ருர். ஓம் ஓம் ஓம்

தங்களுடைய கருணையினுல் இந்த உலகப்பொருள் களிடம் கொண்டிருந்த எல்லாப் பற்றுதல்களேயும் ஒழிக்க முடிந்தது. இந்த உலகம் ஒரு மாயையாகத் தோன்றுகிறது. நான் அதில் இருக்கிறேன். ஆனுல் அதனுடையதாக இல்லே. இந்நிலேயை ஓம் ஏற்படுத்தி யிருப்பதுபோல் தோன்றுகிறது. நான் தங்களுடைய உபதேசங்களேக் கடைப்பிடித்து வருகின்றேன். நான் பிரணவ மந்திரத்தை நாள் ஒன்றுக்கு 21600 தடவை ஜெபித்து வருகின்றேன். என்னுடைய ஆன்மா உயர்த்தப்பட்டிருப்பதாக உணர்கின்றது. பிரணவ மானது என்னே எல்லேயற்ற பரம்பொருளிடம் காந்தத் தைப் போல் கவர்கின்றது. என்னேக் கைவிடாதீர்கள். தாங்கள்தான் என்னுடைய உண்மையான நண்பர். வீழ்ச்சியை ஏற்படுத்தக் கூடிய சூக்ஷ்ம சக்திகளிட மிருந்து என்னேக் காப்பாற்றுங்கள். எனக்குத் தங்களுடைய கருணையைக் கொடுத்தருளுங்கள். அதன் மூலம் என்றென்றும் தங்கள் விருப்பத்திற்கு அடிபணிந்திருக்கவும், தங்கள் பார்வையில் தகுதி யுடையவளாக இருக்கவும் வாய்ப்பு ஏற்படும். ஓம் சிவானந்தா. ஓம் ஓம். கடந்த ஆறு மாத காலமாக சூக்ஷ்ம சக்திகள் என்னேத் தொந்தரவு செய்யப் பார்க் கின்றன. எனதன்பார்ந்த சுவாமிஜி, நான் பலவந்த மாகத் தங்களுடைய நாமத்தையே ஜெபித்துக்கொண் டிருக்கிறேன். தங்களுடைய தெய்வீக உதவியினுல் அந்தச் சக்திகள் குழப்பமடைந்து சிதறடைகின்றன. நான் தங்களே எண்ணிக் கொண்டு ஓம் ஓம் ஓம் என்று ஜெபித்துக் கொண்டிருக்கிறேன்.

தங்களுடைய கருணையின் மூலமாக ஏற்படுகின்ற இம்மாதிரியான அனுபவங்களிலிருந்து இறை அனுபூதிக்கு யோகம்தான் சரியான வழி என்பதை உணர்ந்து கொண்டதுடன் இறைவழியில் பயணம் செல்லுகையில் ஓம் என்ற பிரணவமே பாதுகாப்புக் கவாடம் (Safety Valve) என்பதையும் அறிந்து கொண்டேன். ஓம் ஓம் ஓம்

ஸ்ரீமதி M. E. வில்சன், ஆஸ்திரேலியா.

* *

## 36. இரட்சகர் சிவானந்தர்

### இரண வைத்தியருக்கு உதவிய கரம்

இரண்டு வயதுள்ள எனது சிறிய பையன் சிக்கலான குடல் பிதுக்க அறுவைச் சிகிச்சை (Strangulated hernia operation) மருத்துவமனையில் சேர்க்கப்பட்டான். என்னுடைய கவலை எப்படி இருந்திருக்கும் என்று தாங்கள் அறிவீர்கள். அவன்தான் என்னுடைய ஏக புத்திரன். அவனுக்கு 1956 ஜூலை 22ந் தேதி அறுவைச் சிகிச்சை செய்யும் நாள். அன்று காலையில் பொன்னிறமான பிரகாசம் பொருந்திய ரூபத்துடன் எனது அன்பிற்குரிய குருதேவர் ஸ்ரீ சிவானந்தர் ஒரு இரண சிகிச்சைக்கான சில ஆயுதங்களையும் மற்றொரு கையில் பஞ்சுப் பட்டையையும் வைத்துக் கொண்டு என்முன் தோன்றினார். ஆம், அறுவைச் சிகிச்சை நன்றாக நடந்தேறியது. பையன் இப்பொழுது நலமாக இருக்கிறான். அன்று மாலை தங்களுடைய வர்ண உருவப் படமானது பிருங்கு தெய்வீக வாழ்க்கைச் சங்க பிரார்த்தனை மண்டபத்தில் அடியேனுடைய

பணிவான சாஷ்டாங்க நமஸ்காரங்களுடன் நிறுவப் பட்டது.

ஸ்ரீ M. K. ராமச்சந்திரன்,
மலேயா, பிருங்கு.

* *

## அஞ்சேல்

சமீபத்தில் நான் மிகவும் நோய்வாய்ப்பட்டேன். நான் இறந்து விடுவேன் என்றுகூட நினைத்துக் கொண்டேன். நான் ஏற்கெனவே ஸ்ரீ ஸத்குரு பகவான் சுவாமி சிவானந்தஜி மஹராஜ் அவர்களுடைய படத்தை வழிபட்டுக் கொண்டு வருகிறேன். இப் பொழுது தோத்திரங்களும் 28 நமஸ்காரங்களும் காலை யும் மாலையும் செய்து வருகின்றேன். ஐந்து நாள் கழித்து எனக்கு ஒரு காட்சி ஏற்பட்டது. அதில் ஸ்ரீ குருபகவான் தோன்றி "பயப்பட வேண்டாம். நான் வந்து விட்டேன்" என்று என்னிடம் கூறினர். பகவான் மறைந்தார். 48 மணி நேரத்தில் நான் பழைய ஆரோக்கியத்தைப் பெற்றேன். ஸ்ரீ குருபகவா னுடைய மகிமையை இடைவிடாது தொடர்ந்து தியா னித்து வருகின்றேன்.

ஸ்ரீ குருபகவான் பரப்பிரம்ம ஸ்வரூபமே யாவார். அதுமட்டுமல்ல. அவர் தசாவதாரங்களாக அவதரித்த மஹா விஷ்ணுமாவார். அவர் ரஸகணமாகவும், பரமா னந்தத் தேனுகவும், தெய்வீக லீலைகளின் தெய்வீக ஒளியாகவும் இருக்கின்ருர். அவர் நடமாடும் கடவுள். அவர் நமது விருப்பங்கள் அனைத்தையும் பூர்த்தி செய் கின்ருர். அவர் நம் அனைவருக்கும் மிக உன்னதமான பேரானந்தத்தைக் கொடுக்கின்ருர். பரம்பொருளா னவர் இவ்விதமாக நம்மிடம் திருவிளையாடல் புரிந்து

நாம் இந்த சம்சார சாகரத்தைக் கடப்பதற்குத் தன்னை ஒரு படகாக ஆக்கிக் கொண்டிருப்பது ஒரு பெரும் ஆனந்தத்தை அளிக்கவல்ல அற்புதமாகும். அவருடைய பாதார விந்தங்களை அண்டியவர்கள் இங்கே, இப்பொழுதே மோக்ஷத்தை அடைவர் என்பதில் சந்தேகம் இல்லை.

*சுவாமி பகவதானந்தா, நாகர்கோயில்.*

* * *

அவருடைய வார்த்தை பொய்யாகாது

நான் இங்கு வந்து சேர்ந்தபொழுது என்னுடைய தாயாருடைய நிலை நாங்கள் எல்லோரும் அவர் இறப்பது திண்ணம் என்று நினைக்கும்படியாக இருந்தது. ஆனால் நான் நம்பிக்கையுடன் இருந்தேன். ஏனெனில் நான் ஆனந்த குடீரத்தை விட்டுப் புறப்படும் பொழுது சுவாமிஜி என்னைப் பார்த்து "பயப்பட வேண்டாம். எல்லாம் சரியாகிவிடும்" என்று கூறினார். ஒரு வாரத்திற்கு முன்வரை உணர்வே இல்லாதிருந்த தாயார் திடீரென்று கண்களைத் திறந்து சுவாமிஜி அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அவரைக் கவனித்துக் கொள்வதாகவும் பயப்பட வேண்டாமென்று கூறியதாகவும் சொன்னார். அப்பொழுதுமுதல் நாளுக்குநாள் அவர் சிறிது சிறிதாக குணமடைந்து வருகின்றார். அதே தினத்தில் குழந்தைகள் தங்களுடைய கனவில் சுவாமிஜியைப் பார்த்திருக்கின்றனர். இதுவெல்லாம் எனக்கு ஆச்சரியமல்ல. ஏனெனில் சுவாமிஜியினுடைய கருணை பூரணமாக என்மீது இருக்கிறது என்று நான் எப்பொழுதும் உறுதியுடன் இருந்து வருகின்றேன்.

ஸ்ரீ வெங்கோப ராவ், சென்னை.

* * *

**தாங்கள் என் குழந்தையைக் காப்பாற்றினீர்கள்**

தங்களுடைய கடிதம், மிகப் பணிவான, அமைதி யான, நம்பத்தக்க சரணதாஸனுக்கு புது நம்பிக்கை யையும், புது வாழ்வையும் அளித்திருக்கிறது. எனது பெரிய தந்தையே, தாங்கள் என்மீது சொரிந்திருக்கும் தங்களுடைய அன்பு நிறைந்த ஆசிகளுக்கு நன்றிகூற எனக்கு வார்த்தைகளே கிடைக்கவில்லை. சத்குரு நாதா, அன்புள்ள தந்தையே, தாங்கள் ஒரு தந்தை தன்னுடைய கபடமற்ற பிள்ளையை முத்தமிடுவதைப் போல எப்பொழுதாவது ஒருமுறை என்னை முத்தமிட வேண்டுமென்பது என்னுடைய மிகப் பெரும் விருப்பம். அதன்படி சில நாட்களுக்கு முன் தாங்கள் என்மீது மிகுந்த அன்பு கொண்டு என்னை இரண்டு முறை கனவில் முத்தமிட்டீர்கள். அதன்மூலம் எனக்கு ஏற்பட்ட "மயக்க" மானது பல நாட்கள் நீங்காம லிருந்தது. அப்பா, தாங்கள் எனக்கு வழிகாட்டவும், உதவி செய்யவும், சாதனையில் ஒழுங்காக இருக்கவும் தங்களுடைய தாசன் என்று நான் அழைக்கப்படவும் தாங்கள் என்னுடனேயே இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒரு நாள் என்னுடைய மகன் கடுமையான நோய்வாய்ப்பட்டு விட்டான். அதனால் நான் நிலை குலைந்தவனானேன். கடைசியாக அவனுடைய படுக் கையில் தங்களுடைய மூர்த்தியை வைத்து அவனைத் தங்கள் பொறுப்பில் விட்டுவிட்டேன். பையன் தங்க ளுடைய மூர்த்திக்கு வணக்கம் செய்து "ஜெய் குரு தேவா, ஜெய் குருநாதா" என்று ஜெபிக்க ஆரம் பித்து விட்டான். தங்கள் கருணையினால் அவன் தற் பொழுது நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறான். அன்புள்ள தந்தையே, தாங்கள் என்னை எவ்வாறு

காத்து வருகிறீர்கள் என்பதை நான் மட்டுமே அறிவேன்.

B. L. காலியா, (Train Chaser),
ரெயில்வே குவார்ட்டர் நெ. 168-A ஜலந்தர் நகர்.

* * *

வலி மறைந்தது

தங்களுடைய அன்புகலந்த கடிதத்தைப் படித்த வுடன் நான் ஆனந்தத்தால் குதித்துக் கூத்தாடினேன். அதற்காகவும் இன்று எனக்குக் கிடைத்த புத்தக வெகுமதிகளுக்காகவும் நான் தங்களுக்கு மிகுந்த நன்றி செலுத்துகிறேன்.

நான் தங்களுடைய ஒரு அற்ப சீடனுகவும் பரி ப்க்குவமடையாதவனுகவும் இருந்தபோதிலும் தங்க ளுடைய—எனது குருதேவருடைய பேரன்பை அனுப வித்து வருகின்றேன்.

நான் 1954 ஜூலை மாதம் முதற்கொண்டு என் னுடைய வயிற்றின் வலது புறத்தில் ஒருவித வலியால் அவதிப்பட்டு வந்தேன். ஆனுல் அது லேசான வலி யாக இருந்ததால் நான் அதைப்பற்றி அதிக அக்கறை காட்டவில்லை. ஆனுல் டிஸம்பர் மாதக் கடைசியில் வலி தாங்கமுடியாத அளவிற்கு வந்து விடவே என் னுடைய பெற்ருேர்கள் ஒரு நல்ல மருத்துவரிடம் காண்பிக்கும்படிக் கூறினர். ஆனுல் நான் அதற்குப் பதிலாக என்னுடைய மதிப்பிற்குரிய குரு நாதரிடம் குணமாக்கிக் கொடுக்கும்படி வேண்டிக் கொண்டேன். இம்மாதம் 11-ந் தேதி வரை குணம் கிட்டவில்லை. என்னுடைய தாயார் கண்ணீரும் கம்பலையுமாக என்னை ஒரு மருத்துவரிடம் யோசனை

கேட்கச் சொன்னார். ஆகவே நான் ஆடை அணிந்து கொண்டு மருத்துவரைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டேன். அப்பொழுது ஒரு அதிசயம் நிகழ்ந்தது. வயிற்றுவலி முற்றிலும் என்னை விட்டு அகன்றது. நான் அன்றைய தினம் மருத்துவரிடம் செல்லவில்லை. அதிலிருந்து எனக்கு அந்த வலி ஏற்படவே இல்லை. நமது அன்பிற்குரிய சுவாமிஜி எனது பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து எனக்குக் குணமளித்திருக்கிறார் என்பதை நாங்கள் எல்லோரும் அறிந்து கொண்டோம். அடியேன் தங்களுடைய பாதகமலங்களில் வீழ்ந்து தாங்கள் எங்கள்மீது கொண்டிருக்கும் அன்பிற்கும் பரிவிற்கும் நன்றி செலுத்துகின்றேன். சுவாமிஜி நான் தங்களை மேலும் மேலும் நேசிப்பேனாக. என்னுடைய பெற்றோர்கள் தங்களிடம் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்ளாவிடினும் அவர்களுக்குத் தங்களிடம் மிகுந்த பக்தி சிரத்தை உண்டு. என்னுடைய சகோதரியின் குழந்தைகள் தங்களுக்குப் பூஜை செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஏதாவது துன்பம் ஏற்பட்டால் உடனே தங்களிடம் ஓடிவருகின்றனர். அவர்களுடைய துன்பங்களும் உடனே நீங்கி விடுவதாக அவர்கள் கூறுகின்றனர். சுவாமிஜி இவ்வளவு நீண்ட கடிதம் எழுதியமைக்கு மன்னிக்கவும். நான் தங்கள் பாதகமலங்களைத் தொட்டு வணங்கி தங்கள் ஆசிகளுக்காகப் பிரார்த்திக்கின்றேன்.

ஜெயஸ்ரீ, தலைச்சேரி.

* * *

## குணம் கொடுக்கும் பார்வை

நான் கடுமையான அப்பெண்டிசிடிஸ் நோயாலும் பயங்கரமான வலியினாலும் வேதனைப் பட்டுக் கொண்

டிருந்தேன். நான் சுவாமிஜியின் தரிசனத்தைப் பெறுவதற்காக ஆஸ்ரமத்திற்குச் சென்றேன். நான் அவரிடம் நிலைமையை எடுத்துக்கூறி எனக்கு ஆபரேஷன் எதுவும் வேண்டாம் என்றும் சுவாமிஜீயினுடைய ஆசிகளே குணப் படுத்த வல்லது என்று நம்புவதாகவும் கூறினேன். அவர் என்னை ஒருகணம் உற்று நோக்கினர். அவ்வளவுதான். வலி மறைந்து விட்டது. தற்பொழுது அப்பெண்டிசிடிஸ் இருக்கின்ற அறிகுறியே இல்லை. அந்த இடத்திலிருந்த இளக்கம் கூட மறைந்து விட்டது.

*சுவாமி ஜ்யோதிர் மயானந்தா, ரிஷிகேசம்*

* * *

தங்கள் நாமம்: எங்கள் மருத்துவர்

நேற்று இரவு 1-45 மணி அளவில் எனது மனைவி ஒரு ஆண் மகவை அஸ்டாங்க ஆயுர்வேத மருத்துவ மனையில் ஈன்றாள் என்ற செய்தியை அறிய தாங்கள் மகிழ்ச்சி அடைவீர்கள். அவளுடைய இரத்த அமுக்கம் 200 புள்ளியில் இருந்தது. தங்கள் அருளால் இப்பொழுது சாதாரண நிலையில் இருக்கிறது. பிரசவம் சுகமாக முடிந்தது. என்னுடைய மனைவி 'சிவ', 'சிவ' என்றும் ஜெய்குரு என்றும் ஜெபித்துக் கொண்டிருந்ததைக் கண்ட மெடிகல் ஆபீஸர் (R. M. O.) ஆச்சரியப்பட்டு விட்டார். R. M. O. அவர்களும் மருத்துவ மனைத் தலைவியும் என்னிடம் என்னுடைய மனைவி பிரசவப் படுக்கையிலிருந்து கொண்டு எதற்காக அவ்வாறு ஜெபித்துக் கொண்டிருந்தாள் என்று கேட்டனர். நான் அவர்களுக்குத் தங்கள் திருநாமத்தைப் பற்றிக் கூறினேன். இம்முறை இந்த அதிசயத்

தைத் தாங்கள்தான் செய்திருக்கிறீர்கள் என்று நான் உறுதியாக நம்புகின்றேன். ஏனெனில் மருத்துவர்கள் சிப்பந்திகள் அனைவரும் என்னுடைய மனைவியிடம் அன்பாகவும் நேசமாகவும் இருந்தனர். இன்றுவரை தாயும் சேயும் நலமாக இருக்கின்றனர். அவர்களுக்குத் தங்களுடைய தெவீக ஆசீர்வாதங்களைத் தந்தருள்க. நான் இதுவரை மிகுந்த ஆவலுடன் இருந்துவந்தேன். தந்தையே தாங்கள் உண்மையிலேயே மஹான் இல்லாவிடில் என்னுடைய மனைவியின் சுகப்பிரசவமும் மருத்துவமனையில் சிப்பந்திகளின் சிநேகபாவமும் ஏற்படுவது என்பது அரிது.

J. M. *பட்டாச்சார்ஜீ*
*கல்கத்தா—6.*

* * *

## தாயார் குணமாக்கப்பட்டார்

தங்களுடைய தெய்வீகத் தலையீட்டினால் என்னுடைய தாயார் குணமடைந்த அதிசயம் ஏற்பட்டது. ஏற்கனவே அவரை மருத்துவர்கள் கைவிட்டு விட்டனர். அவர் தற்பொழுது மீண்டும் ஆரோக்கியத்துடன் இருந்து வருகிறார்.

இந்த அற்புதத்திற்கு நான் தங்களுக்கு எவ்வாறு நன்றி செலுத்துவது என்று தெரியவில்லை.

*ஸ்ரீமதி ஆரங்கா கோல்டக்*
*பிரட், லெபனான்*

* * *

## சரணம்ருத அற்புதம்

ஸ்ரீ பால்கிஸன்லால் பொட்டார் அவர்களுடைய மனைவி கடுமையான சூலை நோயினால் (Pleurisy) தாக்

குண்டு அவருடைய நிலை கல்கத்தா நகரத்துக் கை தேர்ந்த மருத்துவர்களுக்கே கவலையளிக்கும் வண்ண மாக இருந்தது. அப்பொழுது இயற்கையாகவே பக்தி சுபாவத்துடன் கூடிய ஸ்ரீ பால்கிஸன்லால் தன்னு டைய கவலையை என்னிடத்தில் தெரிவித்தார். இந்தச் சம்பவம் இங்கு குருதேவருடைய பிறந்ததின விழாவின் போது நடந்தது. அப்பொழுது நான் அவரிடம் 'நீங்கள் கடவுளிடம் நம்பிக்கைகொண்டு உங்கள் மனைவி குண மடைய மஹா மிருத்யுஞ்ஜய ஜெபத்தை முறையாகச் செய்து வாருங்கள்' என்று கூறினேன். தவிர நான் சிவானந்த சாவித்ரியின் மூலம் அவருடைய இல்லத் திற்கு அன்று மாலையே ஸ்ரீ குருதேவருடைய சரணாம்ரு தத்தைக் கொடுத்தனுப்பவும், அன்பிற்குரிய குரு தேவரிடம் நோயாளி சீக்கிரம் குணமடையும் பொருட்டு பிரார்த்தனை செய்வதற்கும் முன்வந்தேன். அன்று மாலை ஸ்ரீ பால்கிஸ்ன்லால் சரணாம்ருதத்துடனும் விபூதிப் பிரசாதத்துடனும் ஸ்ரீ சிவானந்த சாவித்ரியை அழைத்துச் செல்லும் பொருட்டு அவருடைய காரை அனுப்பி வைத்திருந்தார். ஸ்ரீ குருதேவர் நிகழ்த்திய அந்த ஆச்சரியகரமான அற்புதத்திற்காக அவருக்கு என்னுடைய எல்லையற்ற அன்பையும், நன்றியையும் எவ்வாறு எடுத்துரைப்பது என்றே விளங்கவில்லை. எங்களுடைய பிரார்த்தனையைத் தவிர நோயாளியும் அவரது கணவனும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் மஹா மிருத்யுஞ்ஜய ஜெபத்தை உச்சரித்து வந்திருக் கின்றனர். நோயாளி விரைவில் குணமடைந்து விடுவார் என்ற நம்பிக்கைக்குரிய அறிகுறிகள் தென் பட்டன. என்னுடைய அன்பிற்குரிய தேவனின் கருணையினால் அந்த அம்மையார் தற்பொழுது தேறி வருகிறார்கள். இன்று ஸ்ரீ பால்கிஸன்லால் எனது பூஜிக்கத்தக்க அவதார புருஷருக்குத் தனது பிரார்த்

தனைகளைச் செலுத்திவிட்டுச் செல்வதற்காக நேரில் வந்திருந்தார்.

கல்கத்தா ஸ்ரீ சிவானந்த நீலகண்டன்
அவர்களால் கூறப்பட்டது.

* * *

மாண்டவர் மீண்டார்

தங்கள் அன்பார்ந்த, உள்ளமுருக்கும் கடிதம் கிடைத்தது. தங்களுடைய இனிய கடிதத்தைப் பெற்ற பொழுது எனக்கேற்பட்ட எல்லையிலாப் பேருவகையை எடுத்தியம்ப வார்த்தைகள் கிட்டவில்லை. இது எமது குழந்தையின் கற்பனைக்கு அப்பாற்பட்டது. குருதேவருக்கு எனது மனமார்ந்த நன்றி. என்னுடைய உடல் நலத்திற்காக நடத்தப்பட்ட பிரார்த்தனைகளுக்காக நான் எல்லையற்ற நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். குருதேவரின் கருணையால் நான் நல்லாரோக்கியத்துடன் இருக்கின்றேன். ஓ, எனது அன்பிற்குரிய தெய்வப் பிதாவே, தாங்கள் தான் இப்பூவுலகில் எனது ரட்சகர். தாங்கள் தான் என்னை எல்லாவிதமான இடையூறுகளிலிருந்தும் கடத்தி வந்திருக்கின்றீர்கள்! தாங்கள் எவ்வளவு தொலைவில் இருக்கிறீர்கள், இருப்பினும் எவ்வளவு அருகில் உள்ளீர்கள். தங்களுடைய வழிகள் உண்மையிலேயே கண்டுபிடிக்கப்பட முடியாதவை. தங்களுடைய புகைப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் எல்லாம் எளிதாகிவிடுகின்றன. தங்கள் திருநாமத்தை உச்சரித்தால் போதும்; மலை போன்ற தொந்தரவுகள் நசித்து ரோஜா இதழ்களைப் போல வீழ்ந்து படுகின்றன. நான் தங்களை எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் நினைக்கின்றேனே அவ்வளவுக்கவ்வளவு என்னுடைய ஆத்ம சமர்ப்பணத்தில் சாந்

தியும் பேரானந்தமும் கிட்டுகின்றன. தங்கள் கருணையின்றி ஒரு அணுவும் அசையாது. தங்களுடைய கருணையும் ஆசிகளும் நிறைந்த பல சம்பவங்களுக்கு நான் சாட்சியாக இருந்திருப்பதற்கு எவ்வளவு மகிழ்ச்சியும் நன்றியறிதலும் உடையவளாக இருக்கின்றேன் என்பதை குருதேவருக்கு எடுத்துச் சொல்வது எனக்குப் பெருமகிழ்ச்சியை அளிக்கின்றது.

எனதன்பிற்குரிய தேவ பிதாவே எப்பொழுதும் தங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். ஏனெனில் எல்லாவற்றையும் தங்களுக்காகவே அர்ப்பணிக்கின்றேன். தங்களுடைய எல்லையற்ற கருணையால் எனது அன்பிற்குரிய நாயானது சமீபத்தில் பல மணி நேரம் இந்தப் பூதவுடலை விட்டுப் பிரிந்து சென்று மறுபடியும் உயிர் பெற்று எழுந்தது. காலை 10 மணி இருக்கும். அதுவரை அந்த நாய் ஒரு பூஞ்செடிக்குக்கீழ் படுத்துக் கொண்டிருந்தது. அது உறங்கிக் கொண்டிருக்கிறது, அதைத் தொந்தரவு செய்யக்கூடாது என்று நான் நினைத்தேன். சிலமணி நேரம் கழித்து நான் மலர் கொய்து வருவதற்காக அந்தச் செடிப் பக்கம் சென்று பார்த்த பொழுது நாய் அப்பொழுதும் படுத்துக் கொண்டே இருந்தது. ஆனால் அதன்மீது ஏராளமான ஈக்களும் எறும்புகளும் மொய்த்துக் கொண்டிருந்தன. நான் அதைத் தூக்கினேன். அதன் உடல் விறைப்பாகவும், குளிர்ச்சியாகவும் இருந்தது. மூச்சு இருப்பதற்குரிய அறிகுறி எதுவுமே இல்லை. நாய் இறந்து விட்டதை அறிந்து நான் திடுக்கிட்டேன். ஏனெனில் அது எந்தவித நோயினாலும் பாதிக்கப்படவில்லை. அன்று காலையில் அது விளையாடிக் கொண்டிருந்தது. நான் துயரக் கடலில் மூழ்கினேன். நான் அதை என்னுடைய கைகளில் ஏந்திக்கொண்டு மண்டியிட்டு தங்களுடைய உதவியை வேண்டி உளமாறப் பிரார்த்

தித்தேன். தங்களுடைய விபூதிப் பிரசாதத்தில் கொஞ்சம் எடுத்து பாலில் கலந்து அதன் வாயைப் பிளந்து சிறிதளவு ஊற்றினேன். அதன் நெற்றியிலும் விபூதியைப் பூசினேன். பிறகு அதை ஒரு துணியால் போர்த்தி தங்களுடைய படத்திற்குமுன் கிடத்திவிட்டு மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை பாடிக் கொண்டிருந்தேன். சிறிது நேரம் கழித்து, மாலையில் அதை அடக்கம் செய்துவிடலாம் என்று எண்ணி சாப்பாட்டு அறையில் விட்டுச் சென்றேன். பிறகு எனது கணவருக்கு போன் செய்யச் சென்றேன். நான் அறைக்குள் நுழைந்து கொண்டிருக்கும் பொழுது என்னுடைய சேலையை எதுவோ பற்றியிழுப்பதுபோல் தெரிந்தது. அது என்ன என்று திரும்பிப் பார்த்தபொழுது எனக்குப் பேராச்சரிய மேற்படும்படியாக அந்த நாய் தாவிக் குதித்துக்கொண்டு என்னுடைய சேலையைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்தது. நான் அந்த நாயை வாரி அணைத்து தங்களுக்கு நன்றி செலுத்துவதற்காக மண்டியிட்டு வணங்கினேன். ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக முகத்தில் வழிந்தோடியது. ஏனெனில் என்னுடைய அன்றுட வாழ்க்கையில் குரு தேவர் செய்த பல அற்புதங்களில் இதுவும் ஒன்று. அந்த நாய்க் குட்டியும் சந்தோஷத்தால் குதித்துக் கொண்டு பிரார்த்தனை அறைக்குச் சென்று குரு தேவரின் படத்திற்கு முன்பாக உட்கார்ந்து கொண்டது. அது பால் குடிக்கவும் மற்ற நாய்க்குட்டிகளுடன் விளையாடவும் மறுத்து விட்டது.

சமீபத்தில் என்னுடைய இரண்டு கைகளிலும் தீர்க்க முடியாத பாலுண்ணிகள் வந்து விட்டன. நான் பல வைத்தியர்களையும் பல மருந்துகளையும் பார்த்து விட்டேன். ஆனால் பயன் எதுவும் கிட்டவில்லை. ஒரு நாள் அன்பர் ஸ்ரீனிவாசன் என்னை இதற்காகப் பிரார்த்

திக்கச் சொன்னார். நான் மனப்பூர்வமாக என்னுடைய கைகளை குருதேவரின் படத்திற்கு முன்னால் வைத்துப் பிரார்த்தித்தேன். ஒருசில நாட்களுக்குப் பிறகு அந்தப் பாலுண்ணிகள் முற்றிலும் மறைந்து விட்டன. அதுமுதல் அவைகள் மறுபடியும் வரவில்லை.

குருதேவர் கருணை நமக்கு எப்பொழுதும் உறுதுணையாக இருந்து நம்மை அவருடைய பாதார விந்தங்களுக்குப் பத்திரமாக அழைத்துச் செல்ல வேண்டுமென்று நாம் பிரார்த்திப்போமாக.

குருதேவரின் ஆசிகள் எப்பொழுதும் நம் அனைவர் மீதும் இருப்பதாக.

ஸ்ரீ தனம், டர்பன், தென்னாப்பிரிக்கா.

* * *

யமன் வாயிலிருந்து மீட்கப்பட்டான்

என்னுடைய மகன்மீது ஒரு மோட்டார் கார் ஏறி விட்டது. அவன் மருத்துவமனை எடுத்துச் செல்லப் பட்டான். பையன் இன்னும் ஒருசில மணி நேரமே உயிரோடிருப்பான் என்று மருத்துவர்கள் கருதினர். பையனுடைய நிலை மிகவும் மோசமாக இருந்தது. எனக்கு என்ன செய்வதென்று ஒன்றுமே புரியவில்லை. சரி ஆண்டவன் விட்டவழி விடட்டும் என்று இருந் தேன். அம்பொழுது இரண்டு நாட்களுக்கு முன் சுவாமி சிவானந்தஜி அனுப்பி வைத்திருந்த விபூதி குங்குமப் பிரசாதத்தைப் பற்றிய ஞாபகம் வந்தது. அந்த பிரசாதம் அப்பொழுது என்னிடத்தில்இருந்தது. அது நல்ல பயனளிக்கும் என்று எண்ணிக்கொண்டு அதைப் பையனுடைய நெற்றியில் இட்டேன். ஒரு ஆச்சரியம் நிகழ்ந்தது. பையன் மெதுவாக உணர்வு

பெற்று ஹனுமான் சலீஸா என்று ஜெபிக் ஆரம்பித்தான். அதுமுதல் குணமடைய ஆரம்பித்து இப்பொழுது பூரண சுகத்துடன் இருக்கிறுன்.

ஸ்ரீ நரசிங்கதாஸ் வர்மா, லூதியானு.

* * *

## இரண வைத்தியரிடமிருந்து காப்பாற்றப்பட்டார்

அன்பிற்குரிய தந்தையே, என்னுடைய கணவர் ஈறு கிரந்திக் கட்டியினுல் அவதிப்பட்டுக் கொண்டிருந்த பொழுது தாங்கள் அனுப்பி வைத்திருந்த விபூதி மாயாஜாலத்தைப் போல வேலை செய்தது. அவருடைய வீங்கிய முகமும் கொதிக்கின்ற காய்ச்சலும் எல்லோருக்கும் கவலையை உண்டுபண்ணின. உண்மையாகவே அவர் சென்னைக்குச் சென்று ஒரு பல் வைத்தியரிடம் காட்டி இரண சிகிச்சை செய்து கொள்ளலாம் என்று விரும்பினுர். திருத்துறைப் பூண்டியில் பல் வைத்தியர்கள் யாரும் இல்லை. அதற்கு முதல்நாள் அந்த விபூதியை அவருடைய நெற்றியில் பூசினேன். அன்றிரவே அந்தக் கட்டி உடைந்து விட்டதைப் பார்த்தபொழுது எனக்கே ஆச்சரியமாகப் போய்விட்டது. வலியும் வீக்கமும் குறைந்தன. என்னுடைய கணவருக்கு நோயிலிருந்து பெரியநிவாரணத்தைக் கொடுத்து எங்கள் எல்லோருக்கும் ஆறுதலை அளித்த தங்களுடைய பிரசாதத்திற்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குருதேவே, எமது அன்புத் தந்தையே, நான் தங்களுக்கு மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். நான் தற்பொழுது மிக்க மகிழ்ச்சியுடன் இருக்கின்றேன். தாங்கள் எனக்குக் கண்கண்ட தெய்வம்.

மானிட வர்க்கத்தைக் காக்கும் பொருட்டு ஆண்டவன் தங்களுக்கு மிக நீண்ட ஆயுளைக் கொடுத்தருள்வாராக. இதுதான் ஆண்டவனிடம் என்னுடைய உண்மையான மனப்பூர்வமான பிரார்த்தனையாகும். தாங்கள்தான் எங்களுக்கு வழிகாட்டி எங்களைக் காக்க வல்லவர்.

*விமலா கர்னுட்*, W/o B. R. *கர்னுட்* M. B. B. S.
அஸிஸ்ட்டண்ட் ஸர்ஜன்.

* *

பார்வை மீண்டும் கிட்டியது

நான் திவ்ய ஜீவன அங்கத்தினனுகைப் பதிவு செய்து கொண்டதிலிருந்து நான் நிரந்தரமான ஆன் மீக சாதனையைப் பெற்றிருக்கிறேன். எனக்குத் தாகம் ஏற்படும் பொழுது ஆன்மீக அலைகளைப் பெற்று சந்தோஷமாக இருக்க முடிகிறது.

சென்ற ஆண்டில் நான் குருடனுகி விட்டேன். எனக்கு மீண்டும் கண் ஒளியைக் கொடுத்தது தங்களுடைய விசேஷ மந்திர பிரசாதம்தான். எனக்குப் பார்வை மீண்டும் கிட்டியதோடு மட்டுமல்ல. நான் தெய்வீக ஒளியின் உண்மையான அம்சத்தையும் உணர்ந்தேன். நான் அதற்காக ஏங்கியபொழுது அதைப் பெற்றேன்.

தங்களுடைய படங்கள் இன்னும் இரண்டையும் பிரசாதத்தையும் நாங்கள் எல்லோரும் மகிழ்வுடனும் ஆவலுடனும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

*கர்டார் சிங் ஸோஹால்* A. M. I. E. (Ind)., C. E., A. M. I. struct E. (London) C. S. E. D. G. G. I. (Lond) etc. Chartered Engineer (civil) etc. etc.

ஜமுனு நகர்.

* * *

## மிகச் சிறந்த மாமருந்து

தண்ணீர்கூடச் சாப்பிடாமல் கடந்த இரண்டு நாட்களாகத் தலைவலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த என்னுடைய மனைவிக்கு நிவாரணம் கிடைத்த அற்புதத்தை எடுத்துரைக்க வார்த்தைகளால் முடியாது. நக்ஸ் வாமிகா, (Nux Vomica), பெர்ரம் போஸ் (Ferrum Phos), நாட்ரம் மூர் (Natrum Mur), மற்றொரு மருந்து ஆகிய இவைகள் எல்லாவற்றையும் கொடுத்துப் பார்த்தும் ஒன்றும் பலனளிக்கவில்லை. என்னுடைய ஹோமியோபதி, பயோகெமிக் மருந்துகள் எல்லாம் வேலை செய்ய மறுத்துவிடவே இரவு 9-30 மணிக்கு "ஓம் குரு, ஓம் குரு, ஓம் குரு, ஓம் பிரும்ம குரு, விஷ்ணு குரு, சிவகுரு ஓம்" என்று ஜெபித்துக் கொண்டு அவளுடைய நெற்றியில் விபூதியையும், குங்குமத்தையும் இட்டேன். நான் அவற்றைப் பூசியவுடன் தலைவலி மறைந்து செல்வதைப்போல் உணர்ந்தாள். 10 நிமிட நேரத்திற்குள் பூரண குணம் ஏற்பட்டு தலைவலியே ஏற்படாதவள்போல் கலகலவென்று சிரிக்க ஆரம்பித்து விட்டாள். என்னுடைய மருந்துகள் குணம்தர இயலாதபொழுது நான் விபூதியையும் குங்குமத்தையும் பூசினேன். அவைகள் எதிர்பார்த்த பலனைக் கொடுத்தன.

S. B. சிங். பரெய்ல்லி.

* * *

## பிரசாத மகிமை

கடுமையான பிரசவ வேதனையின் பொழுது தங்கள் அன்பு கனிந்த ஆசியுடன் அனுப்பியிருந்த பகவானின் புனித பிரசாதமானது பிரார்த்தனையுடன்

பூசப்பட்டது. உடனே அவதிப்பட்டுக் கொண்டிருந்த சகோதரிக்கு நிவாரணத்தை அளித்து ஆண் குழந்தை ஒன்று இவ்வுலகில் பிரவேசித்தது. தங்கள் ஆசியுடன் கூடிய பகவானின் புனித பிரசாதத்திடம் அவளுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை எப்பொழுதும் இருந்து வந்திருக்கிறது. தாங்கள் அனுபூதி யடைந்த ஆன்மா பரம்பொருளுடன் இரண்டறக் கலந்திருப்பவர். அந்தச் சக்தி எல்லோருடைய விதியையும் ஆட்சி புரிந்து வருகின்றது. அப்படி இருக்கும்போது பரிதாபகரமான அறியாமையில் உழன்றுவரும் ஜந்துக்களாகிய நாங்கள் தெய்வீகக் கருணையின் விசாலத் தன்மையைப் பெருமைப்படுத்த என்ன செய்ய இயலும்?

தாங்கள் இறைச் சக்தியின் நடமாடும் மூர்த்தியாக விளங்குகின்றீர்கள். மனிதனிடத்தே மறைந்து கிடக்கும் சக்தியை அவன் உணருவதற்காக அவனுக்கு எண்ணம், சொல், செயல் ஆகியவற்றிலே உயர்ந்த மட்டத்திற்கு அழைத்துச் சென்று கொண்டிருக்கிறீர்கள்.

ராம்தாஸ், சென்னை

*　　　*　　　*

மாணிக்கத்தின் இருமல் நின்றது

சுவாமிஜியினுடைய அனுமதியின்றி தங்களுடைய குழந்தைகளாகிய எங்களால் பலவிதமான காரியங்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. ஆனால், "நாங்கள் இதைச் செய்தோம்," என்று அடிக்கடி அகங்கரித்திருந்த போதிலும் எல்லாவற்றையும் குருதேவர்தான் செய்கிறார் என்பதைப் பூர்ணமாக உணர்ந்திருக்கின்றோம். குருதேவருடைய சக்தி இங்கு எப்பொழுதும் பிரசன்ன

மாக இருக்கின்றது. சில நாட்களுக்கு முன் ஸ்ரீ மாணிக்கம் செட்டி அவர்கள் நோய்வாய்ப்பட்டார். அவர் கடுமையான இருமலினால் அவஸ்தைப்பட்டார். நாங்கள் இருவரும் ஒன்றும் புரியாத நிலையிலிருந்தோம். திடீரென்று தங்கள் குழந்தைக்கு சுவாமிஜியின் பிரசாதத்தைப் பற்றிய எண்ணம் ஏற்பட்டு சுவாமிஜியை நினைத்து அதில் சிறிது வாயில் போட்டு விட்டு சிறிது கழுத்துப் பாகத்தில் தடவி விட்டது. உடனே இருமல் நின்றது. இதைக் கண்டு நாங்கள் பெரிதும் ஆச்சரியத்தில் மூழ்கிவிடவில்லை. ஏனெனில் சுவாமிஜியினுடைய சக்தியும் கருணையும் எங்களுக்கு இப்பொழுது கண்கூடானவைகளாக இருக்கின்றன.

குருதேவருடைய கவர்ச்சி பொருந்திய அழகிய தோற்றம் எப்பொழுதும் எங்கள் மனத்திலும் இருதயங்களிலும் பிரசன்னமாக இருப்பதாக. ஆஹா, குருதேவருடைய அன்பை என்னென்று சொல்வது! உண்மையாகவே குருதேவர் பக்தர்களுக்கே உரியவர். பரமானந்தர் கூறுவதுபோல், உண்மையில் குருதேவர் பக்தர்களில் அறியாமையில் முதன்மையாக இருக்கின்ற வினையையும் ஏற்றுக்கொண்டு அவனை உலகிற்குப் பயனுள்ளவனாக மாற்றிவிடுகின்றார்.

V. ஸ்ரீனிவாசன்,
டர்பன், தென் ஆப்பிரிக்கா.

*　　*　　*

## சரணாமிர்தம் விஷத்தை முறித்தது

ஒரு நாள் இரவு 9 மணிக்கு நான் விஷம் கலந்த மருந்தைத் தெரியாமல் சாப்பிட்டு விட்டேன். 15 நிமிடம் கழித்து என்னுடைய நிலை அபாயகரமாகி

விட்டது. இடைவிடாது வாந்தியும் பேதியும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. இம்மாதிரி இரண்டு மணி நேரம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. என்னுடைய நிலை பரிதாபகரமாகியது. அப்பொழுது குருதேவர் என்னிடம், "சுழந்தாய், என்னுடைய சரணாம்ருதத்தைச் சாப்பிடு," என்று கூறினார். உடனே என்னுடைய மனைவியிடம் அதைக் கொண்டு வரச் சொன்னேன். குருதேவரின் சரணாம்ருதத்தைச் சாப்பிட்டதும் எனக்குப் பூரண ஓய்வு கிட்டியது. நான் என்னுடைய வலிகளையும் தொந்தரவுகளையும் மறந்துவிட்டேன்.

அதே நேரத்தில் தூக்கம் வந்து என்னை ஆட்கொண்டது. விடியற்காலையில் நான் எழுந்தபொழுது எனது உடல்நிலை மிக நன்றாக இருப்பதைக் கண்டேன். எல்லாத் தொந்தரவுகளும் தானாக நீங்கிவிட்டன. இது உண்மையாகவே நடந்தது...... குருதேவர் என்னை உற்றுக் கேட்கிறார். அவர் என்னுடன் எப்பொழுதும் இருந்து வருகிறார். நாங்கள் அவருக்குச் சிரம் தாழ்த்தி உளமாற வணக்கத்தைச் செலுத்துகின்றோம். அவரே என்னுடைய கண்கண்ட தெய்வம். நான் அவரை தியானிக்கின்றேன். ஒரு முறை குருதேவர் என்னைப் பற்றி, "சேடிலால் பிறவியிலேயே என்னுடைய சிஷ்யர்" என்று கூறியிருக்கின்றார். அவருடைய வாக்கு என்றென்றும் மெய்யாகவே இருக்கட்டும். நான் பிறவி எடுக்குந்தோறும் நான் ஒவ்வொரு பிறவியிலேயும் அவருடைய சீடராகவே இருக்கவேண்டுகிறேன். எனது சிவானந்தர் நீடூழி வாழ்க. இப்பொழுது நான் சுகமாக இருக்கின்றேன்......

சேடிலால், லக்னௌ.

## சிவானந்தர் எனது அருகிலிருந்தார்

தங்கள் அன்பார்ந்த பதிலுக்கு மிக்க நன்றி. தங்கள் கருணையினால் என்னுடைய அறுவைச் சிகிச்சை நல்ல முறையில் நடந்தது. 1955 ஜனவரி 6ந் தேதி நான் ஸ்டேட் மருத்துவமனையில் அறுவைச் சிகிச்சை செய்யப்படும் பொழுது ஒரு அற்புதம் நிகழ்ந்தது. நான் தண்ணீர் கூட விழுங்க முடியாத அளவு வலியினாலும் துன்பத்தினாலும் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். இரண வைத்தியர் என்னை மருத்துவமனையில் ஒருநாள் தங்கியிருக்கச் சொன்னார். நான் அதை மறுத்து என்னுடைய வீட்டிற்கு வந்து விட்டேன். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு நான் மிகவும் சோர்வடைந்தேன். நான் எங்களுடைய மில் டாக்டருக்குச் சொல்லியனுப்பினேன். எனக்கு ஒரு பெனிசிலின் ஊசி போடப்பட்டது. ஆனால் நான் வேதனைப்பட்டுக் கொண்டுதான் இருந்தேன். நான் என்னாலியன்றவரை செய்து பார்த்து எல்லாவற்றிலும் தோல்வி கண்ட பிறகு, தங்களைப் பற்றி நினைத்து மெதுவாக பிரணவ (ஓம்) ஜெபத்தைச் செய்ய ஆரம்பித்தேன். ஆனால் ஜப உச்சாடனத்தினால் எனக்கு வலி ஏற்பட்டது. நான் வீட்டிலுள்ளவர்களைத் தூங்கப் போகும்படிக் கூறினேன். சிறிது நேரம் கழித்து என்னுடைய படுக்கைக்குப் பக்கத்தில் சுவாமிஜியின் திருவுருவத்தைக் கண்டேன். கண்ணீர் கன்னங்களின் மேல் புரண்டோட நான் தங்களின் பாதார விந்தங்களை முத்தமிட்டேன். தாங்கள் என்னைப் படுக்கச் செல்லும்படியும் வலி எல்லாம் மறைந்துவிடும் என்றும் கூறினீர்கள். சுவாமிஜி, நான் தங்களைக் கண்ணாரக் கண்டேன், கனவில் அல்ல. தாய், மகனிடத்து அன்பு காட்டுவதைப் போல் தாங்கள்

என்னிடம் பேசினீர்கள். பத்து நிமிடங்களுக்குப் பிறகு நான் ஆழ்ந்து உறங்கிவிட்டேன். குருஜி, தங்கள் தரிசனத்திற்கு நன்றி செலுத்த அனுமதி கொடுங்கள். நான் எப்பொழுதும் தங்கள் காலடியிலேயே இருக்க விரும்புகின்றேன். நான் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

ரதன்லால் சர்மா
பிர்லாநகர், குவாலியர்.

*　　　*　　　*

அவர் வந்து என்னைக் குணப்படுத்தினார்

நான் அபாயகரமான நிலையில் நோய் வாய்ப்பட்டிருந்தேன். மருந்துவர்கள் என்னுடைய நிலை கவலைக்கிடமாக இருக்கிறது என்று கைவிட்டு விட்டனர். அப்பொழுது நான் "ஓம் நமோ பகவதே சிவானந்தாய" என்று ஜெபிக்க ஆரம்பித்தேன். சிறிது நேரத்தில் சுவாமி சிவானந்தர் எனது அருகில் நின்று என்னை ஆசீர்வதித்துக் காட்சி கொடுத்தருளினார். இது கனவோ அல்லது பிரமையோ அல்ல. இது நான் படுத்திருக்கும் கட்டிலைக் காட்டிலும் மெய்யானது. எப்படியோ நான் அதிசயமான வகையில் உடனடியாக பூரண குணமடைந்ததே இந்தக் காட்சி உண்மையானது என்பதற்குப் போதிய சான்றாகும். இந்த மாதிரி அற்புதமான வகையில் நான் குணமடைந்ததைக் கண்டு மருத்துவர்கள் கூட திகைப்படைந்தனர். இது எல்லாவற்றிற்கும் பகவான் சிவானந்தருடைய மேலான கருணையே காரணமாகும்.

சுப்ரமணியம் பெங்களூர்

*　　　*　　　*

## அந்த இரகசிய நண்பர் யார்?

இதற்கு முந்திய கடிதத்தில் குறிப்பிட்டிருந்த நோயிற்காக வெற்றிகரமாக ஆபரேஷன் செய்து கொண்டு இல்லம் திரும்பிவிட்டேன் என்பதைத் தங்களுக்குத் தெரிவிக்க மகிழ்ச்சியடைகின்றேன். தாங்கள் அனுப்பிவைத்த பகவானுடைய பிரசாதம் நான் அறுவைச் சிகிச்சைக்காக வீட்டைவிட்டுப் புறப்படுகின்ற அதே தினத்தில் எனக்குக் கிடைத்தது ஒரு அதிருஷ்டம் என்றே சொல்லவேண்டும்.

இத்தச் சந்தர்ப்பத்தில் எனக்கு ஜூன் 6-ந்தேதி ஆபரேஷன் செய்த டேல்கோவான் ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஏற்பட்ட ஒரு மிக ருசிகரமான சம்பவத்தைப் பற்றிக் குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.

ஆபரேஷன் மேஜையின் மீது நான் படுக்க வைக்கப்பட்டு குளோரோபாரம் கொடுக்கப்பட்டவுடனேயே, தூய வெள்ளை ஆடை உடுத்த யாரோ ஒரு கனவான் ஆபரேஷன் தியேட்டருக்கு வந்து தான் அங்கு இருக்க வேண்டுமென்றும் நான் அவருக்கு நண்பர் என்றும் கூறினர். இந்த இடத்திலே நான் ஒரு விஷயம் தெளிவுபடுத்த வேண்டி இருக்கிறது. எனக்கு டேல்கோவானில் நண்பர்கள் யாரும் இல்லை. தவிர எனக்கு ஆபரேஷன் நடப்பது என்னுடைய குடும்பத்தாருக்கும் பம்பாயிலுள்ள எனது தம்பிக்கும் தவிர வேறு யாருக்கும் தெரியவும் தெரியாது. எனது தம்பி கூட அன்று மாலை வெகு நேரம் கழித்துத் தான் வந்து சேர்ந்தான். அந்த 'நண்பர்' ஆபரேஷன் முடிந்தபிறகு என்னுடன் இருந்திருக்கிறார். இந்த விஷயத்தை ஆஸ்பத்திரி மெடிகல் ஆபீஸர் எனக்குத் தெரிவித்தார். அவர் அந்த நண்பரிடம் எனக்கு ஊசிக்காக மருந்து வாங்கிவரச் சொல்லி சீட்டு கூடக்

கொடுத்தனுப்பியதாக கூறினர். பிறகு ஆஸ்பத்திரியிலிருப்பவர்கள் என்னுடைய ஆடைகளை அவரிடம் கொடுப்பதற்காக அவரைத் தேடிய பொழுது அவர் அங்கு எங்குமே காணப்படவில்லை. அடுத்தநாள் காலையில் மெடிகல் ஆபீஸர் எங்களை அவர் எழுதிக் கொடுத்த ஊசி மருந்துகள் வாங்கப்பட்டு விட்டனவா என்று கேட்டார். ஆபரேஷன் நடந்த தினத்தன்று என்னுடைய 'நண்பரி'டம் சீட்டு கொடுத்தனுப்பியதாக அவர் கூறியபொழுது நான் பேராச்சரிய மடைந்தேன். அதேபோல் எனது தம்பியும் ஆச்சரியப் பட்டான். பிறகு நாங்கள் அந்தச்சீட்டு இருக்கிறதா என்று தேடிப்பார்த்த பொழுது அது என்னுடைய கட்டிலின் மேலுள்ள படுக்கைக்குக் கீழே காணப் பட்டது.

இந்த அனுபவம் அங்கிருந்த ஒவ்வொருவருக்கும் திகைப்பை உண்டு பண்ணியது. குறிப்பாக அந்த 'நண்பர்' யாராக இருக்கலாம் என்று அடையாளம் காண்பதில் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் மிகவும் அதிகம்.

இதைப்பற்றி சிந்தித்து சிந்தித்துப் பார்த்துக் கடைசியாக எனக்குச் சரியென்று பட்ட ஒரே ஒரு முடிவிற்குத்தான் என்னால் வரமுடிந்தது.

நான் ஆபரேஷன் செய்து கொள்வதற்காக புறப் படுகின்ற அதே தினத்திலேயே பிரசாதம் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்க வில்லை. அம்மாதிரி கிடைப் பதற்குக் காரணம் தங்களுடைய கருணையேயன்றி வேறில்லை. ஆஸ்பத்திரிக்கு வந்திருந்த அந்த 'நண்பர்' தங்களைத் தவிர வேறு யாராகவும் இருக்க முடியாது என்று நான் உறுதியாக நம்புகின்றேன். தாங்கள் என்னிடத்து காட்டிய அன்பிற்காக என்னுடைய மன

மார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளாம லிருக்க முடிய வில்லை.

எனக்குத் துன்பம் ஏற்பட்டுத் தங்களை நினைக்கும் பொழுது என்னுடைய துன்பம் நீங்கி விடுகின்றது. எனக்கு ஆபரேஷன் செய்யப்பட்ட அந்த மிக நெருக் கடியான சமயத்தில் தங்களுடைய அன்பும் கிருபையும் எனக்குப் பக்கத்தில் துணை நின்றன. இது எனக்கு மகிழ்ச்சிக்குரியதொரு விஷயம். ஆனால் அதேசமயத் தில் நான் வாழ்க்கையில் செய்த பாவங்கள் முழுவதற் கும் ஈடு கொடுக்கவில்லை யென்றே கருதுகின்றேன். ஏனெனில் அன்று தாங்கள் எனக்கு அருகாமை யிலேயே இருந்தும்கூட தங்களுடைய திருப்பாத கமலங்களின் தரிசனம் எனக்குக் கிடைக்கவில்லை. அந்த நன்னாள் விரைவில் கிட்ட வேண்டு மென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன். தங்களுடைய ஆசியினால் நான் ஆவலுடன் எதிர் நோக்கிக் கொண்டிருக்கும் அந்த நாள் வெகு தொலை வில் இல்லை என்று நான் உறுதியாக நம்புகின்றேன்.

ஸ்ரீ முரளீதர் D. ஹேரைட்

கூப்பர் ஸ்டாஃப் காலனி சதாராரோடு, தென் ரயில்வே

* * *

## அதிசயத் தோற்றம்

தங்களுடைய 1953 ஜூலை 2-ந் தேதியிட்ட கடிதம் கிடைத்த சிறிது நேரத்திற்குப் பிறகு ஸ்ரீ புஷ்ப குமாரி தாங்கள் அன்புடன் உபதேசித்திருந்த திருமண மந்திரத்தை பாவத்துடன் ஜெபம் செய்ய ஆரம்பித் தாள். இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு ஊழ் வினையான து ஜலதோஷம், இருமல், மூச்சடைப்பு,

ஜுரம் ஆகிய வடிவத்தில் வேலைசெய்ய ஆரம்பித்தது. தக்க சிகிச்சைக்குப் பின்னர் பதினைந்து நாட்களில் இவைகள் மறைந்தன.

இந்தச் சமயத்தில் குறிப்பிடத்தக்க விசேஷமான தொரு சம்பவம் நிகழ்ந்தது. 4ந் தேதி அவள் படுக்கையை விட்டு எழுந்தவுடன் நடுங்க ஆரம்பித்தாள். வயிற்றுவலி தாங்க முடியவில்லை யென்றும் கண் துடிக்கிறது என்றும் தனக்கு முடிவு காலம் வந்துவிட்டது என்றும் கூறிக்கொண்டு புரண்டு புரண்டு அழுது கொண்டிருந்தாள். இந்த நிலை ஒரு மணி நேரம் நீடித்தது. நாங்கள் எல்லோரும் அவளைச் சாந்தப்படுத்த முயற்சித்தோம். தங்களையும் எங்களையும் இடைவிடாது நினைத்துக் கொண்டிருக்கும்படி கூறினோம். தங்களுடைய கருணையை வேண்டிய பிறகு உரத்த குரலில் சிவானந்த ஓம் சச்சிதானந்த ஓம் என்று இனிமையாக ஜபிக்க ஆரம்பித்தாள். என்ன ஆச்சரியம்! காலை 8-05 மணிக்கு அவள் சிறிது சிறிதாக அமைதி பெற்றதைப் பார்த்த பொழுது எங்களுக்குப் பெருவியப்பும் திருப்தியும் ஏற்பட்டது. அவள் சிறிது சிறிதாகச் சாந்தியடைந்தாள். அவள் பார்வை தெளிவடைந்து சிறிது நேரம் இங்குமிங்கும் சென்றுவிட்டு மேற்கூரைப் பக்கம் திரும்பியது. அவள் சுற்றுப்புறச் சூழ்நிலையை நன்குணர்ந்திருந்தாள். பார்வையை கூரையைவிட்டு எடுக்காமலேயே உற்றுப் பார்த்துக் கொண்டு புன்னகை பூத்தவளாய் என்னிடம் மெதுவாகவும் இனிமையாகவும் கூறலுற்றாள். "பாபூஜீ, பாருங்கள், சுவாமிஜி இங்கே இருக்கிறார்." உடனே அவள் தங்களைக் கரங்குவித்து நமஸ்காரம்செய்து பக்தி சிரத்தையுடன் புன்னகை பூத்தவளாகவே இருந்தாள். நான் அவளுடைய படுக்கைக்கடியிலேயே அமர்ந்திருந்தேன். அவள் தன்னுடைய தாயாரையும் உன்னே

அழைத்துத் தங்களைச் சுட்டிக்காட்டி ''பாபூஜி இங்கே இருக்கிறார்'' என்று கூறி சிரித்தவண்ணமாகவே இருந்தாள். கண்ணீர் உகுக்க வேண்டாம். சுவாமிஜி தன்னுடைய மலர்க் கரங்களால் தடவிக் கொடுத்து சாந்தியுடனிரு என்று கூறுகிறார்.'' பிறகு அவர் ஒரு டம்ளர் ஜலம் கேட்டாள். அதைக் கொண்டு வந்து கொடுத்ததும் அவள் படுக்கையை விட்டு எழுந்துஉட்கார்ந்து கொண்டு ஆசமனம் (மந்திரத்தால் வாயில் நீர்கொள்ளல்) செய்து பாதி ஜலத்தைப் பருகி விட்டு டம்ளரைத் தாயாரிடம் கொடுத்துவிட்டாள். ஸ்ரீ மாதா சஜாதாதேவி அதை வாங்கி சரணம்ருதமாக உபயோகிப்பதற்காக ஒருபுறமாக வைக்கச் சென்றார்கள். ஆனால் அவ்வாறு செய்யவொட்டாமல் அவள் அந்த டம்ளரை மறுபடியும் வாங்கி எஞ்சியிருந்த தண்ணீரையும் குடித்து விட்டு டம்ளரைத் தங்களிடம் காட்டி அது காலியாகிவிட்டது என்று கூறினாள். பிறகு எங்களைப் பார்த்து சுவாமிஜி அதிலிருந்த தண்ணீர் முழுவதையும் தன்னையே பருகச் சொன்னார் என்று கூறினாள். இந்தப் பரவச நிலை சுமார் 2-30 மணி நேரம் நீடித்தது. அப்பொழுது அவள் புன்னகையுடன் தங்களை நமஸ்கரித்தவண்ணம் சில மந்திரங்களை உச்சரித்துக் கொண்டிருந்தாள். தாங்களும் புன்னகையுடன் தங்களுடைய மலர்க் கரங்களைத் தங்களுக்கு சமர்ப்பிப்பதற்காக விபூதிப் பிரசாதத்திற்கு ஏற்பாடு செய்யச் சொன்னாள். அது அவளிடம் கொடுக்கப் பட்டது. பிறகு அவள் என்னிடம் ''இந்தப் பிரசாதத்தை சுவாமிஜி நமது அறையில் மாட்டப் பட்டிருக்கும் அவருடைய படத்தின் மூலம் விநியோகிக்கச் சொல்கிறார்'' என்று கூறினாள். பிறகு நான் அந்தப் பிரசாதத்தை அந்ப் படத்தில் தங்கள் பாதகமலங்களில் சமர்ப்பித்துவிட்டு நாங்கள் எல்லோரும் சேர்ந்து

ஆரத்தி சொல்ல ஆரம்பித்தோம். அவள் எங்களைப் பார்த்துத் தாங்கள் அந்தப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டிருப்பதாகக் கூறினாள். பிறகு சுவாமிஜி மறு படியும் வருவதாக உறுதியளித்துவிட்டுச் சென்று விட்டார் என்று சொன்னாள். பிறகு பிரசாதம் எல்லோ ருக்கும் வழங்கப்பட்டது.

தங்களுடைய மேற்கூறிய 2-ந் தேதியிட்ட கடிதம் வந்ததிலிருந்து அவளுடைய ஆன்மீக சம்ஸ்காரங்கள் மிகுந்த அளவிற்கு துரிதமாக அபிவிருத்தி அடைந் திருக்கின்றன என்பதைப் பார்க்கும் பொழுது பெரும் திருப்தியைக் கொடுக்கிறது. நாங்கள் எல்லோரும் ஒருமுறை ஆனந்த குடீரம் விஜயம் செய்ய மிகுந்த ஆவலுடையவர்களாக இருக்கின்றோம். சர்வேஸ்வரா! எல்லாப் பெருமையும் தங்களைச் சார்ந்ததே.

கேதார்நாத் டெல்லி

* * *

## ஆன்மீக நிவாரணம்

அடிலெய்டில் வசித்துவரும் ஸ்ரீ மக்பேர்ஸன் (Mr. Mc. Pherson) கடுமையான நோய்வாய்ப்பட்டி ருந்தார். அவருடைய மனைவி ஆன்மீக உதவி கேட்டு எழுதியிருந்தார். நான் அவருக்கு எழுதிய கடிதத்தில் ஓம் என்ற பிரணவத்தை எழுதி அதற்குள் விபூதியைத் தூவி அனுப்பினேன். நான் மானசிகமாகத் தங்களை நினைத்து அவருக்கு உதவும்படி வேண்டினேன். அவருடைய மனைவி எங்களுக்கு நன்றிகூறி பதில் அனுப்பியிருந்தார். தங்கள் கருணையினால் அவர் நெருக்கடியான கட்டத்தைத் தாண்டி விட்டார்.

சில தினங்களுக்கு முன் ஸ்ரீ மதி மக்பேர்சன் அவர்களிடமிருந்து ஆன்மீக உதவி கோரி ஒரு அவசரத் தந்தி வந்திருந்தது. நான் தூபம் கொளுத்தி தங்களுடைய திருவுருவப் படத்தை பலிபீடத்தின்மீது வைத்து அதைப் புது மலர்களால் அலங்கரித்து (அவருடைய படத்தில்) அவருடைய நெற்றியின் மத்தியில் சிறிது திருநீற்றை வைத்து அவருக்கு உதவி செய்யுமாறு தங்களை வேண்டினேன். நான் மந்திரத்தை ஜெபித்துக் கொண்டே அவருடைய இடுப்பு பாகத்தில் என்னுடைய கவனத்தை நீண்ட நேரம் குவிய வைத்து தியானம் செய்தபொழுது ஒரு சக்திப் பெருக்கு என்னிடம் ஊற்றெடுக்கவே நான் சிறிது நேரம் உடல் உணர்ச்சியை இழந்தேன். இந்நிலையிலிருந்து மீண்டு வந்ததும் தங்களை ஒரு கணப்பொழுது கண்டேன். தாங்கள் அவருக்கு உதவியதை உள்ளுணர்வின் மூலம் அறிந்துநான் ஆனந்தப்பரவச நிலையை அடைந்தேன். அன்பார்ந்த சிவா, தங்களுக்குப் பன்முறை நன்றி செலுத்துகின்றேன். பிரார்த்தனைக்குத் தாங்கள் உடனே செவி சாய்க்கின்றீர்கள் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ மதி மக்பேர்சனிடமிருந்து தன்னுடைய கணவருக்கு எவ்வளவோ பரவாயில்லை என்று குறிப்பிட்டு ஒரு கடிதம் வந்தது. இந்த அற்புதமான நிகழ்ச்சியைக் கண்ணுறும் போது ஒருவருக்கு ஏற்படுகின்ற சந்தோஷத்தை வார்த்தையால் எடுத்தியம்புவது கடினம். தங்களுடைய அற்புதமான தெய்வீக உபதேசங்கள் ஞாபகத்தில் இறுத்தப்பட்டு பூரணமாக வெற்றியுடன் பின்பற்றப்பட்டு வந்திருக்கின்றன. தங்களுக்கு எப்பொழுதும் நல்லாரோக்கியம் நிலைத்திருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன். தங்களுடைய உதவிக்கும், தாங்கள் காட்டுகின்ற வழிக்கும் என்னுடைய

நன்றியறிதலை தயவுசெய்து ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கின்றேன்.

ஸ்ரீ மதி M. E. வில்ஸன், ஆஸ்திரேலியா

*　　*　　*

### ஆபத்திலிருந்து உயிர் காப்பாற்றப்பட்டது

இன்று காலை பம்பாயில் சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களின் அற்புத சக்திகளைக் கண்ணாரக்கண்டு அனுபவிக்கும் பாக்கியம் கிட்டியது. இதுபோன்ற அற்புதங்களைத் தற்காலச் சரித்திரத்தில் காண முடியாது. சுவாமிஜி அவர்களின் கிருபையால் என்னுடைய உயிர் விமான மூலம் இந்தியா வரும்பொழுது அமெரிக்காவில் காப்பாற்றப்பட்டது. கடிதம் பின்னால் வருகிறது.

R. கௌரி சங்கர்
(அமெரிக்க சரித்திர ஆராய்ச்சியாளர்)
பம்பாய்

*　　*　　*　　*

### இரட்சிக்கும் எண்ணம்

குருதேவர் எவ்வாறு நெடுந் தொலைவிலிருந்தும் கூடத் தன்னுடைய சீடர்களைப் பாதுகாக்கிறார் என்பதை இங்கு என்னால் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை 9ந் தேதி இரவு படுக்கைக்குச் செல்லுமுன் நான் குருதேவரின் உபதேச மொழிகளை என்னுடைய மனைவியிடமும் குடும்பத்திலுள்ள ஏனையோரிடமும் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தேன். பிறகு சுவாமிஜியைப் பற்றிய எண்ணம் நிரப்பப் பட்டவனும்

படுக்கைக்குச் சென்றேன் விடியற்காலை படுக்கையை விட்டு எழுந்து குளிக்கும் அறைக்குள் நுழைந்த பொழுது அங்கு ஒரு விஷப்பாம்பு படுத்திருந்தது. அது பார்ப்பதற்கு ஒரு கயிறு அரைச் சுற்றுடன் கிடப்பதைப் போல் இருந்தது. ஸ்நான அறை பரிசுத்தமாகவும் பளிங்குக்கல் பதிக்கப்பட்டு வழவழப்பாகவும் பாதாளச் சாக்கடையுடன் இணைக்கப்பட்ட சாக்கடை வசதியுடனும் இருந்தது. அது எப்படி அங்கு வந்திருக்கும் என்பது புரியவில்லை, அது ஒரு கயிறு என்று நினைத்து நான் அதைத் தூக்கி வெளியே எறியப் போனேன். ஆனல் முதல் நாள் இரவிலிருந்தே சுவாமிஜியின் நினைவிலேயே ஊறியிருப்பதால் அவருடைய இரட்சிக்கும் கரம் அந்தக் கடைசி விநாடியில் அதைத் தீண்டுவதிலிருந்து தடுத்து நிறுத்தியது. நான் அதைத் தீண்டப் போகும் பொழுது அது சிறிது நகர்ந்தது. இம்மாதிரி ஆபத்துக் காலத்தில் தன்னுடைய எளிய சீடர்களுக்கு உதவி புரிய வருவதுதான் குருதேவரின் பெருமையையும், எல்லையில்லாக் கருணையையும் எடுத்துக் காட்டுகின்றது. அவர் என்றென்றும் நம்மைப் பாதுகாத்து நமக்கு வழிகாட்டிச் செல்ல இறைவன் அவருக்கு நல்லாசிகளை வழங்குவாராக.

K. P. மோட்வெல்
சீப் இன்ஜினியர் (ரிடையர்டு)
அலஹாபாத்

* * *

### யமதூதர்கள் விரட்டியடிக்கப்பட்டனர்

குருதேவ்ஜி மகராஜ், 1959 டிசம்பர் மாதத்தில் எனக்குக் கடுமையான பல்வலி ஏற்பட்டது. வலி

தாங்கமுடியாமல் இருந்ததால் நான் ஒரு மாதம் விடுமுறை எடுக்க வேண்டியதாயிற்று. 1959 டிசம்பர் 25ந் தேதி (அதாவது 1958ல் எனக்கு குரு மந்திரம் கிடைத்த அதே தேதியில்) இரவு சுமார் 9 மணிக்குப் பல்வலி தாங்க முடியாத அளவுக்குச் சென்றுவிட்டது. நான் அமைதியற்றவனுனேன். உறவினர்கள் நான் காலமாகி விட்டதாக நினைத்துக் கொண்டு என்னைப் படுக்கையிலிருந்து கீழே இறக்கிப் போட்டுவிட்டார்கள். ஆனுல் நான் அப்பொழுது மனத்திற்குள் தங்களை நினைத்தவண்ணம், "சிவானந்த சிவானந்த, சிவானந்த பாஹிமாம், சிவகுரு சிவகுரு ரக்ஷமாம்" என்று உச்சரித்துக்கொண்டிருந்தது ஞாபக மிருக்கிறது. அப்பொழுது எனது படுக்கைக்கருகில் தாங்கள் கண்முன் நின்றுகொண்டிருந்ததைக் கண் டேன். வேறு மூன்று உருவங்கள் தங்களுடைய சாந்நித்தியத்தால் என்னுடைய படுக்கைக்குச் சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டு விடியற்காலை 4 மணிவரை என்னிடம் நெருங்குவதற்கு அஞ்சிக் கொண்டிருந் தன. சரியாக 4 மணிக்கு "இப்பொழுது நான் விடை பெற்றுக் கொள்கிறேன். உங்களுக்குப் பூரண குணமாகிவிட்டது," என்ற தங்களுடைய குரல் கேட்டது. 24 மணி நேரத்திற்குள் நான் உண்மையி லேயே பூரண குணமடைந்தேன். இந்த அனுபவத் தைத் தங்களுக்குத் தெரியப்படுத்துவதுடன் இந்த எளிய சீவனுக்குத் தங்களுடைய குரு பக்தியைக் கொடுத்துத் தொடர்ந்து ஆசி கூறும்படிக் கேட்டுக் கொள்கின்றேன்.

இந்தர்நாத் பூன்ஜ், புதுடெல்லி.

## மாயாஜாலமா அல்லது கனவுக் காட்சியா?

தங்களுடைய கடிதத்தைக் கண்டால் எவ்வளவு திருப்தி. 21 நாட்களுக்கு மேலாக அம்மை காரணமாகப் படுத்துவிட்டேன். இந்த நிலையை மேலும் மோசமாக்க அப்பொழுது குடும்பத்திலும் ஒன்றில்லா விடில் மற்றொரு அசௌகரியம் ஏற்பட்டு வந்தது. ஆனால் இந்த 21 நாட்களும், ஸ்நானம் செய்த பிறகு 18 நாட்களும் என்னுடைய மனம் இடைவிடாது தங்களைப் பற்றியும், ரிஷிகேசத்து ஆனந்த குடீரத்து வாழ்க்கையைப் பற்றியும் தான் நினைத்துக் கொண்டிருந்தது என்பதை மிகப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். அந்தச் சிந்தனை காரணமாக நான் என்னுடைய உடல் வேதனையையும் மன வேதனையையும் மறந்திருந்தேன். என்னுடைய அன்பர்களும், நண்பர்களும், பிரபல வைத்தியரும் இயற்கை அன்னை எனக்குத் தாராளமாக அளித்திருக்கும் பரிசைப் பார்த்துவிட்டு நான் கடும் துன்பத்தினால் அவஸ்தைப்பட்டிருக்க வேண்டும் என்று கூறினார்கள். எனக்கு அவ்வாறு கடும் வேதனையை அனுபவித்ததாகத் தோன்றாதபொழுது இவர்கள் எல்லோரும் ஏன் இவ்வளவு தூரம் உணர்ச்சி வசப்பட்டு இரக்கப்படுகின்றனர் என்று எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது.

அறியாமையில் உழன்று வரும் ஜன்மமாகிய காரணத்தினால், தங்களை இடைவிடாது தியானித்து வந்ததனால் தங்களுடைய பிரசன்னத்தை எனக்கு அருகில் உணர்த்தி நான் வேதனையை உணராத வண்ணம் கருணை கூர்ந்து உதவியது தாங்கள்தான் என்பது எனக்குப் புலப்படவே இல்லை.

ஒரு நாள் ஒரு கனவு கண்டேன். ரிஷிகேசத்தில் ஸ்நான கட்டத்தில் அமைந்துள்ள ஸ்ரீ ராமர் கோவிலுக்கு எதிரிலுள்ள ரிஷிகேஷ் குண்டத்தில் நான் மூழ்கிக் கீழே சென்று கொண்டிருப்பதைப் போல் உணர்ந்தேன். அப்பொழுது கெம்பீரமாக தேஜோமயமாக அமர்ந்திருந்த தாங்கள் தங்கள் வலக் கரத்தை நீட்டி என்னை நீர்மட்டத்திற்கு மேலே தூக்கிவிட்டீர்கள். அப்பொழுது கூட என்னுடைய அளவுக்கு மிஞ்சிய பாவச் சுமையின் கனம் என்னைத் தண்ணீருக்குள் இழுத்தது. ஆனால் தாங்கள் தங்களுடைய மேதாவிலாசமும் இரக்கமும் கூடிய புன்னகையுடன், மறுபடியும் ஒரு தூக்கு தூக்கிக் கரைக்குக் கொணர்ந்து தங்கள் பக்கத்தில் அமர்த்தித் தங்களுடைய கரத்தை என்னுடைய சிரசின்மீது வைத்தபோது தாங்கள் மனமிரங்கி என் பாவத்தைப் போக்க ஆசீர்வதிப்பதைப் போல் நான் உணர்ந்தேன். அப்பொழுது என்னுடைய மனத்தில் மின்னொளி போல் ஒரு எண்ணம் தோன்றியது. அதுதான் பதித பாவனராக விளங்கும் தங்களுடைய மகிமை. ஆஸ்ரமத்தில் தங்களுடன் தினசரி தொடர்பு கொண்டு தங்களைச் சூழ்ந்துள்ள ஆன்மானுபூதி யடைந்த புண்ணியாத்மாக்களைப் பற்றி என்றால் புரிந்துகொள்ள முடியும். அவர்கள் தங்களுடைய உதவியினால் ஆன்மீக மார்க்கத்திலே மிக விரைவாக முன்னேறிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், "என்னைப் போன்ற பாவி ஒருவனைக் கரை சேர்ப்பது ஆஸ்ரமத்திலிருக்கும் தேவதைகள் அனைத்தையும் கரை சேர்ப்பதற்கு ஒப்பாகும்," என்கின்ற மனோபாவத்தையே தாங்கள் அதிகம் கொண்டிருக்கிறீர்கள் என்று நான் உணர்கின்றேன்.

தங்களுடைய இந்த மகத்தான லீலையை என்னுடைய கற்பனை என்றோ அல்லது இந்த ஜால வித்தையை விளையாடிக் காட்டுகின்ற மூளையின் கோளாறு என்றோ ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அறிவினால் ஆழம் காண முடியாததும், புரிந்து கொள்ள முடியாததுமான உள்ளம் சம்பந்தப்பட்ட காரணங்கள் இருக்கவேண்டும் என்று நான் பிறகு உணர்ந்தேன். தங்கள் மகிமை விளங்குக; தங்கள் இயக்கம் ஓங்குக. அது எனக்கு அளவு கடந்த உற்சாகத்தை அளித்திருக்கிறது. முதலில் நான் கடிதங்கள் எழுதுவதன் மூலம் இந்தத் தொத்து வியாதி பரவக் கூடாது என்று நினைத்ததாலும், இரண்டாவதாக தங்களுடைய சர்வ வல்லமை பொருந்திய உணர்விற்கும் சகஜ சமாதி நிலையிலிருக்கும் ஜீவன் முக்தரின் திவ்ய திருஷ்டிக்கும் இந்த உலகின் உள்ளும் புறமும் எதுவும் தப்பிவிட முடியாது என்கின்ற தீவிரமான நம்பிக்கை காரணமாகவும் நான் தங்களுக்கு எழுதாமல் விட்டுவிடலாம் என்று எண்ணினேன்.

நான் அம்மாதிரி நினைத்ததுதான் தாமதம். என்னுடைய குமாஸ்தா தங்களுக்கு இதைப் பற்றிக் கடிதம் எழுதியிருந்ததாகவும் உடனே அதற்குத் தங்களிடமிருந்து இங்குள்ள எல்லோரையும் ஆசீர்வதித்து நவம்பர் 28ந் தேதியிட்ட கடிதம் வந்ததாக என்னிடம் கூறினார். நான் திகைத்துப் போய் விட்டேன். நான் எவ்வாறு நன்றி செலுத்துவது என்றே புரியவில்லை. தங்களுடைய இவ்வளவு கருணைக்கு நான் எவ்வாறு தகுதியுடையவன் ஆனேன் என்பது என்னுடைய சிற்றறிவிற்கு எட்டாத விஷயம். ஆனால் நான் எப்படி, ஏன், எங்கு இருக்

கிறேன், எங்கு இருக்கவேண்டும் என்பதைத் தாங்கள் நன்கு உணர்வீர்கள்.

தங்களுடைய இயக்கம் நாளுக்கு நாள் பலம் பெற்று தங்களுடைய ஆரோக்கியமும் நீடித்து அதன் மூலம் என்னைப் போன்று வேதனைப்படும் லட்சோப லட்சம் மக்கள் காப்பாற்றப்பட்டு, தங்களுடைய ஆசிகளினால் பேரானந்தத்தையும் சாந்தியையும் அனுபவிக்க வேண்டும் என்று தங்கள் வடிவமாகவே விளங்கும் ஆண்டவனிடம் பிரார்த்தித்துக் கொள் கின்றேன்.

சிவானந்தாஸ்ரமம், ஆனந்த குடீரம் ஆகிய வற்றின் ஒப்பற்ற இந்த நடமாடும் தெய்வத்தின் முன்னோடிகளாக விளங்கும் ஆஸ்ரமத்திலுள்ள எல்லா மகாத்மாக்களுக்கும் எனது அன்பு கலந்த வணக் கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

K. ஸ்ரீனிவாசன், B.A.,B.L., அலப்பி.

*  *  *

## சிவாவின் நினைவு எங்கள் உயிரைக் காத்தது

பன்னிரண்டு பேருக்கு மேற்பட்ட பிரயாணி களுடன் சென்று கொண்டிருக்கும் ஒரு பஸ்ஸில் நானும், எனது மனைவி, சிறிய மகன் ஆகியோரும் இருந்தோம். பௌரி மலைப்பாதை வழியாக நாங்கள் சென்று கொண்டிருந்தோம். மோட்டார் வண்டி டிரைவருடைய கட்டுப்பாட்டை மீறி பாதாளத்தில் விழுவதற்கு முன் ஒரு குலுக்கு குலுக்கியது. மலைச் சாரலில் பஸ் உருண்டோடியது. பின்புறமிருந்த கதவுகள் திறந்து விடவே பின்புறம் அமர்ந்திருந்த பன்னிரண்டு பேர்களும் வெளியே தூக்கி வீசப்பட்

டனர். பிறகு என்ன நடந்தது என்பது தெரியாது. நாங்கள் முன்புறம் சிக்கிக் கொண்டு விட்டோம்.

பஸ் பாதையை விட்டுக் கீழே உருளுவதற்கு முன்பு கடுமையான அதிர்ச்சி ஏற்பட்ட பொழுது என்னுடைய சிறிய பையன், சச்சிதானந்தன் திடீரென்று "சத்குரு மஹராஜ் கி ஜெய்" என்று கூவினான். இதைக் கேட்டவுடன் எங்களுக்கு எங்களுடைய குருநாதர் சுவாமி சிவானந்தஜி மஹராஜ் அவர்களுடைய திவ்ய ரூபம் மனக்கண் முன்பு காட்சியளித்தது. அவருடைய பாதுகாக்கும் கரங்கள் எங்களை அணைத்துக் கொண்டிருந்தன. நாங்கள் பஸ்ஸோடு சேர்ந்து மலைச் சரிவில் நூற்றுக் கணக்கான அடிகளுக்குக் கீழே உருண்டு சென்றபோது அந்த பஸ்ஸே சுக்கு நூருகப் போய்விட்ட போதிலும் நாங்கள் மூவர் மட்டும் ஏறக் குறைய சிறிதும் காயப்படாமல் இருக்கக் கண்டோம். எங்களுக்கு மிக அற்பமான சிராய்ப்புகளே ஏற்பட்டிருந்தன. அவைகளும் அடுத்த நாளே சரியாகி விட்டன.

எங்களைத் தொடர்ந்துவந்த மற்றொரு பஸ் விபத்து நடந்த இடத்தில் நின்று எங்களை மீட்டுச் சென்றது. நாங்கள் உடனடியாக ஒரு மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப் பட்டோம்.

அந்தப் பயங்கரமான விபத்திலிருந்து காயமின்றித் தப்பிப் பிழைத்தவர்கள் நாங்கள் ஒரு சிலர்தான். இது எல்லாவற்றிற்கும் சுவாமிஜியின் அதிசயக் கருணை தான் காரணமாகும்.

லோகநாதன்.

## 37. வாழ்வை மாற்றும் அற்புதங்கள்

### சித்திகளைப்பற்றி விசுவாசியின் நோக்கு

நம்பாதவர்கள் என்னைப் பார்த்து கேலி செய்யட்டும். ஆனால் கடந்த ஐந்தாறு மாதங்களுக்குள் (அதாவது தாங்கள் என்னைத் தங்களுடைய பாதுகாப்பில் ஏற்றுக் கொண்டதிலிருந்து) பற்பல அற்புதச் சம்பவங்கள் நிகழ்ந்திருப்பதை என்னால் எடுத்துக் கூற முடியும். வாரக் கணக்கில் நான் தொலைவிலிருந்து தங்கள் இனிய குரலைக் கேட்கச் செய்திருக்கிறீர்கள். இதுவரை நான் கண்டறியாத ஆன்மீக வழியில் என்னை நடத்திச் சென்றிருக்கின்றீர்கள். ரயில், டிராம், கார் முதலியவைகளில் பிரயாணம் செய்வது போன்ற சிறு விஷயங்களில்கூட எனக்கு உதவி புரிந்து வந்திருக்கின்றீர்கள். பல தடவைகள் நான் சிறிதும் சிரமமின்றி போய்ச் சேரவேண்டிய இடத்தை அடைவதற்கேற்ற பிரயாண வசதியை ஏற்படுத்திக் கொடுத்து எப்பொழுதும் பலவீனமாக இருக்கும் இந்த உடலுக்கு வசதிசெய்து கொடுத்திருக்கிறீர்கள். இத்தனையையும் தாங்கள் எனக்காக ரிஷிகேசத்தில் இருந்தவண்ணம் செய்கின்றீர்கள்.

தாங்கள் எனக்காகச் செய்யும் உதவிகளில் பத்து லட்சத்தில் ஒரு பங்காவது செய்யக்கூடிய தந்தை இந்த உலகில் யாருக்காவது உண்டா? ஆகவே தங்களைவிட எனது நலத்தில் அக்கறை கொண்டிருப்பவர் வேறு யாராவது இருக்க முடியுமா? தங்களை நான் எவ்வாறு பாவிக்கின்றேன் என்பது எனக்குத் தான் தெரியும். தாங்கள் தான் என்னுடைய கண்

கண்ட தெய்வம். தெய்வத்திற்கு மேம்பட்டது ஒன்று இருக்குமேயாகில் அது தாங்களே யன்றி வேறில்லை.

R. K. நியோகி, பாகல்பூர்.

* * *

## தியானத்தில் சிவாவின் காட்சி

அன்பிற்குரிய குருதேவா, கடைசியில் நான் தங்களைக் கண்டுகொள்ள முடிந்தமைக்கு எனது கிரகங்களுக்கு நான் நன்றி செலுத்துகின்றேன். தங்களுடைய தரிசனத்தைப் பெறும்பேறு எனக்கு இன்னும் வாய்க்காவிடினும் ஒரு வாரத்திற்கு முன்பு என்னுடைய கனவில் தங்கள் சுயரூபத்தைக் கண்ணாரக் கண்டுகளித்தேன். நான் தங்களை தியானத்திலும் கண்டேன். நான் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி தங்கள் திருமுன் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். தாங்கள் மிக இனிய அன்புகலந்த குரலில் என்னை நோக்கி என்ன வேண்டும் என்று கேட்ட பொழுது என் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் இவைதான். "சுவாமிஜி தங்களைத் தவிர எனக்கு வேண்டுவது யாதுளது?" இதைக் கேட்டதும் தாங்கள் உளமாற ஒரு சிரிப்பு சிரித்தீர்கள். அதில் அன்பும் பரிவும் காணப்பட்டது. பிறகு நான் தொடர்ந்து "நான் இப்பொழுது கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன்" என்று மெதுவாகக் கூறி முடிப்பதற்குள் கண்ணை விழித்துப் பார்க்கவே என்னுடைய வேலைக்குத் தயாராக வெகு நேரமாகியிருக்கக் கண்டேன். எனது அன்புத் தந்தையே ஒரு சிறு விண்ணப்பம். தங்களுடைய படங்கள் இரண்டு வேண்டும். என்னுடைய கைப் பையில் எப்பொழுதும் கூடவே

எடுத்துச் செல்வதற்குத் தகுந்தாற்போல் சிறிதாக ஒன்றும், எனக்கும் என்னுடைய குழந்தைகளுக்கும் எப்பொழுதும் தைரியம், நம்பிக்கை, நேர்மை ஆகிய பண்புகளை ஊட்டிக் கொண்டிருப்பதற்காக என்னுடைய அறையில் மாட்டி வைப்பதற்குப் பெரிய அளவில் ஒரு படமும் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். ஆஷா, விஜே, அஷோக், அடியேன் ஆகியோருடைய பணிவான சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

ஸ்ரீமதி ஷ்யாமா ரஜ்டான், புது டெல்லி

* * *

மங்களகரமான கனவுகள்

தங்களுக்கு வரைகின்ற முதல் கடிதம் இதுவே.

ஆனால் நம்முடைய சூக்கும உள்ளங்கள் கடந்த ஓராண்டு காலமாகவே மிக நெருங்கி தொடர்பு கொண்டிருக்கின்றன. தங்களுடைய எல்லையற்ற கருணையும் அன்பும் காரணமாக மும்முறை எனக்குத் தங்களுடைய காட்சி கனவுகளில் கிடைத்திருக்கின்றது.

தங்களுடைய அகில இந்திய யாத்திரையின் போது நான் தங்களை முதன்முதலில் சென்னையில் தரிசிக்கின்ற பேறு பெற்றேன். தங்கள் கருணை கடாட்சத்தினால் வெகு விரைவில் தங்களிடம் எனக்கு ஒரு பக்தி சிரத்தை ஏற்பட்டது.

சில மாதங்கள் கழித்து ஒருநாள் விடியற்காலை நேரத்தில் தாங்கள் அன்பு கூர்ந்து என்னுடைய கனவில் தோன்றினீர்கள். அதுதான் எனக்குக் கிடைத்த முதல் காட்சி. கனவில் நம்மிடையே நடந்த

உரையாடல் இதுதான். கனவில் தங்களைக் கண்டவுடன் நான் ''சுவாமிஜி, என்னுடைய பெயர் குப்புசாமி. எனது தந்தைக்கு மூன்ருவது மகன். என்னுடைய நட்சத்திரமும் பரணிதான். என்னுடைய மூதாதையரும் பகவான் அப்பைய தீக்ஷிதரே. சச்சிதானந்த சரஸ்வதி சுவாமிகள் இயற்றிய ''ஜீவ பிரம்ம ஐக்ய வேதாந்த இரகசியம் '' என்ற நூல்தான் முதன் முதலில் என்னிடத்தில் சில கருத்துக்களை ஆழப் பதிய வைத்தது. நம்மிடையே குறிப்பிட்ட சில ஒற்றுமைகள் காணப்படுவதன் காரணத்தை நான் அறியலாமோ ?'' என்று கூறினேன். இதைக்கேட்ட தாங்கள் ''அப்படியானுல் அது நல்ல அறிகுறி'' என்று கூறி மறைந்து விட்டீர்கள்.

என்னுடைய தந்தையாரின் உபதேசத்தின் பேரில் தங்களை என்னுடைய குருவாகப் பாவித்துக் கொண்டேன். அதற்குத் தங்களுடைய அன்பு கலந்த அனுமதி வேண்டி நிற்கின்றேன். தங்களுடைய படத்தை மிகச்சிறிய எளிய முறையில் வழிபட்டுக் கொண்டு வருகின்றேன்.

எனது இரண்டாவது கனவு ஏற்பட்ட பிறகு மறுபடியும் விடியற்காலை நேரத்தில் தாங்கள் தோன்றினீர்கள். நான் தங்களைக் கனவில் தரிசித்தபோது உடல் முழுதும் வெண்ணீறு பூசி தேஜோ மயமாக அமர்ந்திருந்தீர்கள். சிலவற்றை எனக்குக் காண்பித்ததாக ஞாபக மிருக்கிறது.

மூன்ருவதாக ஏற்பட்ட கனவு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று நான் கருதுகின்றேன். அந்தக் கனவு எனக்கு மறுபடியும் ஏற்படுமாகில் அதற்காக நான் எதையும் துறப்பதற்குத் தயாராக இருக்கின்றேன். தாங்கள் என்னைத் தங்களுடைய அன்பு வெள்ளத்தால் மூழ்க வைத்து விட்டீர்கள். அந்தக்

கனவில் நான் பிரத்தியட்சமாக தங்களுடைய புண்ணிய சேத்திரமாகிய ரிஷிகேசத்திற்கு யாத்திரையாக வந்தேன். நான் அங்கு வந்து அழகான ஏரியையும் அற்புதமான காட்சிகளையும் கண்டுகளித்தேன். தங்களுடைய சிஷ்யர்களில் ஒருவரிடம் என்னைத் தங்களுடைய திருமுன் அழைத்துச் செல்லும் படிக் கேட்டுக் கொண்டேன். ஆனால் என்னால் தங்களைத் தரிசிக்க முடியவில்லை. மேலும் பல காட்சிகளைப் பார்த்துவிட்டு நான் திரும்பிவிட்டேன்.

விழித்துப் பார்த்தேன். கண்டதெல்லாம் கனவு என்பதை அறிந்ததும் மிக மிக வருத்தமுற்றேன். அவை எல்லாம் நனவாக இருந்திருக்கக் கூடாதா, சுவாமிஜியைத் தரிசித்திருக்கக் கூடாதா என்று ஏங்கினேன். பிறகு நான் மறுபடி தூங்கச் சென்று விட்டேன்.

ஆனால் தங்களுடைய கருணை எல்லையற்றது என்பது மிக விரைவில் ஏற்பட்ட மற்றொரு கனவிலிருந்து தெளிவாயிற்று. இப்பொழுது நான் தங்களைத் தரிசித்துத் தங்கள் பொன்னார் திருவடிகளுக்கு நமஸ்காரங்களைச் செலுத்தினேன். இரண்டு பெண்மணிகள் அருகில் இருக்கத் தங்களைக் கண்டேன். அவர்கள் இருவரும் சபல மனம் படைத்த சிஷ்யைகள் என்றும் அவர்கள் யோகத்தைப் பயில முயன்று கொண்டிருக்கின்றனர் என்றும் தாங்கள் கூறினீர்கள். பிறகு நானும் எனது தந்தையும் தங்களை ஒரு அறையில் சந்தித்தோம். அந்தக் கனவில் தாங்கள் என்னுடைய தந்தையாரிடம் நான் ரிஷிகேசத்திற்கு வந்தாக வேண்டும் என்று கூறினீர்கள்.

சில சமயங்களில் கனவுகளில் எனக்கு விநோதமான மந்திரங்கள் கேட்கின்றன. சிவபூஜை போன்ற நல்ல காட்சிகளும் ஏற்படுகின்றன. இவை எல்லா

வற்றிற்கும் தங்களுடைய கருணைதான் காரணம் என்று நான் திடமாகக் கூற முடியும்.

V. N. *மார்க்கபந்து*
கல்கத்தா

* * *

தங்களுடைய 1954 ஜூன் 29-ந் தேதி கடிதம் கிடைக்கப் பெற்றது. மிக்க நன்றி. முதல் நாள் இரவுதான் எனக்கு மீண்டும் தங்களுடைய காட்சி கிடைத்தது. கனவில் தாங்கள் என்னுடைய நெற்றியில் திருநீற்றைப் பூசுவதுபோல் கண்டேன். அடுத்த நாள் எனக்குத் தங்களுடைய கடிதமும் பிரசாதமும் கிடைத்தன. இந்தக் கனவின் முக்கியத்துவம் என்ன என்பதை அறிய விரும்புகின்றேன்.

தங்களுடைய காட்சி எனக்கு இல்லை. இது நான்காவது தடவை. தங்களுடைய கருணையைத் தவிர வேறு எதுவும் எனக்கு உதவமுடியாது என்று நான் நம்புகின்றேன்.

V. N. *மார்க்க பந்து* B.A.
சென்னை

* * *

## தொலைதூர உபதேசம்

இன்று காலை 3-30 மணிக்குத் தாங்கள் தங்களுடைய செய்தியை மானசீக முறையில் எனக்கு அனுப்பிவைத்ததை நான் நன்கு உணர்ந்தேன். தாங்கள் எனக்கு ஈஸாவஸ்யோபநிஷத்தைச் சொல்ல ஆரம்பித்தீர்கள். சர்வம் ஆனந்தம்—ஆனந்தம் சர்வம், ஈஷா

வஸ்யம் இதம் சர்வம். நான் அதை மனப்பாடம் செய்ய முயற்சித்தேன். பிறகு தங்களுடைய இன்றைய இடையருத வேலை முடிந்து அமைதிக்கு வந்திருப்பீர்கள் என்று எண்ணி நான் (இயேசுவின்) மலைப் பிரசங்கத்தைத் (Sermon on the mount) தங்களிடம் மனப்பாடமாகச் சொன்னேன். பிறகு நான் "கடவுள் பிரசன்னமாயிருக்கிறார், நாம் அமைதியாக இருப்போம்" என்று தொடங்கும் அற்புத கீதத்தைப் பாடிக் காட்டினேன்.

இப்பொழுது தாங்கள் உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள். என்னுடைய உள்ளம் தங்களுடைய நலத்தை நாடிப் பிரார்த்திக்கின்றது. இந்த அற்புதமான கம்பியில்லா முறையின் மூலம் தாங்கள் எனக்குக் கூறிய அனைத்தையும் நான் திரும்பத்திரும்பப் படித்துப் பார்த்தேன். தங்களுடைய எண்ணம் என்னை அமைதியாக இருக்கும்படி வற்புறுத்தவே நான் தற்பொழுது அமைதியாக இருக்கிறேன்.

உண்மையில் நான் மந்திர சக்திகளுக்கு ஆட்பட்டது இதுதான் முதல் தடவை. நான் உயிருள்ள கல்லைப் போலும் ஒளிவிடும் ரேணியத்தைப் போலும் உணர்ந்தேன். நான் எங்கள் பிதாவும் பரலோக தேவனுமான இயேசுபிரானின் புதிய ஏற்பாட்டைத் (New Testament) திறந்து பார்த்த பொழுது எனது உணர்ச்சி வசப்பட்ட உள்ளத்திற்குத் தகுந்தாற்போல் அதில் ஒரு பகுதி காணப்பட்டது. அதாவது "ஜீவனுள்ள கற்களைப் போல ஆவிக்கேற்ற மாளிகையாகவும் இயேசு கிறிஸ்து மூலமாய்த் தேவனுக்குப் பிரியமான ஆவிக்கேற்ற பலிகளைச் செலுத்தும் படிக்குப் பரிசுத்த ஆசாரியக்கூட்டமாகவும் கட்டப்பட்டு வருகிறீர்கள்.

ஹில்டே ப்ரீபெல்
ஜெர்மனி

## சிவானந்தர் கனவில் உபதேசிக்கிறார்

தங்களுடைய கிராமபோன் ரிக்கார்டுகள் எங்களுக்குப் பேரானந்தத்தை விளைவிக்கின்றன நாங்கள் தினந்தோறும் தங்கள் குரலைக் கேட்கின்றோம். தங்களை தன்னுடைய அன்பிற்குரிய மாமாவாக சதா நினைந்து கொண்டிருக்கும் ஸ்ரீ ரால்ப் டீட்டர் (Rolf Dieter) அவர்கள் ஓங்கார உச்சரிப்பை மிக நன்றாக இருக்கிறது என்று ரசிக்கிறார்.

ரிகார்டுகள் கிடைப்பதற்கு முன் ஸ்ரீ ரால்ப் டீட்டர் பிரணவத்தை வேகமாக உச்சரித்துக் கொண்டிருந்தார். அது தவறு அவரிடம் எனது மனைவி கூறிவந்தாள். இப்பொழுது அவர் சொல்லி வந்தது சரி என்று தெரிகிறது. ஒரு கனவில் சிவானந்த மாமா அவரோடு இருந்து பிரணவத்தை அம்மாதிரி உச்சரிக்கும்படி போதித்ததாக அவர் எங்களிடம் அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார்.

நான் ஆழ்ந்த பக்தி சிரத்தையோடு அடிக்கடி தங்களை நினைத்துக் கொள்கிறேன். நானும் தங்களுடைய கவனத்திற்கு சில சமயங்களில் வருவதை பெரும் பாக்கியமாகக் கருதுகின்றேன். ஏழைகளுக்கும் பிணியாளர்கட்கும் சேவை செய்வது ஒன்றுதான் ஒருவரை தெய்வீக மனிதராக ஆக்க வல்லது. நான் தங்களுடைய சிவானந்தா வைத்தியக் கழகத்தைப் (Sivananda Medical Organisation) பாராட்டுகின்றேன். இந்தியாவிலிருக்கும் எனது சகோதர சகோதரிகளுக்கு என்னால் இயன்ற உதவியைச் செய்கின்றேன்.

ஸ்ரீ கார்ல் லெண்டில்
எபர்ஸ்பாஷ், ஜெர்மனி

## பரீட்சை மண்டபத்தில் சிவா

கடைசி மகன் ஜையேஷ் சென்ற மாதம் பரீட்சை எழுதியிருந்தான். அதனுடைய முடிவு தெரிய இன்னும் காலதாமதமாகும். ஆகவே அவன் அந்தப் பரீட்சையில் தேறி விடுவான் என்கின்ற நம்பிக்கையில் அவன் தற்காலிகமாக அலஹாபாத் கல்லூரியில் சேர்த்துக் கொள்ளப் பட்டான். அவனுடைய கடைசி நாள் பரீட்சையில் ஏற்பட்ட ஒரு முக்கிய சம்பவத்தைப் பற்றி அவன் என்னிடம் கூறினான். கேள்வித்தாளைக் கண்டதும் ஊக்கமிழந்து ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்த பொழுது அவன் தங்களைக் கண்டிருக்கின்றான். தாங்கள் தங்களுடைய கையை அவனுடைய தலையின்மீது வைத்து எழுத ஆரம்பிக்கச் சொல்லி யிருக்கிறீர்கள். பிறகு அவன் திருப்திகரமாகப் பதில் எழுதிவிட்டு வந்திருக்கிறான். ஆகவே அவன் வெற்றி பெற்றாக வேண்டுமென்று நாங்கள் கருதுகின்றோம். அவனை ஆசீர்வதிக்கும்படிப் பிரார்த்திக்கின்றோம்.

A. K. ஸின்கா, பாட்னா.

* * *

## அவருடைய படம் நர்த்தனமாடியது

11-11-56ந் தேதி மாலை 5-15 மணிக்கு ஒரு அதிசயம் நிகழ்ந்தது. சுவாமிஜியினுடைய படம் பல பேர் திகைத்து நிற்கும்படி நர்த்தனமாடியது. அருகில் அமர்ந்திருந்த அனைவரும் (நானுள்பட) இந்த அதிசயத்தைக் கண்டோம். நாங்கள் சிரம் தாழ்த்தி, அஞ்சலி செலுத்திவிட்டு, அதைச் சரியான இடத்தில் வைத்தோம். இங்குள்ள பக்தர்களுக்காக இங்கு

இவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டு நமது குருதேவர் வந்தமைக்காக நாங்கள் சுவாமிஜிக்கு நன்றி செலுத்துவதோடு அவருடைய ஆசிகளையும் வேண்டி நிற்கின்றோம்.

P. L. நராங் சாஹெப்,
டேராடூன், (உ. பி.)

❁ ❁

## அதிசயமான உபதேசம்

விடியற்காலை 4-30 மணிக்குத் தாங்கள் என்முன் தோன்றி என்னை எழுப்பி விட்டீர்கள். நான் படுக்கையை விட்டு எழுந்து காயத்ரிதேவி படத்தின்முன் தியானம் செய்ய அமர்ந்தேன். ஆனால் நான் அங்கு சரஸ்வதி தேவியைத்தான் பார்க்க முடிந்ததே ஒழிய காயத்ரிதேவி காணப்படவில்லை. நான் ஏதோ வேறு மயக்கத்தில் இருப்பதாக எண்ணி கண்களைத் துடைத்துவிட்டுப் பார்த்தபொழுது ஒரு சிறு ஒளி மட்டும் அங்குக் காணப்பட்டது. வேறு எதையும் காணவில்லை. தாங்கள் கூறியது இதுதான் :

"நீங்கள் உங்களுடைய பிள்ளைப் பருவத்தில் ஒரு முறை சரஸ்வதிதேவியின் விக்கிரஹத்தை இடது காலால் உதைத்து விட்டீர்கள். அது முதல் நாளுக்கு நாள் நீங்கள் மனச்சோர்வு அடைந்து வருகிறீர்கள். சரஸ்வதியை உதைப்பது காயத்ரியை உதைப்பதாகும். சரஸ்வதிதேவியை வேண்டிக்கொள்ளுங்கள். இதோ இந்த மந்திரத்தைத் ஜெபியுங்கள். இரவு பகல் எந்நேரமும் ஜெபித்துக் கொண்டிருங்கள். மூன்று மாதத்திற்குப் பிறகு ஏற்படும் மாறுதலைக் கவனியுங்கள்," இவ்வாறு உபதேசித்து விட்டுத்

தாங்கள் மறைந்து விட்டீர்கள். அதுமுதல் நான் சந்தோஷமாக இருக்கின்றேன்.

சுவாமி அப்யானந்தா.

* * *

என்னுடைய பிரார்த்தனைக்கு உடனே செவிசாய்க்கப்பட்டது

புத்தாண்டிற்கான எனது பங்கை குருதேவருக்கு சமர்பித்திருந்தேன். கரஸ்பாண்டெண்டுகளில் ஒருவரிடமிருந்து பதில் வந்தது. கையெழுத்து என்னுடைய கண்களில் ஒட்டிக் கொண்டது. நான் அந்த எழுத்துக்களை வாசிக்க ஆரம்பித்தேன். எழுத்துக்கள் மறைந்து போய்விட்டன. குருதேவரின் திருவுருவம் தோன்றியது. நான் தேம்பித் தேம்பி அழுதேன். "தங்களுடைய கையெழுத்தில் கடிதத்தைப் பெறுபவர்கள் அதிர்ஷ்டசாலிகள்" என்று அழுதேன். அடுத்த நாளே நானே அந்த அதிர்ஷ்டசாலியானேன் எல்லாம் வல்ல பகவானிடமிருந்து (அவர் கையெழுத்தால்) வெகுமதி கிடைத்தது. என்னுடைய ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை என்பதைக் கூறவும் வேண்டுமோ ?

டாக்டர் சிவானந்த சரோஜ், M.B.B.S.,
பம்பாய்.

* * *

பிரசாத மகிமைகள்

தாங்கள் கருணை கூர்ந்து அனுப்பியிருந்த பூஜா குங்குமத்தையும், விபூதியையும் என்னுடைய நண்பர்கள், உறவினர்கள் எல்லோருக்கும் அனுப்பி

வைத்தேன். அது ஆச்சரியப்படத்தக்க அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறது.

என்னுடைய சொந்தகாரப் பெண்ணுக்கு நீண்ட நாளாக வரன் தேடிக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது அவர்களுக்கு ஒரு வரன் கிடைத்துவிட்டார். அநேகமாக இந்தக் கோடையில் திருமணம் நடந்து விடும்.

எங்களுடைய நண்பரான மற்ருெரு அன்பருக்கு மிக உயர்ந்த உத்தியோகம் கிடைத்து மிக்க சந்தோஷத்துடன் இருக்கிருர். நான் இந்த விபூதியை அமெரிக்காவில் உள்ள எனது மகனுக்கும் அனுப்பி வைத்தேன்.

ஸ்ரீவாணிபாய் ராம், லக்னௌ.

* * *

என்னுடைய பிரார்த்தனை கேட்கப்பட்டது

கடந்த சில நாட்களாக எனக்கும் எனது தந்தைக்கும் உடல் நலம் குன்றியிருப்பதால் வீட்டில் இருக்கின்றேன். இன்று மாலை தங்களுடைய தரிசனத்தைப் பெறுகின்ற பாக்கியம் கிட்டுமா என்று ஏங்கிக் கொண்டு எனது தந்தையைக் கவனித்துக்கொண்டிருந்தபொழுது தபால்காரர் ஒரு கட்டுப் புத்தகங்களைக் கொண்டுவந்து கொடுத்தார். அவைகள் தாங்கள் அன்புடன் அனுப்பி வைத்த புத்தகங்கள் தான். அவைகளில் ஒன்றின் அட்டையின்மேல் தங்கள் அழகான திருவுருவம் பொறிக்கப்பட்டிருந்தது கண்டு பேராச்சரிய மடைந்தேன். இது என்ன குரு கிருபைதானு அல்லது வெறும் மயக்கமா? அது எதுவாக இருப்பினும் தங்களுடைய தரிசனத்தை

வேண்டி நின்ற எனது ஆசை பாதி பூர்த்தியாகி விட்டது.

Y. A. அஜிங்க்யா, பம்பாய்.

* * *

தொலைதூர எண்ணத்தை அறிதல்

“சிவானந்தரும், அவருடைய வாழ்க்கையும் வேலையும்” என்ற புத்தகம் இன்று எனக்குக் கிடைத்தது. அதற்கு மிக்க நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றேன். நான் அந்தப் புத்தகத்தை எழுதித் தருவிக்கலாமென்றிருந்தேன். ஆனால் அதற்கு முன் அதே புத்தகம் கிடைத்து விட்டது. உண்மையாகவே இது ஒரு அற்புதமாகும். தயை கூர்ந்து என்னுடைய பணிவான வணக்கங்களைச் சத்குரு மகராஜ் அவர்களுக்குத் தெரிவிக்கவும்.

C. V. சுப்பையாசாஸ்திரி, பங்கனபள்ளி.

* * *

அதிசய உதவி

சுவாமிஜி தாங்கள்தான் என்னுடைய தாய். நேற்று வலி காரணமாகத் தூக்கமின்றித் தங்கள் புத்தகத்திற்கு முன்னால் அழுது கொண்டிருந்தேன். இரவு 11-30 மணிக்குத் தாங்கள் திடீரென்று தோன்றினீர்கள். ஆனால் பின்பு என்ன நடந்தது என்று எனக்கு ஒன்றும் தெரியவில்லை. இன்று காலையில் பார்க்கும்பொழுது 24 மணி நேரம் தியானம் முதலியவற்றை நான் செய்திருப்பது தெரிய வந்தது. சுவாமிஜி என்னை ஆசீர்வதிப்பாராக.

ஸ்ரீ V. ராமநாதன், சென்னை.

நேற்றிரவு சுவாமிஜியின் ஒரு நூலைப் படித்து விட்டுப் படுக்கைக்குச் சென்றேன். நடுநிசி 12 மணி இருக்கும். ஒரு மங்கலான ஒளி என்முன் தோன்றி சிறிது சிறிதாகப் பிரகாசத்துடன் விளங்கிற்று. அந்த அதி அற்புதமான ஒளிப் பிழம்பின் நடுவில் நான் ஸ்ரீ சிவானந்தஜியைக் கண்டேன். அந்தத் தோற்றம் அந்தப் புத்தகத்தில் காணப்பட்டதைப் போலவே இருந்தது. அந்த ஒளியில் இருந்து அவர் தன்னுடைய வலக் கரத்தால் என்னை ஆசீர்வதித்தார். அது பகவான் ஸ்ரீ கண்ணபிரானுடைய ஞான முத்திரையைப் போன்றே இருந்தது.

ஸ்ரீ C. N. *நாகராஜ்*, பெங்களூர்.

* * *

நான் வெளியூர்ப் பயணத்திலிருந்து காலை 3 மணிக்குத் திரும்பி வந்தேன். படுக்கைக்குச் செல்லும்போது நான் என் மனதிற்குள்ளாகவே "மிகவும் களைப்பாக இருக்கிறது. ஆகவே இன்று ஜெபம் செய்யப்போவதில்லை. நாளைக்கு ஞாயிற்றுக் கிழமையானபடியால் காலையில் வெகுநேரம் வரை தூங்கலாம்" என்று சொல்லிக்கொண்டு படுத்தேன். ஆனால் தாங்கள் என்முன் தோன்றினீர்கள். ஆகவே நான் 5 மணிக்கு எழுந்திருந்து வழக்கமாகச் செய்யும் ஜபத்தைச் செய்து முடித்தேன்.

ஸ்ரீ J. N. *பரநாகமா*, இலங்கை.

* * *

பகவான் சிவானந்தர் தன்னுடைய சீடர்களை மிக்க சிரத்தையுடன் கவனித்துக் கொள்கிறார் என்ப

தற்கு அவர் மற்ருெரு நிருபணம் தந்திருக்கிருர். ஸ்ரீ யோகா படேல் என்ற ஒரு அம்மையார் சத்சங் கத்தில் கலந்து கொள்வதற்காக எப்போதாவது எங்க ளிடம் வருவது வழக்கம். ஒருநாள் அவருடைய சேலே யில் தீப்பற்றிக் கொண்டது. பகவான் சிவானந்தர் அவர்முன் தோன்றி சேலேயில் தீப்பற்றிக் கொண்டிருப் பதைச் சுட்டிக்காட்டி உடனே அதை அணைக்கச் செய்தார். அவர் விபத்திலிருந்து காப்பாற்றப்பட்டார். எங்களில் பெரும்பாலோர் படித்தவர்கள். இருந்த போதிலும் பகவான் சிவானந்தரின் தெய்வீகத் தன் மையை விளங்கவைக்கும் தொடர்ச்சியான நிருபணங் களும், உள்ளத்தில் ஊடுருவிப் பாயக் கூடியதும், மன தைக் கவரக்கூடியதுமான அவரது நூல்களும் எங்கள் எல்லோரையும் பித்தர்களாக்கி விட்டன.

*மனுப் பிரஸாத் S. திரிவேதி, அஹமதாபாத்.*

  

1940-ம் ஆண்டு சாதனு வாரத்தின்போது எங்களது கிளையில் அகண்ட கீர்த்தனம் நடந்தது. என்னுடைய மகள் மேடைக்குப் பக்கத்தில் அமர்ந் திருந்தாள். அவளுக்கு வயது 22. அவள் திடீரென்று சுவாமிஜி காவி உடையுடனும் கையில் கமண்டலத் துடனும் (சுவாமிஜியின் படத்தை அடுத்தாற்போல்) மேடையின்மேல் சுமார் 5 நிமிட நேரம் நின்றுகொண் டிருந்ததைக் கண்டாள்.

*ஸ்ரீ P. வெங்கட சுப்பையா, ஹொஸ்ஸூர்.*

  

நான் இடைவிடாது தங்களை நினைந்த வண்ணமாக சோர்விலிருந்து நிவாரணம் வேண்டிக் கொண்டு தங்க ளுடைய உபதேசமான "அருமயோகம், நான்

நோயற்ற ஆத்மா. நான் இந்த உடலோ அல்லது மனமோ அல்ல. என்னை எதுவும் பாதிக்க முடியாது'' என்று உறுதிப்படுத்திய வண்ணமாக இருந்தேன். தங்களுடைய கருணையினுல் நான் ஆச்சரியப்படும்படியாக என்னுடைய ரத்தக் (கொதிப்பு) அமுக்கம் குறைந்துவிட்டது. நான் மறுபடியும் என்னுடைய வேலைக்குச் செல்லுமளவு குணமடைந்தேன். தங்களிடம் எனக்கு உள்ள பக்தியை எடுத்தியம்ப இயலவில்லை. இது தங்களிடமும், பகவானிடமும் உள்ள பக்தியை வலுப்படுத்தி யிருக்கிறது. நான் காலையில் தியானத்தில் அமர்ந்தேன். அப்போது சுவாமிஜி என் முன்னுல் நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். அவர் என்னை ஆசீர்வதித்துவிட்டு மறைந்து விட்டார். நான் ஆனந்த சாகரத்தில் மூழ்கினன். என்னுடைய மனைவி கடுமையான பிரசவ வேதனைப்பட்டுக் கொண்டிருந்த பொழுது சுவாமிஜி என் வீட்டிற்கு விஜயம் செய்து ''தங்களுக்கு இரண்டு ஆண் குழந்தைகள் பிறக்கப் போகின்றன'' என்று கூறினுர். என்னுடைய மனைவியும் சுகமாக இரட்டையர்களை ஈன்றெடுத்தாள். நான் அவர்களுக்கு ராமன், லக்ஷ்மணன் என்ற பெயர்களைச் சூட்டினேன். இமயமலை எங்கே? மதுரை எங்கே? சுவாமிஜியின் அன்பை என்னென்பது? எவ்வளவு பெரிய அற்புதம்!

*ஸ்ரீ K. ரங்கஸ்வாமி ஐயர், மதுரை.*

* * *

பிரசாதத்துடன் கூடிய தங்களுடைய கடிதம் கிடைத்தது. முற்றிலும் ஏமாற்றத்தில் முடியவேண்டிய பல நிகழ்ச்சிகள் தங்களுடைய விசேஷமான கருணையினுலும் ஆசிகளாலும் கடைசி நேரத்தில் பெரும் வெற்றியாக முடிந்தன. ஒரு கல்யாணப் பந்தலுக்கு

மின்சார விளக்குப் போடுவதற்காக அனுமதி வேண்டி மின்சார இலாகா மேலதிகாரியை அணுகினேம். ஒரு லைசென்ஸ் பெற்ற காண்ட்ராக்டர் மூலமாகத்தான் நாங்கள் விண்ணப்பிக்க வேண்டும் என்று அவர் கூறி விட்டார். அந்தக் கடைசி நேரத்தில் எங்களுக்கு அது மாதிரியான ஆள் கிட்டவில்லை. நாங்கள் ஏமாற்றத் துடன் வீடு திரும்பியபொழுது ஒரு கார் வேகமாக உள்ளே நுழைந்தது. அந்தக் காரில் இருந்தவர்களை எங்களில் யாருக்கும் தெரியாது. அவர்கள் நாங்கள் இருந்த இடத்திலிருந்து 100 அடிக்கு அப்பாலிருந்து மின்சாரத்தைக் கொண்டுவந்து விட்டனர். அதற்கு வேண்டிய சாமான்களை எங்களுடைய நண்பர் ஒருவர் கொடுத்திருக்கிருர். இது எல்லாம் தங்கள் கருணையால் தான் நிகழ்ந்திருக்கிறது. இந்த அற்ப ஜீவனுக்குத் தாங்கள் உதவியிருக்கும் விதங்களை என்னுல் எடுத்து எழுத முடியவில்லை; எழுதவும் முடியாது.

### தங்கள் காட்சிக்கான ஆசை பூர்த்தியானது

அன்பிற்குரிய குருதேவ்!,

அனந்த கோடி சாஷ்டாங்க நமஸ்காரங்கள், வந்தனங்கள்.

இன்றைய பூஜையின்போது தங்களுடைய தரிச னத்தையும் ஆசீர்வாதத்தையும் பெறும் பாக்கியத்தை நாங்கள் பெற்ருேம். நீண்ட நாட்களாக தங்களது தரிசனத்தைப் பெறும் பேறு கிட்டவில்லை என்று நாங்கள் கடந்த மூன்று நான்கு நாட்களாக எண்ணிக் கொண்டே இருந்தோம். இன்று எங்களுடைய ஆசை பூர்த்தி செய்யப்பட்டது.

ராமேஷ்வர் நாத், சிவில் ஜட்ஜ், தாமோ (M. P.)

## சிவானந்தரும் விஷ்ணு பகவானும்

1946-ல் நான் டெல்லியிலிருந்த பொழுது ஒரு நாள் நல்ல வெளிச்சம் நிறைந்த ஒரு மொட்டை மாடியில் இருந்தேன். சிறிது நேரம் கழித்து இரவு 10 அல்லது 11 மணி சுமாருக்கு நாலா பக்கமும் திடீரென்று இருள் சூழ்ந்து கொண்டது.

சிறிது தூரத்தில் இரண்டு பிரகாசமான ஒளிக் கதிர்கள் தோன்றியதை நான் கண்டேன். சில நிமிட நேரங் கழித்து ஒரே சமயத்தில் விஷ்ணு பகவான், சுவாமிஜி ஆகிய இருவருடைய தரிசனமும் கிடைத்தது. பிறகு பகவான் விஷ்ணுவின் காட்சி மறைந்து சுவாமிஜி மட்டும் காட்சியளித்தார். மறுபடியும் இருவரும் தரிசனம் தந்தனர். இன்னும் சிறிது நேரம் கழித்து பகவான் விஷ்ணு மட்டும் காணப்பட்டார். பிறகு சுவாமிஜீயும் பகவானும் காணப்பட்டனர். அதன் பின் பக்கமாக விஷ்ணு பகவானும் சுவாமிஜியும் சேர்ந்த உருவம் காட்சியளித்தது. முடிவில் பகவான் விஷ்ணுவின் உருவம் சுவாமிஜியின் உருவத்தோடு ஐக்கியமாகி விட்டது. அடுத்தநாள் சுவாமிஜி மஹராஜ் அவர்களின் இதய கமலத்தில் பகவான் விஷ்ணுவின் உருவம் இருப்பதை, படத்தில் காட்டியுள்ளதைப்போல் கண்டேன்.

1951 மார்ச் 20ந் தேதி மாலை 4 மணி சுமாருக்கு நான் சிறிது ஓய்வெடுத்துவிட்டு என்னுடைய கட்டிலின்மேல் அமர்ந்தபொழுது கீழ்க்கண்ட மாதிரி ஒரு அசரீரி வாக்கு கேட்டது.

"ஆளவந்தார், இனிமேல் உங்களுடைய வீட்டில் எந்தவிதமான தின்பண்டமும் கேட்கக் கூடாது," அந்த அசரீரி என்னுடைய படுக்கை அறையிலிருந்த சுவாமிஜியின் படத்திலிருந்து வந்தது. அன்று முதல்

நான் எதையும் கேட்பது இல்லை. நான் கேட்காமலேயே வேண்டிய பொருள்கள் எனக்குக் கொடுக்கப்பட்டு வருகின்றன.

ஸ்ரீ C. ஆளவந்தாரையா, சென்னை.

* * *

## வாழ்கையை மாற்றியமைக்கும் காட்சி

நான், இதர மதச் சங்கங்கள் அனைத்தையும் விடுத்து சிட்னியில் உள்ள தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தில் சேர்ந்தேன். அதற்காக நான் வருந்தவில்லை. பல வழிகளில் என்னுடைய வாழ்க்கை மாறி வருவதைக் கண்டு வருகின்றேன். எங்களுக்கு ஸ்ரீஜி அவர்களைப் போன்ற உண்மையான தலைவர் ஒருவர் கிடைத்திருப்பது எங்கள் அதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். ஒரு நாள் இரவு தாங்கள் என் முன் தோன்றி, தங்கள் கையை உயர்த்தி வணக்கம் செலுத்துவதைப் போல் ஆசீர்வதித்தீர்கள். ஒரு சமயம் நான் ஒரு புல்வெளியில் நின்று கொண்டிருந்தேன். அருகிலிருந்த வாலிபர் ஒருவர் எனக்கு வழியைக் காட்டினார். தியானத்தின்போது எனக்கு அற்புதமான அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. நான் பொன்னிறமான ஒரு ஒளியைக் கண்டேன். இன்னும் பல விஷயங்களைப் பற்றி நான் உறுதியாகக் கூற முடியும். ஸ்ரீ சிவானந்தஜி, நான் தங்களுடைய புத்தகங்களைப் படித்திருக்கின்றேன். தங்கள் உதவியை வேண்டி நிற்போருக்குத் தாங்கள் எப்பொழுதும் உதவத் தயாராக இருக்கின்றீர்கள் என்பதைக் கவனிக்கின்றேன். நான் ஒரு மனப்பூர்வமான உண்மை நாடி. உள்ளத்தில் எவ்விதச் சுயநலமுமின்றி

என்னுடைய வாழ்வின் லட்சியத்தை அடைய விரும்புகின்றேன். ஆகவே எனக்கு தங்கள் ஆசி தந்து தங்கள் திருக் கூட்டத்தில் என்னையும் ஒரு அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளும்படிப் பணிவோடு வேண்டுகின்றேன்.

*மிஸ் ஜெல்மா ஷோரக், ஆஸ்திரேலியா.*

• •

### தங்களால் வரமுடியவில்லையெனில் நான் வருகின்றேன்

என்னுடைய இஷ்ட தினம் திங்கட்கிழமையான படியால் அன்று நான் யாரையும் போய்ப் பார்ப்பது இல்லை. பதினைந்து நாட்களுக்கு முன் மாலையில் நான் தியானத்தில் அமர்ந்திருந்தபொழுது திடீரென்று நான் கிருஷ்ண மூர்த்தியை அவசியம் பார்த்தாக வேண்டும். அதன் மூலம் குருநாதரையும் சந்திக்க வேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் தோன்றியது. எதிர்பாராத சம்பவமே யாகும். நான் அங்குச் சென்ற பொழுது மூர்த்தியினுடைய இல்லத்தில் புஷ்பாஜியும், மோஹினிஜியும் இருந்தனர். இளைய பையன் கார்த்திகேயன் தங்களுடைய பாதம் புஷ்பாஜியின் தோளின் மீது இருக்கக் கண்டான். முதல் நாள் காலையில் நான் அனுபவித்ததை அவர்களுக்குச் சொல்லி யிருக்க மாட்டேன். ஆனால் என்னையுமறியாமல் அங்கிருந்த எல்லோரிடமும் இவையெல்லாம் சாதாரண விஷயங்கள் என்று எப்படிச் சொன்னேன் என்பது எனக்கே புரியவில்லை. 8ந் தேதி சனிக்கிழமை நான் மிகவும் மனக்குழப்பமடைந்திருந்த காரணத்தினால் டேராடூனை விட்டு ரிஷிகேசம் போய் வரலாமென்று விரும்பினேன். ஆனால் சூழ்நிலை என்னை வீட்டை விட்டு நகர

முடியாமல் செய்து விட்டது. ஞாயிற்றுக்கிழமை விடியற்காலை 3-45 மணிக்குத் தாங்கள் மரத்தினாலான அலங்கார மேடையின்மீது அமர்ந்திருக்கக் கண்டேன். தங்களைச் சுற்றிச் சிலர் அமர்ந்திருந்தனர். நான் தங்கள் முன் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கிய பொழுது தாங்கள் "கபூர் சாஹிப், ஏன் இப்படிக் குழப்பமடைந்திருக்கிறீர்கள்? தங்களால் வர இயலாவிடில் இதோ நானே வந்து விட்டேன்" என்று கூறிய வார்த்தைகள் காதில் விழுந்தன. எனது உடல் புளகாங்கிதமடைந்தது. சிறிது நேரத்தில் பேரானந்த பரவச நிலையில் மெய்மறந்திருந்தேன். பிறகு 4 மணிக்குக் கடிகாரம் அலாரமடித்து இந்தக் காட்சியை முடிவு செய்து விட்டது. வழக்கமான சாதனை ஆரம்பமாயிற்று. இவ்வாறு இன்று எனக்கு மிகவும் அதிர்ஷ்டமான நாளாக ஆயிற்று. அநேக சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

ஸ்ரீ G. L. கபூர், டேராடூன்.

• • •

### நாமம் பாடப்படுமிடத்தில் நாமியுமிருக்கிறார்

இந்த அதிசயமான மாய வித்தையை நான் பல முறை அனுபவித்திருக்கின்றேன். என்னுடைய சாதாரண கீர்த்தனங்களுக்கே இம்மாதிரி நிகழ்ந்திருக்கின்றன. ஒரு சமயம் நான் ஏகாந்தமாக உள்ளத்தை எல்லாம் பரம்பொருள் பக்கம் திரும்பிவிட்டுப் பாடிக் கொண்டிருந்தேன். நான் கண்ட காட்சி என்ன தெரியுமா? என்னை நம்பினாலும் சரி, நம்பாவிடினும் சரி. நமது பூஜிக்கத்தக்க குரு மகராஜ் சுவாமிஜி

சிவானந்தஜி அவர்கள் ஏற்கனவே (அவருக்காகவே போடப்பட்டிருந்ததைப் போல்) எதிரில் இருந்த நாற்காலியில் அமைதியாக அமர்ந்து கொண்டு பாட்டை ரசித்தவண்ணமாகத் தலையை அலைசத்துக் கொண்டு பாட்டிற்கேற்ப தாளமும் போட்டுக்கொண் டிருந்த கண்கொள்ளாக் காட்சியை நான் கண்ணாரக் கண்டு களித்தேன். நான் திகைப்புற்றேன். ஆச்சரிய மடைந்தேன். ஏதோ ஒரு அந்தரங்க ஆனந்தம் ஏற்பட்டது. என்னுடைய கண்களைத் திறந்தவண்ணம் தொடர்ந்து பாடிக் கொண்டிருந்தேன். என்னுடைய இந்த எளிய சங்கீதத்திற்காக இவ்வளவு கருணை கூர்ந்து என்னில்லத்திற்கு விஜயம் செய்த சுவாமிஜி மகராஜ் அவர்களை இமை கொட்டாது உற்றுநோக்கிய வண்ணம் பாடிக் கொண்டிருந்தேன். பிறகு பாட்டை நிறுத்திவிட்டு, தம்புராவைத் தரையில் வைத்துவிட்டு (என் கண்ணுக்கு நன்றாகப் புலப்பட்ட) அவருடைய பொன்னார் திருவடிகளில் வீழ்ந்து வணங்க எண்ணித் தலையைத் தாழ்த்தினேன். ஆனால் அந்தோ! என் னுடைய தலையை நிமிர்த்திப் பார்த்தபொழுது நாற்காலி காலியாக இருந்தது. அங்கு யாரையும் காணவில்லை. உள் பக்கமாகத் தாழிடப்பட்டிருந்த கதவு அப்படியே இருந்தது. நான் உடனே அந்த அற்புத லீலையைப் புரிந்துகொண்டு விட்டேன். என்னுடைய ஆனந்தத்திற்கு எல்லை இல்லை என் பதைக் கூறவும் வேண்டுமா? இது மாதிரி ஒரிரு முறை நான் லக்னோவில் இருக்கும்போதும் நிகழ்ந்திருக் கிறது. சுவாமிஜி அப்பொழுது ரிஷிகேசத்தில் இருந் தார். அவர் எப்படி என்னிடம் வந்திருக்க முடியும்? நான் உடனே அதைப் பற்றிக் குருதேவருக்கு எழுதினேன். ஆம், அவர் அதைப் பற்றி கூறவில்லை

(கூறவும் மாட்டார்). ஆனால் அவர் ஒரு அந்தர்யாமி. அவருக்கு எல்லாம் தெரியும்.

ஸ்ரீ சிவானந்தவாணி,
அகில இந்திய ரேடியோ, புதுடெல்லி.
(மெர்க்காராவில் நடந்த அகில இந்திய தெய்வீக வாழ்க்கை மாநாட்டின்போது நிகழ்த்திய உரை.)

❁ ❁ ❁

கனவு சுவாமிஜியின் தெய்வீகத்தை விளக்கியது

தங்களைப் பற்றியும் தங்களுடைய புனித சேவைகளைப் பற்றியும் என்னுடைய மைத்துனர் ஸ்ரீ T. H. மான்ஸிங் அவர்களின் மூலம் கேள்விப்பட வாய்ப்பு ஏற்பட்டது. அவர் க்ஷயரோகத்தினால் அவஸ்தைப் பட்டுத் தங்களுடைய கருணையால் குணமடைந்தார்.

அன்றொரு நாள் என்னுடைய நெருங்கிய உறவினரும் என்னுடைய வீட்டில் குடியிருப்பவருமாகிய ஒருவருடன் என்னுடைய நண்பர் ஒருவரைச் சந்திக்கச் சென்றேன். அவருடைய பெயர் ஸ்ரீ T. V. ஜார்ஜ I.A.F. அவர் ஜோத்பூரில் தங்கியிருக்கிறார். அவர் ஹிருதயானந்தா என்ற புத்தகத்தின் உரிமையாளர். அப்புத்தகத்தின் தெய்வீகத் தன்மையை உணர்ந்திருந்தும் அதைப் படித்துப் பார்க்க வேண்டும் என்கின்ற உணர்ச்சி எனக்கு ஏற்படவில்லை. ஆனால் அந்தப் புத்தகத்தின் அட்டையின் மேலுள்ள தங்கள் படம் என்னையுமறியாமல் என் உள்ளத்தைத் தொடவே நான் படுக்கைக்குச் செல்லு முன் தங்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு சொல்லிக் கொண்டேன். "மக்கள் தங்களை மகான் என்று கூறுகின்றார்கள். அதோடு மட்டுமல்ல. தாங்கள் கடவுளின் நடமாடும் அவதாரப் புருஷர் என்ற

அளவுக்குப் பெருமையாகக் கூறுகின்றனர். இன்று தாங்கள் என்னுடைய கனவில் வந்து அதை நிரூபித்துக் காட்டினுலொழிய நான் நம்பப் போவதில்லை.''

நான் ஆச்சரியப்படும் வகையில் கீழ்க்கண்ட மாதிரி கனவு கண்டேன். நான் தங்களுடைய ஆஸ்ரமத்திற்குச் சென்றிருக்கின்றேன். அங்குக் காவிஉடை தரித்த மூன்று பேர் என்னை வரவேற்றனர். அவர்களில் ஒருவர் என்னிடம், ''உங்களுக்கு அமைதியும் விடுதலையும் வேண்டுமானுல் சுவாமிஜியின் பாதாரவிந்தங்களை வணங்குங்கள்,'' என்று கூறினுர். நான் உடனே ''காயத்ரி மந்திர''த்தைச் ஜெபித்துக்கொண்டு தங்களுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினேன். பிறகு நான் வீடு திரும்பியதாக ஞாபகமிருக்கிறது. தாங்களும் என்னைப் பின்தொடர்ந்து வரக் கண்டேன். நான் அறைக்குள் நுழைந்தபோது தாங்கள் அங்குக் காணப்பட்டீர்கள். அப்பொழுது எனக்குப் புதிதாக ஒரு மந்திரத்தை உபதேசித்தீர்கள்.

தங்களுடைய பெருமையைச் சந்தேகித்தது என்னுடைய அறிவீனமாகத்தான் இருக்கவேண்டும். அடியேன் தங்கள் பாதகமலங்களில் சரணுகதி அடைகின்றேன்.

*வீரபானுசிங் ரத்தோர், * ஜோத்பூர்.*

(குறிப்பு : * இவர் ஜோத்பூர் அரச வம்சத்தைச் சேர்ந்தவர். இவர் காலஞ்சென்ற டெஹ்ரி கார்வால் மஹாராஜா ஸ்ரீலஸ்ரீ நரேந்திர ஷா அவர்களின் புத்திரியை மணம் செய்துகொண்டார். ஒரு கனவின் மூலம் சுவாமிஜியின் சீடரானுர்.)

## சிவாவின் குடீரத்திற்கருகில் ஸ்ரீ ராமருடைய காட்சி

தங்களுடைய சந்நிதானத்தில் நான் செப்டெம்பர் மாதம் 3ந் தேதி முதல் 25ந் தேதி வரை இருக்கும் பாக்கியத்தைப் பெற்றேன். என்னுடைய மனம் ஆன்மீக எண்ணங்களாலும் பேரானந்தத்தாலும், சந்தோஷத்தாலும் நிரப்பப்பட்டிருந்தது. அதுமாதிரியான இன்பத்தை என் வாழ்க்கையில் நான் இதற்கு முன் அனுபவித்ததே இல்லை. ஆன்மீக அலைகளால் நிரப்பப்பட்டிருக்கும் சூழ்நிலையில், கங்கைத் தாயின் பக்கத்தில் தங்கள் புனித சந்நிதானத்தில் அமர்ந்திருந்து நான் வெகுவாக ஆன்மீக முன்னேற்றம் அடைந்தேன். தியான நிலையில் நான் கண்களை மூடிய பொழுது பிரகாசமான ஒளிக்கு மத்தியில் ஸ்ரீ ராமபிரானுடைய கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தேன். ஆஹா! எப்பேர்ப்பட்ட உள்ளத்தைத் தொடும் அனுபவம்! என்ன பேரானந்தம்! இந்த அழகிய உலகைப் பற்றிய சிந்தனையே இல்லை. என்னுடைய வாழ்நாள் முழுதும் இமயமலைக் குகைகளில் ஏகாந்தமாகத் தவங் கிடந்தாலும் என்னுடைய இஷ்ட தேவதையான ஸ்ரீ ராமபிரானுடைய உள்ளங் கவர்ந்த காட்சி கிடைத்திருக்காது. இம்மாதிரியான அசாதாரண காட்சிகளைக் காணச் செய்வது என்மீது சொரியப்படும் குரு கிருபையே யன்றி வேறல்ல. தாங்கள் ஸ்ரீ ராமபிரானைத் தவிர வேறல்ல என்பதை நான் இப்பொழுது மனப்பூர்வமாக நன்கு உணருகின்றேன்.

K. ஸ்ரீனிவாசராவ், பெர்ஹாம்பூர்.

அவருடைய கரம் ரயிலை நிறுத்தி வைத்தது

இந்தியாவின் மந்திரியாக இருந்த ஸ்ரீ T T கிருஷ்ணமாச்சாரி அவர்களின் டேராடூன் விஜயத்தின்போது நான் அவரை ரயில் நிலையத்தில் வரவேற்க வேண்டி இருந்தது. என்னுடைய கார் சிறிது கால தாமதமாக வந்தது. வழியில் நான் சுவாமி சிவானந்தரைப் பிரார்த்தித்தேன். நான் ஸ்டேஷனுக்கு வந்து பார்த்தபொழுது ரயில் இன்னும் வந்துசேரவே இல்லை. பிறகு விசாரித்ததில் டேராடூன் ஸ்டேஷனுக்கு சற்று வெளியிலேயே ரயில் சில நிமிட நேரம் தாமதம் செய்யப்பட்டதாகத் தெரிய வந்தது.

K. N. P. நாயர். டேராடூன்.

*　　　*　　　*

என்னுடைய கையெழுத்தின இரகசியம்

சிவானந்தாஸ்ரமத்திலிருந்து எனக்கு ஒரு ரிஜிஸ்டர் பார்சல் வந்திருந்தது. அஞ்சல் அதிகாரிகள் அது மாதிரியான பார்சல்களை என்னுடைய கையெழுத்தில்லாமல் கொடுக்க மாட்டார்கள். ஆனால் நான் மருத்துவமனையிலிருந்து திரும்பி வந்து பார்த்த பொழுது, அந்தப் பார்சல் பட்டுவாடா செய்யப்பட்டிருந்தது. நான் தபாலாபீஸில் விசாரித்த பொழுது என்னுடைய கையெழுத்தைப் பெற்றுத்தான் அது பட்டுவாடா செய்யப்பட்டிருப்பதாகக் கூறினார்கள். நான் அந்தக் கையெழுத்திட்ட ரசீதைக் காண்பிக்கச் சொன்னேன். அதைப் பார்த்தபொழுது எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. நான் உபயோகிக்கும் மையினாலேயே என்னுடைய கையெழுத்தே அதில் காணப்பட்டது! புத்தகங்கள் காலதாமதமின்றி

எனக்குக் கிடைக்க வேண்டுமென்று இந்த அற்புதத்தைச் சுவாமி சிவானந்தஜி அவர்கள்தான் நிகழ்த்தியிருக்கிருர்.

டாக்டர் சுசீலா விக்னே, சுரேந்திர நகர்.

* * *

### யார் அந்தச் சாது ?

நான் ஆஸ்ரமத்திலிருந்த பொழுது சுவாமிஜி மகராஜ் அவர்கள் எனக்குச் சிறு மணிகளாலான ருத்திராக்ஷ மாலை யொன்று கொடுப்பதாக வாக்களித்திருந்தார். அது மாதிரியான மாலை உடனே கிடைக்காத காரணத்தால் நான் மாலையைப் பெருமலேயே ஆஸ்ரமத்திலிருந்து திரும்பி விட்டேன். ஒருநாள் என்னுடைய மருத்துவமனையில் ஒரு நோயாளியைப் பரீட்சை செய்து கொண்டு இருக்கும்பொழுது ஒரு வயதான சாது என்னிடம் வந்து, "நீங்கள் ஒரு உருத்திராட்ச மாலை வேண்டுமென்று விரும்பினீர்களல்லவா? வாங்கிக் கொள்ளுங்கள்," என்று கூறி என்னிடம் சிறு மணிகள் கொண்ட ஒரு மாலையைக் கொடுத்தார். நான் அதைப் பக்தி சிரத்தையுடன் பெற்றுக்கொண்டு நோயாளியைக் கவனித்துவிட்டுப் பிறகு சாதுவிற்கு நன்றி தெரிவிக்கலாமென்று எண்ணினேன். ஆனல் நான் நோயாளியைப் பரீட்சை செய்து முடிப்பதற்குள் அச்சாது மறைந்துவிட்டார். கொடுப்பதாக வாக்களித்திருந்த அந்தச் ஜெப மாலையைக் கொடுப்பதற்காக அங்கு வந்திருந்தது சுவாமி சிவானந்தஜிதான் என்று நான் தெரிந்துகொண்டேன்.

டாக்டர் சுசீலா விக்னே. சுரேந்திர நகர்.

## பூவுலகில் கண்கண்ட தெய்வம்

ஓ பகவான்! தங்களுடைய எல்லையில்லா மகிமைகளை இந்தத் துரும்பு எவ்விதத்தில் பாட முடியும்? தங்களுடைய எல்லையற்ற கருணை, அன்பு, இரக்கம் ஆகியவைகளைக் கண்டு நான் திகைத்து நிற்கின்றேன். தங்கள் பெருமைகளையெல்லாம் கிரகித்துக் கொள்ள என்னுடைய இதயத்தில் இடம் போதவில்லை. தற்பொழுது அது வரம்பு கடந்து விட்டது. எல்லையற்ற பரந்த வெளியாக இருக்கிறது. அகத்தே பேரொளிப் பிழம்பாக இருக்கிறது. அங்கு ஸ்ரீ குருதேவர் நிரந்தரமாக மிகப் பிரகாசமாகப் பிரகாசித்துக் கொண்டு வீற்றிருக்கின்றார். என்னுடைய குருதேவரின் வழிகள் விசித்திரமானவை. 1959 செப்டெம்பர் 29ந் தேதி என்னுடைய குருதேவர் எனக்குச் ஜூடா (Jhuta) பிரசாதத்தைக் கொடுத்து என்னை அமரனுக்கியதை நான் உணர்ந்தேன். தங்களைப் பற்றி எதுவும் எழுதுவதற்கு என்னிடம் தகுதியும் திறமையும் என்னுடைய உள்ளப்பாங்கை வர்ணிக்க வார்த்தைகள் கிடைக்கவில்லை. அதற்கு அவசியமுமில்லை. ஏனெனில் குருதேவர் எல்லாம் வல்லவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிபவர்; அவர் என்னுடைய உள்ளத் துடிப்பை நன்கு உணருவார். ஏனெனில் அங்கு அவரைத் தவிர வேறு யாரும் இல்லை.

இத்துடன் இப்பூவுலகின் கண்கண்ட தெய்வத்திற்கு எண்ணற்ற கடிதங்களை எழுதும் பேறு பெற்ற (குருமந்திரத்தின் தொனி நிரம்பிய) அடியேனுடைய வலக்கரத்திலிருந்து ஐந்து சொட்டு இரத்தத்தை அனுப்பி யிருக்கின்றேன். இந்த ஐந்து சொட்டு இரத்தமும் தங்களுடைய பாதார விந்தங்களில் சரணாகதி அடைந்து, தங்கள் திருத் தொண்டிலேயே

எப்பொழுதும் ஈடுபடுத்தப்பட்டிருக்கும் அடியே னுடைய உடல் முழுதும் பரவியிருக்கும் இரத்தத்திற் குப் பதிலாக அனுப்பப்பட்டிருக்கிறது. மேலும் இந்த ஐந்து சொட்டுகளும் அடியேன் குருநாதரிடம் சரணடையச் செய்யும் ஐந்து உறைகளையும், ஐம் புலன்களையும் குறிக்கின்றன. அடியேன் இப்பொழுது புலன்வழி போகங்களிலிருந்து விடுபட்டவனுகின் றேன். (எப்படியெனில்) அப்புலன்கள் தங்கள் கருணையினுல் என்னை விட்டு அகன்றுவிட்டன.

ஸ்ரீ A. G. R. ஷர்பாகர்,

சிர்பூர் காகஜ் நகர், ஆந்திரப் பிரதேசம்.

*

## 38. ஒரு மகா யோகியின் அற்புத சக்திகள்

அவர் உருவெடுக்கின்ருர்; அவர் எச்சரிக்கின்ருர்:
அவர் காப்பாற்றுகின்ருர்.

ஆந்திரப் பிரதேசத்தில் ஏற்பட்ட பெரும் வெள்ளப் பெருக்கின் காரணமாக பலாஸாவுக்கும் தூனிக்கும் இடையே உள்ள ரயில்வே பாதைகள் மிகவும் பாதிக் கப்பட்டிருந்தன. ரஸ்தாக்களும் நல்ல நிலையில் இல்லை. இந்த இரண்டு ஸ்டேஷன்களுக் கிடையே நான் பஸ்ஸிலும் நடந்தும் செல்ல வேண்டியிருந்தது. ஒரு இடத்தில் நான் பெருக் கெடுத்தோடும் ஒரு ஆற்றை எனது மனைவியுடன் நடந்து கடந்து செல்ல வேண்டியிருந்தது. இஷ்ட மந்திரத்தை ஜெபித்தவாறு சந்தோஷமாக நான் அந்த ஆற்றைக் கடந்து சென்ற பொழுது குருபகவான் என் சிரசின் மீது இருக்க நான் இந்தப் பவ சாகரத்தைக் கடந்து செல்வதை போல்

உணர்ந்தேன். நான் ஒரு படு குழியில் விழ இருந்த சமயத்தில் என்னுடைய குருபகவான் அக்கரையில் நின்று கொண்டு என்னைப் பார்த்துக் கொண்டிருந்தவர் உடனே கூச்சலிட்டு என்னை வலப்புறமாகத் திரும்பி வருமாறு எச்சரித்தார். நான் உடனே அவர் கூறிய படியே செய்தேன். இவ்வாறு அவருடைய கருணை யினால் என்னுடைய உயிர் காப்பாற்றப் பட்டது. நான் மறுகரையை அடைந்து பார்த்த பொழுது என்னுடைய உயிரைக் காத்த அந்த மகா புருஷரைக் காணவில்லை.

ஸ்ரீ சச்சிதானந்த பிரஸாத்
கூட்டுக் காரியதரிசி
கர்டானி பாக்
அனிஸாபாத், பாட்னா.

*    *

சிவானந்தர் ரிக்ஷாவாலா ஆனார்

*நடுநிசி—ரிக்ஷாவாலா தோன்றினார்—விஷமிடப் பட்ட சீடரின் உயிரைக் காப்பாற்ற—அவர் யார்?*

1958 செப்டம்பர் 5ந்தேதி நான் அலுவலகத்தி லிருந்து எங்களுடைய தெய்வ நெறிக் கழகக்கிளை அங்கத்தினரான ஸ்ரீ B. P. வர்மா அவர்களுடன் சுவாமி ஜியின் பிறந்ததினச் செய்தியை அச்சிடு வதற்காக நவ்ராஷ்ட்ரா அச்சுக் கூடம் சென்றிருந்தேன். நான் அங்கிருந்து வீடு திரும்பியதும் நான் விரும்பாமையால் எனக்கு சிறிதளவு பால் மட்டும் கொடுக்கப் பட்டது. நான் அதில் சிறிது குடித்ததும் அது உப்புக் கரிப்பதைப் போன்று சுவையின்றி தென் பட்டதோடு வயிறும் உப்ப ஆரம்பித்து விட்டது. மார்பை பாரம் அழுத்தியது. நுரையீரலில் வலி எடுத்தது. மயக்கம் வந்து உயிரைக் கவ்வுவதைப்

போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. பால் நன்ருக இருக்கும் என்று முதலில் குடித்த இரண்டொரு விழுங்கைத் தவிர மேல் கொண்டு நான் அதைக் குடிக்கவே இல்லே. சில நிமிட நேரத்தில் என்னுடைய நிலே மோசமாகியது. என்னுடைய மனேவியும் குழந்தைகளும் எனக்கு பேராபத்து விளேயும் என்று எண்ணி என்னே உடனே பாட்ஞ மருத்துவக் கல்லூரி மருத்துவ மனே (அவசர வார்டு)க்கு ஓடச்சொன்ஞர்கள். நான் என்னுடைய 14 வயதுடைய மூத்த மகன் தேவேந்திரனேடு நடந்து செல்ல ஆரம்பித்தேன். அப்பொழுது நள்ளிரவு 12 மணி. யாதொரு ரிக்ஷாவோ அல்லது வீட்டில் வேறு வாகனமோ இல்லே. ஆகவே நான் என்னுடைய மகனேடு ஒரு சில நூறு கெஜ தூரம் நடந்து சென்றுவிட்டேன். என்னுடைய நிலே அசாதாரணமாக இருப்பதைக் கண்ட என்னுடைய மகன் என்னே வேகமாக நடக்கும்படி தூண்டிஞன். விரைவில் ஒரு ரிக்ஷாவை அமர்த்திக் கொள்ளலாம் என்றும் அவன் கூறிஞன். அவன் மிகவும் திகிலடைந்தவஞகக் காணப்பட்டான். சாதாரணமாக எனக்குச் சரியாகிக் கொண்டு வருவதைப் போல் நான் முதலில் எண்ணினேன். ஆஞல் பிறகு திடீரென்று உணர் விழுந்து விட்டேன். என்ஞல் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியவில்லே. என்னுடைய உடலில் ஏற்கனேவே ஏதோ தீங்கு நேர்ந்து விட்டதைக் கண்டு கொண்டேன். பாலில் விஷமோ அல்லது வேறு ஏதோ கலந்திருப்பதை நன்கு உணர்ந்தேன். சில விஞடிகளுக்குள் ஒரு வயதான ரிக்ஷாவாலா தன்னுடைய ரிக்ஷாவுடன் வழியில் காணப் பட்டார். நான் கூப்பிட்ட வுடனே அவர் என்னே மருத்துவமனே அவசர வார்டுக்கு அழைத்து செல்லத் தயாராஞர்.

நான் 20 நிமிட நேரத்தில் மருத்துவமனை அடைந்தேன். என்னை இறக்கிவிடச் சொன்னார்கள். இரண்டு மருத்துவர்கள் என்னை வந்து பரீட்சித்துப் பார்த்தனர். அவர்கள் உணவில் விஷம் கலந்திருந்தது என்று கூறினர். அவர்கள் என்னை வாந்தி எடுக்கச் சொன்னார்கள். நான் போதிய அளவு தண்ணீரைக் குடித்து விட்டுப் பல் முறை முயற்சித்த பிறகு சிரமப் பட்டு வாந்தி எடுத்தேன். ஒவ்வொரு தடவையும் புளிப் பாயிருந்தது. வாந்தி எடுப்பதின் மூலம் விஷம் வெளியில் வராவிடில் வாயின் வழியே குழாயைச் செலுத்தி விஷத்தை எடுத்து விடுவதாக அந்த மருத்துவர்கள் கூறினர். ஆனால் நான் தண்ணீரைக் குடித்து சாதாரணமாகவே வாந்தி எடுத்து விட்டதால் குழாய் செலுத்த வேண்டிய அவசியம் ஏற்பட வில்லை. என்னுடைய உயிர் காப்பாற்றப் பட்டது. தயாள குணமும் கருணையும் நிறைந்த எனது பகவான் குருநாதர் காயத்ரி தேவியேதான். அவர் வாழ்க வாழ்க!

நான் அதே ரிக்ஷாவில் காலை 6 மணிக்கு வீடு திரும்பினேன். பாவம் அந்த ரிக்ஷாவாலா என்னை வீடு கொண்டு வந்து சேர்ப்பதற்காக இரவு முழுவதும் மருத்துவமனையிலேயே காத்துக் கிடந்தார். தக்க சமயத்தில் நல்ல முறையில் உதவியதற்காக அவர் அதிகமாகப் பணம் ஒன்றும் கேட்க வில்லை (சிவானந்த சாதன சகோதரி சிவானந்த சமேலி சகோதரர்கள்) மாநாட்டில் எனக்கு உதவி புரிந்து வந்த ஆராவைச் சேர்ந்த நண்பர் ஒருவர் இந்த சம்பவத்தைக் கேள்விப் பட்டதும் ரிக்ஷாவுடன் தன்னந்தனியாகக் காத்திருந்து என்னை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று திரும்பவும் வீடு கொண்டு வந்து விட்டது நமது அன்பிற்குரிய சுவாமிஜியைத் தவிர வேறு யாரும் இல்லை என்று குறிப்பிட்டார். நானும் அப்படித்தான் நினைக்கின்றேன்.

ஏனெனில் அந்த நடுநிசியில் ஜனநடமாட்டமே இல்லாது அமைதி நிலவுகின்ற அந்த நேரத்தில் ஈஸ்தாவில் ரிக்ஷாவாலாவைக் காண்பது இயலாத காரியம். என்னுடைய குருதேவர் வாழ்க! அவருடைய சர்வ வல்லமை பொருந்திய கருணை வடிவான காக்கும் கரங்கள் வெல்க!

S. P. ஸின்ஹா
சூரஜ்

*   *   *

## காக்கும் தேவதை

ஏப்ரல் 3ந்தேதி. நள்ளிரவு மணி 1-45 நான் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தேன். அப்பொழுது தாங்கள் என் படுக்கை யருகில் வந்து ஏதோ தீங்கு நேரப் போவதாகவும் உடனே எழுந்திருக்கும் படியும் எச்சரிக்கை செய்தீர்கள். நான் திடுக்கிட்டு எழுந்து கதவைத் திறந்து தங்கள் திரு நாமத்தை ஜெபித்த வண்ணம் வராந்தாவிலிருந்து வந்து பூர்த்தேன். அப்பொழுது வராந்தாவிலிருந்து கொல்லைப் புறமாக ஒரு திருடன் குதித்து ஓடிக் கொண்டிருந்தான். நான் உரக்கக் கூச்சல் போட்டுக் கொண்டு அவனைத் துரத்த ஆரம்பித்தேன். அவன் வெளி மதில் சுவரை தாண்டுவதற்குமுன் நான் அவனைப் பிடித்து விட்டேன். என்னுடைய சப்தத்தைக் கேட்டு சௌக்கிதாரும் மற்ற வேலையாட்களும் ஓடி வந்து அவன் என்னுடைய பிடியிலிருந்து தப்புவதற்குள் அவனைப் பிடித்துக் கட்டிப் போட்டு விட்டனர்.

அந்தத் திருடன் சிங்கர் (தையல்) மிஷின் மற்றும் சில சாமான்கள் முதலியவற்றை மதில் சுவருக்கப்பால் கடத்திச் சென்றிருந்தான். அவனுக்கு நேரம் சரியில்லை

போலிருக்கிறது. துரதிருஷ்ட வசமாக அவன் பூஜை அறையில் புகுந்து ஸ்ரீ துர்க்கா தேவியினுடைய வெள்ளி சிம்மாசனத்தை அகற்றியிருந்தான். பாவம் எல்லாம் வல்ல சிவானந்தஜி மஹராஜ் அவர்களின் படம் அங்கு அசையாமல் (ஜடமாக) ஆனால் விழிப் போடு அவனுடைய செய்கைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறது என்பதை அவன் அறிய வில்லை போலும். தாங்கள் எங்கும் நிறைந்தவர், எல்லாம் வல்லவர் என்பதை அவனால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது.

திருடன் தற்பொழுது காவலில் இருக்கின்றான். உள்ளூர் கோர்ட்டில் வழக்கு நடந்து வருகிறது.

அன்று உணர்ச்சியைத் தூண்டி விடும் இரவாக இருந்தது. குழந்தைகள் எல்லோரும் விழித்துக் கொண்டு தங்கள் திரு நாமத்தை ஜெபித்த வண்ண மாக இருந்தனர்.

எங்களுடைய குடும்பத்தை ரட்சித்தமைக்காக தங்களுக்கு எண்ணற்ற நன்றிகளும் அனந்த கோடி நமஸ்காரங்களும் உரித்தாகுக.

24ந்தேதி மற்றொரு சம்பவம் நிகழ்ந்தது. அப் பொழுது தாங்கள் என்னுடைய மனைவியை மரணத் தின் வாயிலிருந்து வெளியே இழுத்து வந்து விட்டீர் கள்.

தங்கள் கருணை எல்லையற்றது. தாங்கள் என்னு டைய ரட்சகர், என்னுடைய தெய்வம், எனது குருநாதர். என்னுடைய தெய்வீகத் தந்தை. அடியேன் தங்களி டம் சரணாகதி அடைகிறேன்.

லால் பஹதூர் மத்தூர்
காஸியாபாத்

## "என்னிடம் வருக"

நான் என்னுடைய வீட்டைத் துறந்து ஒரு சஞ்சாரி சாதுவாக காசியில் இருந்து வந்தேன். நான் பெரும் பாலும் அன்னை அன்னபூர்ணா தேவியின் ஆலயத்தில் தான் நேரத்தைக் கழிப்பது வழக்கம். ஒருநாள் ஒரு காட்சியில் நல்ல உயரமும் தேகக்கட்டும் கூடிய ஒரு சுவாமி அவருடைய மூன்று சீடர்களுடன் என்முன் தோன்றி "என்னிடம் வருக" என்று கூறி மறைந்தார். பிறகு நான் பத்ரிநாத் செல்லும் வழியில் சிவானந்தாஸ்ரமம் வந்தேன். நான் சுவாமிஜியைச் சந்தித்த பொழுது அன்று எனக்குக் காட்சி கொடுத்தருளியவர் இவர்தான் என்பது தெரிய வந்தது. நான் ஆபீஸில் நுழைந்த பொழுது எனக்கு மற்றொரு அற்புதக் காட்சி ஏற்பட்டது. அதில் சுவாமி சிவானந்தஜி அங்கு இருந்த இடம் முழுவதும் காணப்பட்டார். சுவாமிஜி சாதாரணமாக என்னைப் பார்த்து "இது தான் உங்களுடைய பத்ரிநாத், இங்கேயே தங்கியிருங்கள்" என்று கூறினார். நான் அவர் கட்டளையை சிரமேற் கொண்டேன்.

*ஸ்வாமி துரீயானந்தா*

* * *

## ஆபத்தில் உதவும் நண்பர்

எனக்குக் குடும்பத் தொல்லை அளவு கடந்து இருப்பினும் அவைகளுக்கிடையேயும் தங்களுடைய அன்பையும், நேசத்தையும் உணர்ந்து வருகின்றேன். அன்றொரு நாள் என்னுடைய ஆன்மீக வாழ்க்கையைப் பற்றி நான் சிந்தித்த வண்ணமாக இருந்த பொழுது தாங்கள் என்முன் நின்று கொண்டிருந்த

தைக் கண்டேன். தாங்கள் என்னை ஒரு சீடனாக ஏற்றுக் கொண்டு எனக்கு ராஜயோகத்தைக் கற்பிப்பீர்களோ என்று எண்ணினேன். அது தான் எனக்குரிய யோகம் என்று தாங்கள் கூறினீர்கள். தங்களின் சீடனாக இருக்கும் பாக்கியத்தை எனக்குத் தந்தருள்வீராக.

ஸ்ரீ வயலெட் டெனன்ஷெண்ட்,
சார்லெஸ்டர், இங்கிலாந்து.

* * *

ஆறுதல் அளிக்கும் தோற்றம்

ஒருநாள் ஆபீசில் உட்கார்ந்துகொண்டு மிகவும் கவலையுடன் வீட்டைவிட்டு ஓடிவிடலாமா என்று சிந்தனை செய்து கொண்டிருந்த பொழுது சுவாமிஜி அங்கு நேரில் தோன்றி ஐந்து நிமிட நேரம் தங்கியிருந்து "அது மாதிரியான தொல்லைகள் எல்லாம் தாற்காலிகமானவை. சீக்கிரத்தில் எல்லாம் சரியாகிவிடும்" என்று ஆறுதல் கூறி மறைந்தார். இதை நான் கண்ணாரக் கண்டேன்.

ஸ்ரீ P. L. நராங்
பாதுகாப்பு அக்கௌண்ட்ஸ் இலாகா
ஜபல்பூர் தண்டு

* * *

பரவசமூட்டும் காட்சி

அன்பிற்கினிய குருதேவ், தங்களுடைய அன்பார்ந்த கடிதம், புத்தகங்கள், தாங்கள் அனுப்பிய வெகுமதிகள் (தைலம், சவன்ப் பிராஷ்) ஆகியவைகள் எல்லாம் கிடைத்தன. இவைகளுக்கு நான்

எனது அன்பிற்குரிய குருநாதருக்கு என்னால் நன்றி சொல்ல இயலுமா? அவைகளைப் பெறுவது ஒரு பேரானந்தம்.

இன்று என் வாழ்விலேயே அதி அற்புதமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அதற்குக் காரணம் தங்கள் கருணையேயன்றி வேறல்ல. நேற்றிரவு படுக்கைக்குச் செல்லுமுன் வழக்கம் போல் மாடியில் ஜெபம் செய்து கொண்டிருந்தேன். சிறிது நேரம் கழித்து நான் கண்களை மூடிக்கொண்டிருந்த போதிலும் எனக்கு முன் ஒரு பிரகாசமான ஒளி தோன்றியது. எனக்குச் சற்று நடுக்க மேற்பட்டது. யாரோ திருடன் நமக்கு முன் நின்று கொண்டு முகத்தில் டார்ச்சு விளக்கை அடிக்கிறான் போலிருக்கிறது என்று எண்ணிக்கொண்டு உடனே கண்ணைத் திறந்து பார்த்தேன். பிறகு என்னுடைய அர்த்தமற்ற பயத்தை எண்ணி நகைத்துக் கொண்டு மறுபடியும் ஜெபத்தைத் தொடர்ந்து செய்ய கண்ணை மூடினேன். மறுபடியும் அதே பிரகாசமான ஒளி எனக்குமுன் பிரகாசித்தது. ஆனால் இந்த முறை நான் மிகவும் உறுதியாக தைரியத்துடன் இருந்து கொண்டு கண்களைத் திறக்கவில்லை. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அந்த ஒளி மறைந்து என்னுடைய குருதேவரின் இனிய, ஊக்கமளிக்கும், புன்னகை பூத்த திருமுகம் மிகத் தெளிவாகக் காணப் பட்டது. குருநாதரின் நெற்றியில் காலணா அகலம் நல்ல சிகப்புக் குங்குமப் பொட்டுத் திகழ்ந்தது. அவருடைய திருப் பாதங்களும் ஒன்றின் மேல் ஒன்று போடப்பட்டிருந்ததைக் கண்டேன். (ஆனால் அவ் வளவு தெளிவாகத் தெரியவில்லை). நான் உடனே அப்புனித பாத கமலங்களுக்கு அன்பு முத்தமிடுவதற் காகக் குனிந்தேன். ஆனால் நான் பூமி மாதாவைத் தான் முத்தமிட முடிந்தது. பிறகு நான் அந்த இனிய

காட்சியிலிருந்து விழித்துக் கொண்டேன். அந்தோ! என்னுடைய அன்பிற்கினிய குருதேவரின் தெய்வீக உணர்ச்சி கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் ஏற்பட்டது. பிறகு சிறிதுநேரம் தியானம் செய்துவிட்டு மகிழ்ச்சிகரமான மனோநிலையுடன் எழுந்து படுக்கைக்குச் சென்றேன். நான் நன்றாக அயர்ந்து தூங்கினேன். விடியற்காலை வழக்கம் போல சரியாக 5 மணிக்கு எழுந்து மாடியிலிருந்து இறங்கி வந்தேன். பிறகு முகம் கைகால்களை கழுவிக் கொண்டு காப்பிக்காக மின்சார அடுப்பைப் பற்றவைத்து அதன்மீது தண்ணீரை வைத்து விட்டு என்னுடைய காலைப் பிரார்த்தனையில் அமர்ந்தேன். என்னுடைய குழந்தைகள் வெகு நேரம் கழித்து எழுந்தனர். பூஜிக்கத்தக்க தேவா என்னை நம்புங்கள். நான் மறுபடியும் என்னுடைய குருதேவரின் அதே ஒளி பொருந்திய இனிய முகத்தைக்கண்டு பரவசமடைந்தேன். நான் பாடினேன். ஆனந்தக் கூத்தாடினேன். என்னுடைய படுக்கை அறையில் மாட்டிவைக்கப் பட்டிருக்கும் குருதேவருடைய படத்திற்கு 101 தடவை அடி பணிந்து வணக்கம் செய்தேன். காலைப் பொழுது முழுவதும் வழக்கம் போல் கழிந்தது. என்னுடைய எண்ணங்கள் அனைத்தும் தங்களுடைய தெய்வீக மந்திர சக்திகளால் நிரப்பப்பட்டிருந்தன.

ஸ்ரீமதி V. S. ராம்
லக்னோ

* * *

சுவாமி சிவானந்தரைப் பற்றியது

தங்களுடைய கடிதம் ஊக்குவிக்கும் வகையில் இருக்கிறது.

இங்கு நான் ஒரு நோயாளியின் மரணப் படுக்கைக்கு அருகில் மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜெபித்துக் கொண்டிருக்கிறேன். அவர்கள் நல்ல அமைதியாகக் கடைசி நேரத்தைக் கழிக்கிறார்கள். ஒரு வயது முதிர்ந்த அம்மையாருக்குக் கடைசி நேரத்தில் என்னிடம் பற்று ஏற்பட்டது. நான் தங்கள் படத்தை அறிமுகப் படுத்தினேன். அவர் அன்று இரவு முழுவதும் சிவானந்தா! சிவானந்தா! என்று இடைவிடாது சொல்லிக் கொண்டு இருந்து அடுத்த நாள் காலையில் இப்பூத உடலை நீத்தார். கடைசி நிமிடம்வரை அவர் நல்ல உணர்வுடனே இருந்து பட்டினத்தார் பாடல்கள், தேவாரம், திருவாசகம், முதலியவற்றைப் பாடிக் கொண்டிருந்தார்.

சிவானந்த முக்தானந்தா
யாழ்ப்பாணம்.

* * *

மாலை 4 மணி. என்னிடம் உற்சாகம் காட்டி வந்த சில நண்பர்களுக்கு யோகாசனம் செய்து காட்டுவதற்காக என்னுடைய அறையில் ஏற்பாடுகள் செய்து வந்தேன். அப்பொழுது தபால்காரர் "அன்னையின் வடிவில் கடவுள்" (God as Mother) "பஜார் மருந்துகள்" (Bazaar Drugs) என்ற இரண்டு மதிப்பு மிக்க புத்தகங்களடங்கிய கட்டு ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தார். நான் அந்தக் கட்டை உடைக்கும் பொழுது என்னுடைய கண்களிலிருந்து நீர்ப்பெருகியது. என்னால் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நான் தங்களுடைய புத்தகங்களிலிருந்து அடிக்கடி "கடவுள் தன்னுடைய பக்தர்களுக்கு எவ்வளவு இரக்கம் காட்டுகிறார்" என்று படித்திருக்கிறேன்.

ஆனால் அதன் முக்கியத்துவத்தை நன்றாக உணர வில்லை. இப்பொழுது தன்னுடைய சீடர்களிடம் சிவா எவ்வளவு இரக்கம் காட்டுகிறார் என்பதை நான் நன்கு உணர்ந்தேன். மேலும் தங்களுடைய புத்தகத்தில் "ஒரு மனிதன் கடவுளை நம்பாமல் இருக்கலாம், ஆனால் கடவுள் மனிதனை நம்புகிறார்" என்றும் படித்திருக் கின்றேன். உண்மையில் பார்க்கப்போனால் "சிவா" வை நான் ஒரு நாளைக்கு ஒருமுறைகூட நினைக்காமல் இருக்கலாம். ஆனால் "சிவா" ஒரு பொழுதும் ஒரு முறைகூட என்னை மறப்பது இல்லை. நடமாடும் தெய்வ மாகிய 'சிவா'வின் கருணை அப்பேர்ப்பட்டது.

ஜமேதார் T. K. கோவிந்தராஜ்
பம்பாய்

* * *

தங்கள் உபதேசங்களைப் பெற மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். தங்களுடைய கடிதம் எனக்கு மிகுந்த சாந்தியைக் கொடுத்திருக்கிறது. தங்களுடைய கடிதத்திலிருந்து நான் நிரந்தரமான அமைதியைப் பெற்றிருக்கின்றேன். நான் என்னுடைய குருதேவரின் புத்தகங்களையோ கடிதங்களையோ படிக்கும்போது என்னிடம் ஒரு திடீர் மாற்றம் ஏற்படுவதை உணரு கின்றேன். தினந்தோறும் ஒரு புதுப்புது மாற்றம் என் னிடம் ஏற்படுவதை உணருகின்றேன். நான் தங்கள் திருவுருவத்தைப் படத்தில் காணுந்தோறும் மிகுந்த மன அமைதி பெறுகின்றேன். என்னுடைய மனம் சஞ்சல மடையும்பொழுது நான் தங்கள் உபதேசங் களைத் திருப்பித் திருப்பிக் கூறுகின்றேன். அவைகள் உண்மையான சாந்தியைக் கொடுக்கின்றன.

P. B. மத்தூர், காஜியாபாத்.

பூஜிக்கத்தக்க குருதேவா,

அடியேனுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

தங்களிடமிருந்து ஒரு கடிதத்தையும் புத்தக அஞ்சலையும் பெறப் பெருமிதமடைகின்றேன். தாங்கள் என்னை நினைத்துக் கொண்டிருப்பது எனக்குப் பெரு மகிழ்ச்சி யளிக்கிறது. குருதேவ, தங்கள் பாதகமலங்களில் அடியேன் எப்பொழுதும் இருக்க இடந் தந்தருள வேண்டுகின்றேன்.

நான் கடவுளைத் தங்கள் வடிவில் வழிபட விரும்புகின்றேன். என்னுடைய இஷ்ட தேவதை தாங்கள் தான். தாங்கள் எனக்குக் குருதேவரும் இஷ்ட தேவதையுமாவீர்கள். தாங்கள் எனக்கு இறைவனை அடையும் மார்க்கத்தைக் காட்டியிருக்கிறீர்கள். இந்த அந்தகாரம் நிறைந்த உலகில் தாங்கள்தான் எனக்குத் தீபமாக விளங்குகின்றீர்கள். நான் தங்களைப் பார்க்காதிருக்கும் பொழுதே எனக்கு எப்படி தங்களிடம் இவ்வளவு பற்று ஏற்பட்டது என்று புரியவில்லை. தாங்கள் என் அருகில் எப்பொழுதும் அமர்ந்திருப்பதைப் போலவும் நான் தங்கள் பாதங்களில் இருப்பதைப் போலவும் உணருகின்றேன். நான் தங்களுடைய புத்தகங்களைப் படித்து வருகின்றேன். அவைகள் எனக்குப் பேரானந்தத்தையும் ஞானத்தையும் அளிக்கின்றன.

*சந்தோஷ்வோஹ்ரா, டெல்லி*

* * *

தங்களுடைய விபூதி குங்குமப் பிரசாதம் கிடைக்கப் பெற்று பெருமகிழ்ச்சி அடைகின்றேன். இதை நான் என்னுடைய வாழ்க்கையிலேயே எதிர்பார்க்கவில்லை. அப் பிரசாதம் ரிஷிகேசத்திலிருந்து இவ்வளவு

தூரம் வந்திருக்கிறது. ஆண்டவனுடைய வழிகள் விசித்திரமானவை. சில நாட்களுக்கு முன்தான் தங்களுடைய ஆஸ்ரமத்திலிருந்து பிரசாதமும் விபூதியும் பெறுகின்ற பாக்கியம் கிட்டப் போகிறது என்று என் உள்ளத்தில் ஆழ்ந்த எண்ணம் தோன்றியது. என் ஆசை கண்கூடாக பூர்த்தி செய்யப்பட்டது.

M. ஜகதீஸன், ஓவர் சீயர், புங்கனூர் கேம்ப்.

* * *

தங்களுடைய பிரசாதம் "மனமும் அதன் இரகசியமும் அதை அடக்கு முறையும்" என்ற அதிமுக்கியத்துவம் வாய்ந்த புத்தக வடிவில் கிடைத்தது. 1953 ஏப்ரல் முதல் தேதி நான் தங்கள் சிஷ்யனாக தீட்சை பெற்றதிலிருந்து கட்டுப்படுத்த முடியாத மனச் சஞ்சலத்தினால் பீடிக்கப் பட்டிருக்கிறேன். எனக்குத் தீட்சை அளிக்கும்போதுகூட என்னுடைய தாரணை செய்ய இயலாமையை (மனத்தைக் குவியவைக்க முடியாமையைப்) பற்றி தங்களிடம் கூறியிருக்கின்றேன். தாங்கள் கருணை கூர்ந்து ஜெபம் செய்யச் சொன்னீர்கள். நானும் ஓம் நமசிவாய மந்திரத்தை ஜெபித்துக் கொண்டுதான் வருகின்றேன். இருப்பினும் எதிர் பார்த்த பலன் கிட்டவில்லை.

தங்களுடைய யோக சக்தியினால் தாங்கள் என்னுடைய மனோ நிலையை அறிந்து மேற்கூறிய அற்புதமான புத்தகத்தை அளிப்பது உசிதமாக இருக்குமென்று கருதியிருப்பீர்கள் என நான் நினைக்கின்றேன். தக்க சமயத்தில் தக்க "பிரசாதம்" அனுப்பியிருப்பது குறித்து எனக்கு ஏற்பட்டுள்ள மகிழ்ச்சியை வர்ணிக்க வார்த்தைகள் கிடைக்கவில்லை.

நான் அந்தப் புத்தகத்தை நன்ருகப் படித்து என்னுடைய சிரமங்களை நிவாரணம் வேண்டி தெரிவிக்கின்றேன்.

என்னுடைய தாழ்மையான வந்தனங்களையும் சாஷ்டாங்க நமஸ்காரங்களையும் ஏற்று ஆத்மானுபூதி அடையும் லக்ஷியத்தில் எனக்கு மேலும் வழிகாட்டி அருள வேண்டுமாறு பிரார்த்தித்துக் கொள்கின்றேன்.

S. H. *தாக்கர், அஹமதாபாத்.*

* *

கருணைக் கடலே! எனக்குக் குடியிருக்க இருப்பிடம் கொடுத்திருப்பது தாங்கள்தான். என்னுடைய பாராட்டுதலையும் நன்றியறிதலையும் எவ்வாறு தெரிவிப்பது என்றே புரியவில்லை. எனக்கு அதை வர்ணிக்க வார்த்தை கிடைக்கவில்லை. இந்தக் குறிப்பிட்ட வீட்டை தாங்கள் எனக்குக் கொடுத்திருக்கும் விதம் ஒரு அற்புதமாகும். இந்தச் சிறு புழுவின்மீது தாங்கள் சதா சர்வ காலமும் தங்கள் கருணை மழையைப் பொழிந்து தள்ளுகின்றீர்கள். ஆனல் அதே சமயத்தில் நான் தங்களுக்கு எல்லா வகையிலும் நன்றி கெட்டவனுகவே இருந்து வருகின்றேன்.

T. K. *ஸ்ரீனிவாசன்,* மேட்டூர் அணை, சேலம் ஜில்லா.

* *

நேற்றிரவு தங்களிடமிருந்து கிடைத்த ஒரு சிறு வாழைப்பழ பிரசாதத்திற்கு என்னுடைய மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நான் அதைத் தங்கள் கரங்களிலிருந்து நேரடியாகப் பெற்றுச் சாப்பிட்டேன்.

*பர்கத் ராம் சாதா, டெல்லி.*

மதிப்புமிக்க தங்களுடைய புத்தகங்கள் மூலமாகவும், கீதையின் மூலமாகவும் தாங்கள்கூறும் உபதேசங்களைத் தங்களுடைய நேர்முக உபதேசங்களாகக் கொண்டு அவை அனைத்தையும் கடைப்பிடித்து வருகின்றேன். அதனால் எனக்கு அன்றாட வாழ்க்கையில் பரம திருப்தியும் சாந்தியும் ஏற்பட்டிருக்கின்றன.

டாக்டர் குமாரி ராதா கண்ணன்,
ரிஜிஸ்டர்டு மெடிகல் பிராக்டிஷனர்
குடும்ப ஆஸ்பத்திரி, R. S. புரம், கோவை.

*                                   *

நான் ராணிகேத், நைனிடால் ஆகிய இடங்களைப் பார்த்துவிட்டுத் திரும்பியதும் எனக்குத் தங்களுடைய பிரசாதம் புத்தக வடிவில் கிடைத்தது. தங்களுடைய படத்திற்கே இவ்வளவு சக்தி இருக்குமாகில் தங்களிடம் இன்னும் எவ்வளவு சக்தி இருக்கும்! பன்முறை எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன். தாங்கள் என்னை வரையறுத்துக் கூறவோ அல்லது வர்ணிக்கவோ முடியாத ஏதோ ஒன்றிற்கு அமைதியாகத் தயார் செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதை நன்கு உணருகின்றேன்.

வித்யானந்தா,
47, டாகூர் டவுன், அலகாபாத்-2.

*                                   *

புகை பிடிக்கும் வழக்கத்தை என்னால் நிறுத்த முடியாமல் இருந்ததைக் குறித்துத் தங்களுக்குத் தெரியப்படுத்தியிருந்தேன். தற்பொழுது தாங்கள் அதை மிகச் சுலபமாக நல்ல முறையில் நிறுத்தச் செய்து விட்டீர்கள். நான் 1954 மே 9-ந் தேதியி

லிருந்து புகை பிடிப்பதில்லை. அந்தர்யாமியாக இருந்து தாங்கள் எனக்கு ஆசி கூறி வழிகாட்டுமாறு பிரார்த்திக்கின்றேன்.

G. R. பட்டீல், பூனா.

*                    *

1953 செப்டெம்பர் கடைசி வாரம் முதல் ஒரு மாத காலம் நான் தங்கள் ஆஸ்ரமத்தில் இருந்தேன்.

எனக்குத்தங்களிடம் ஒரு உண்மையான விருப்பம் ஏற்பட்டிருந்தது. அது இன்றும் வாடா நிலையில் இருக்கிறது.

எனக்கு ஏற்பட்ட ஒரு கனவு காரணமாக நான் தங்களைச் சந்தித்தேன். அதில் என்னுடைய தந்திர குரு திடீரென்று தாங்களாக மாறி விட்டதைக் கண்டேன். அதைத் தங்களிடமும் கூறினேன். தற்பொழுது நான் தங்களை நேரில் சந்திப்பதற்கு முன்னரே (My magazine of India) என்ற சஞ்சிகையின் மூலமாகவும் தங்களுடைய சில புத்தகங்கள் மூலமாகவும் தங்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறேன். அவைகளுள் தங்களின் "ஆனந்த லஹரி"யின் மொழிபெயர்ப்பும் ஒன்று.

நரேந்திர குமார் சென்குப்தா, அலகாபாத்.

*                    *

ரிஷிகேசத்திற்கு வரும் யாத்திரீகர்கள் அனைவருக்கும், குறிப்பாக தென்னிந்தியாவிலிருந்து வருபவர்களுக்குத் தாங்கள் ஒரு புகலிடமாக விளங்குகின்றீர்கள்.

மே. த. ஜஸ்டிஸ் N. சந்திரசேகர ஐயர்,
சூப்ரீம் கோர்ட் நீதிபதி.

சுவாமிஜியினுடைய புத்தகங்களுள் ஒன்றின் மூலம் நான் மிகவும் கவரப்பட்டேன்.

S. N. ஷிராலி, 956, காலேஜ் ரோடு, பெல்காம்.

*                    *

திடீரென்று அதிசயமான வகையில் நான் இக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதுகின்றேன். நான் நெடுநாளாய் வேதனை தாங்காது தற்கொலை செய்து என்னுடைய உயிரையே மாய்த்துக் கொள்ளலாம் என்று முடிவு கட்டியிருந்த வேளையில் எதிர்பாராத வகையில் தங்களுடைய சஞ்சிகையைக் கண்ணுற்றேன். என்னுடைய முடிவில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. பிறகுதான் என்னுடைய பழைய வரலாற்றைத் தங்களிடம் கூறித் தங்கள் உபதேசத்தை நாட வேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டது.

ஹரீந்திர சந்திர டே, கல்கத்தா.

*                    *

மஹா மிருத்யுஞ்ஜய மந்திரம் என்னுடைய நோயைப் பூரணமாகக் குணமாக்கிவிட்டது என்பதை மட்டில்லா மகிழ்ச்சியுடனும் பணிவன்புடனும் தெரிவித்துக் கொள்கின்றேன். நான் இப்பொழுது பூர்ண சுகத்துடன் இருக்கிறேன். தங்கள் உபதேசப்படி நான் அதைத் தொடர்ந்து ஜெபித்து வருகின்றேன்.

(குமாரி) R. பொன்னம்மாள், மதுரை.

*                    *

என்னுடைய தொழில் துறை தோழராகிய சுவாமிஜி, தாங்கள் தற்பொழுது முனிவராக, இரட்சக

ராக, லௌகீக, ஆன்மீக விஷயங்கள் அனைத்திற்கும் வழி காட்டியாகத் திகழ்கின்றீர்கள். எனது "அவதிப் படும் நோயாளிகளுக்கு வீட்டிலேயே அதிக பொருள், காலம், சக்திச் செலவின்றி செய்யப்படும் வீட்டுச் சிகிச்சை முறை புரனமைப்பு"த் திட்டத்தை நிறை வேற்ற தங்களுடைய "பஜார் மருந்துகள்" (Bazaar Drugs), "வீட்டு வைத்தியன்" (Home Physician) "முதல் உதவி", (First Aid), "இயற்கை நிவாரண முறை" (Practice of Nature Cure), "நடைமுறை வீட்டு வைத்தியம்" (Practical Household Remedies) ஆகிய புத்தகங்கள் பேருதவியாக இருந்து அதை இலகு வாக்கி விட்டன.

H. W. *ஹிங்கொரானி*, M.B.B.S., பவநகர்.

* * *

சென்ற மாதம் ஸ்ரீ மஹேஷ்ஜி அவர்களும் டாக்டர் B. N. சர்மா அவர்களும் தங்களுடைய நண்பர்களுடன் ரிஷிகேச யாத்திரை செய்துவிட்டுத் தங்களுடைய ஆஸ்ரமத்தைப் பற்றி விஸ்தாரமாக எடுத்துக் கூறி ஞர்கள். அதைக் கேட்கக் கேட்க எனது உள்ளத்தில் ஒரு கவர்ச்சி ஏற்படுகின்றது.

*ரவிசங்கர் பட்*, உதயபுரி.

* *

தாங்கள் அன்புடன் அனுப்பி வைத்த நான்கு புத்தகங்களுக்காக மிக்க நன்றி. அவைகள், குறிப்பாக சமீபத்தில் வெளிவந்த "வாழ்க்கையின் லட்சியம்" (The Goal of Life) என்ற புத்தகம் மிகவும் உற்சாக

மூட்டுவதாகவும் ஞானத்தை ஏற்படுத்த வல்லதாகவும் இருக்கிறது.

M. K. ஷா, ஆசிரியர், பேனு நண்பன்,
பம்பாய்.

*                    *

தங்கள் ஆன்மீகப் புத்தகங்களைப் பார்த்து வரும் பொழுது நான் பேரானந்தத்தில் மூழ்கி விடுகிறேன்.

M.S. ராஜ், பேகம்பேட்டை எக்ஸ்டென்ஷன்,
பேகம் பேட்டை (Dn)

*                    *

தங்களுடைய கடிதம் எனக்கு அளித்த ஆனந்தத்தைத் தங்களால் கற்பனை செய்து பார்க்க முடியாது. அது அமிர்தத்தைப் போல் இருக்கிறது. நான் செய்து வரும் தொழிலைத் தொடர்ந்து செய்ய என்னுடைய நம்பிக்கையைத் தட்டி எழுப்ப அது போதுமானது, அது வாழ்வளிக்கும் கடிதம். வாழ்க்கையின் மிக உன்னதமான உபதேசங்கள் அடங்கிய கடிதம்.

டாக்டர் J. E. பிரெஞ்ச்மென், M.B.B S., பூனு.

*                    *

எனக்கு ஒரு இந்து நண்பரால் கொடுக்கப்பட்ட தங்களுடைய "இறை நாட்டம் உள்ளவர்களுக்கு" (For Seekers of God) என்ற புத்தகத்தில் தாங்கள் வெளிப்படுத்திக் காட்டியிருக்கும் கருத்துக்கள் என் உளம் கவர்ந்தன.

ஸ்ரீமதி மேரி சல்தானு, பம்பாய்.

தங்களை நினைந்து கொண்டிருப்பதே ஒரு பேரானந்தம். அது ஆனந்தம் மட்டுமல்ல, அதுவே ஜீவன்.

சர்கத்ராஜ் சாதா, டெல்லி.

*           *

தங்களுடைய தரிசனம், பிரசாதம், விசேஷ ஆசிகள் ஆகியவை கிடைத்த பிறகு என்னுடைய காணமல் போன ஒரு உறவினர் கங்கையின் மறு கரையில் இருந்தது ஒரு பெரிய அதிசயமாகும். நாளுக்கு நாள் எனக்குத் தங்களிடமுள்ள நம்பிக்கை வளர்ந்துகொண்டு வருகிறது.

டாக்டர் B. D. கார்க், M.B.B.S.
இம்பிலிகேரா.

*     *     *

நான் என்னுடைய சாதனையில் ஒழுங்காக இல்லாவிடினும் ஆனந்த குடீரத்து மாமுனிவரின் கருணையினால் என்னால் இந்த உலக இன்னல்களை எதிர்த்து நின்று பொறுமையுடனும், விடாமுயற்சியுடனும் சமாளிக்க முடிகிறது. எனக்கு அமைதியும் இறை நம்பிக்கையும் ஏற்பட்டிருக்கிறது.

சத்குருவின் கருணையினால் என்னுடைய வாழ்க்கையும் என்னுடைய மனைவியின் வாழ்க்கையும் பெரு மாற்றத்திற்குள்ளாகி இருக்கிறது. அதற்குரிய நன்றிக் கடனாகிய பெருஞ் சுமையானது அழியக் கூடியவர்களாகிய எங்களால் திருப்பிக் கொடுக்கப்பட முடியாதது. பத்திரிகைகளில் வெளிவந்திருந்தது போல தற்பொழுது ஆனந்த குடீரத்து முனிபுங்கவரின்

ஆஸ்ரமத்தில் இருந்துவரும் அந்த ஜெர்மன் மாது கூறியது முற்றிலும் உண்மையே. இந்த மாமுனிவர் ஆயிரக்கணக்கானவர்கள் இந்தச் சம்சார சாகரத்தைக் கடப்பதற்குத் துணை புரிந்திருக்கின்றார். அவர்களுள் நானும் ஒருவனாக இருக்க விழைகின்றேன். என்னிடத்தில் எனக்குப் போதுமான தகுதியில்லாதிருப்பினும் கருணைக் கடலான சத்குருவின் ஆதரவினால் இந்தச் சம்சாரக் கடலிலிருந்து மீள ஆசைப்படுகின்றேன்.

கிருஷ்ணலால் சர்மா, புதுடெல்லி.

* * *

பாலக்காட்டைச் சேர்ந்த எனது நண்பர் திரு. P. கிருஷ்ணதாஸ் அவர்களின் மூலம் தங்களுடைய "மனமும் அதன் இரகசியங்களும், அதை அடக்கு வகையும்" (Mind Its mysteries and control) என்ற புத்தகத்தைப் படிக்க நேர்ந்தது. அதிலிருந்து மனத்தினுடைய தன்மையைப் பற்றியும் அதனுடைய வேலை முறையைப் பற்றியும் நல்ல அறிவைப் பெற முடிந்தது.

K. ஐயப்பன்,

தலைமை குமாஸ்தா, P.W.D., மலம்புழை அணை

* * *

தங்கள் கடிதத்திற்கும் தாங்கள் காட்டும் அன்பிற்கும் எனது மனப்பூர்வமான நன்றி. தங்களுடைய ஹடயோகம், குண்டலினி யோகம் என்ற நூல்களில் கொடுக்கப்பட்டிருக்கும் எல்லா அப்பியாசங்களையும் நல்ல முறையில் செய்து வருகின்றேன். தங்களுடைய உதவியைப் பெற்று வரும் நான் ஒரு பாக்கியசாலி.

நான் இப்பொழுது உரிய பாதையைக் கண்டு அதன் வழிச் சென்று அமரத்துவத்தை அடைவேன். தினந் தோறும் நான் தங்கள் அமர ஆத்மனின் கதிர் வீச்சை உணருகின்றேன். என்னுடைய எண்ணங்கள் தங்கள் ஆஸ்ரமத்தைக் காண்கின்றன.

ஸ்ரீ இரீன் ஹெய்மன் ஜெல்மேன் ஹாஷ்மல்,
ஜெர்மனி.

* * *

நான் தங்களிடமிருந்து ஒரு கடிதத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சென்ற வாரம் எனக்குச் சில விநோதமான அனுபவங்கள் ஏற் பட்டன. அக்டோபர் மாதத் தொடக்கத்திலிருந்து இடைவிடாது கேட்கப்பட்டு வரும் அசரீரி ஒலியானது தாங்கள் மாணாக்கர்களுக்காகப் பேசியிருக்கும் சொற் பொழிவு ரெகார்டில் கேட்கப்படும் தங்கள் குரலைப் போலவே உணருகின்றேன். நான் பல வழிகளில் பயனடைந்திருக்கின்றேன். என்னுடைய இதய நோயையும் கல்லீரல் நோயையும் இவ்வளவு பொறு மையுடன் குணமாக்கியமைக்கு நான் மிகுந்த நன்றி செலுத்துகின்றேன்.

ஸ்ரீ ஹில்டே ப்ரீபெல், ஜெர்மனி.

* * *

இன்று காலை ஒரு அதிசயம் நிகழ்ந்தது. 1950ல் தாங்கள் இலங்கை விஜயம் செய்தபொழுது பாதுகாப்பு ஏற்பாட்டைக் கவனித்து வந்த உத்தியோகஸ்தர்களில் ஒருவர் என்னிடம் வந்து ஒருமணி நேரம் பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் தங்களைப் பற்றியும் தாங்கள் வாழ்க்கையில் மேற்கொண்டுள்ள தொண்

டைப்பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். அவர் ஒரு சிங்கள கத்தோலிக்கர். அவர் தாங்கள் இயற்றிய யோகத்தைப்பற்றிய புத்தகம் ஒன்றை வேண்டினுர். நான் கொடுப்பதாக வாக்குறுதி கொடுத்துவிட்டு வீட்டிற்குத் திரும்பி வந்து பார்த்த பொழுது என்னு டைய மேஜையின் மீது தாங்கள் சமீபத்தில் எழுதிய "வாழ்க்கையும் வேலையும்" என்ற புத்தகம் தங்களு டைய வற்ருத அன்புடனும் ஆசியுடனும் திகழ்ந்தது. இந்த மதிப்புமிக்க அன்பளிப்பிற்காக என்னுடைய உளமார்ந்த நன்றியறிதலை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

K. ராமச்சந்திரா
கொழும்பு

* * *

நான் மருத்துவமனையில் இருந்தேன். என்னுடைய நோயைப் பற்றி ஸ்ரீ ஸெட்லக் கோவா அவர்கள் தங்கள் சீடர்கள் அனைவருக்கும் தெரியப்படுத்தி யிருந்தார். ஏனெனில் அவர்கள் தங்கள் தியானத்தின் போது என்னை நினைக்கும் பொழுது அவர்களால் அனுப்பப்படும் "பிராணு"வை நான் பெற்று அதன் மூலம் நிவாரணம் பெறும் பொருட்டுத்தான், நான் பிரணவ மந்திரத்தை இடைவிடாது ஜெபித்து வந்தேன். பிறகு தங்களுடைய சாந்நித்தியத்தை உணரத் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டதன் பலனு கவும், எனக்குப் பிராணுவை அனுப்பிக் கொண்டிருந்த தங்கள் சீடர்களின் மனே பலத்தினுலும் என்னுடைய உடல் நிலை அபிவிருத்தியடைந்தது. ஆகவே பிப்ரவரி 16-ந்தேதி கடுமையானதொரு அறுவைச் சிகிச்சை செய்வதாக இருந்தது. நான் அறுவைச் சிகிச்சை அறைக்குள் எடுத்துச் செல்லும்வரை ஓம் நம: சிவாய

மந்திரத்தைத் தங்களுடைய "ஜப யோகத்தில் கூறிய படி ஜெபித்துக் கொண்டே இருந்தேன். அறுவைச் சிகிச்சை நன்ருக ஒரு மணி நேரம் நடந்தது. எனக்கு அறுவைசிகிச்சை செய்யும் போதோ அல்லது செய்து முடித்த பின்னரோ வலி என்பதே தெரியவில்லை. நான் இறைவனுடைய நாமத்தை இடைவிடாது ஜெபித்துவந்ததன் மூலம் நான் அங்கிருந்த டாக்டர்கள் அனைவரையும் திகைக்க வைத்து விட்டேன். ஏனெனில் என்னுடைய வயிற்றிலும் சிறு நீர்ப்பை யிலும் அறுவைசிகிச்சை காரணமாக ஏற்பட்ட 10 சென்டி மீட்டர் நீளமுள்ள புண் 13 நாட்களில் எல்லா மருத்துவர்களும் ஆச்சரியப் படத்தக்க வகையில் ஆறி விட்டது. ஆனுல் நான் மருத்துவமனையை விட்டு வரும்போது அதே தொந்தரவிற்காக ஜனவரி 15-ந் தேதி (எனக்கு ஒரு மாதத்திற்கு முன்பு) ஆபரேஷன் செய்யப்பட்ட மற்ருெருவருடைய புண் இன்னும் சீழ் பிடித்துக் கொண்டிருந்தது. மருத்துவத்தலைவர் என்னைப்பார்த்து என்னைப் போல சீக்கிரம் குணமடைபவர் கள் நூறில் ஒருவர்தான் என்றும் அவருக்கு அடுத்த படியாக இருந்தவர் ஆயிரத்தில் ஒருவருக்குத்தான் இவ்வளவுநன்ருக குணமடையும் என்றும் கூறினுர்கள். இந்த அற்புதத்திற்குக் காரணம் தங்களைத் தவிர வேறு யாருமில்லை. நான் தங்களை இடையருது நினைந்து கொண்டு விடாமல் ஜெப யோகம் செய்து வந்ததாலும் தான் இது சாத்தியமாகி இருக்கிறது.

F. V. ஜலாபெக்
ஷ்ரூபா ஸ்கலா-8
ஸெட்மிஹார்க்கி
ஜெக்கொஸ்லோவேக்கியா
ஐரோப்பா

நான் மூன்ருண்டு காலமாக மருத்துவ மனையில் க்ஷயரோக நோயாளியாக இருந்து வருகின்றேன். தங்களுடைய பக்தர் ஒருவர் கொண்டுவந்து கொடுத்த தங்களுடைய ஆன்மீகப் புத்தகங்களையும் சிறு பிரசுரங்களையும் படித்ததிலிருந்து எனக்கு ஒரு உற்சாகம் பிறந்திருக்கிறது. அன்பார்ந்த சுவாமிஜி எனக்கு வாழ்விலும் ஒரு மறு மலர்ச்சி காணப்படுகிறது. தயை கூர்ந்து எனக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். சுவாமிஜியின் ஆசிகளினுல் நான் நிச்சயமாகக் காப்பாற்றப்படுவேன். தங்கள் பாதார விந்தங்களுக்கு அடியேனுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

செங்கையா ரெட்டி
நேட்டால்

* * *

தங்களுடைய உதவியை எண்ணும்போது பெரும் ஆறுதல் ஏற்படுகின்றது. தாங்கள் பலருக்குப் பேருபகாரியாக விளங்குகின்றீர்கள். நான் எனது முதல் கடிதத்தைத் தங்களுக்கு எழுதிய ஆருவது நாள் என்னிடத்தில் எனக்கு ஒரு ஆழ்ந்த நம்பிக்கை திடீரென ஏற்பட்டது. அன்று முதல் என்னுடைய உடல் நிலை தேறியது. (என்னுடைய கடிதம் தங்கள் கையில் கிடைத்ததும்) தங்களுக்கு ஏற்பட்ட முதல் எண்ணமே இந்தப் பலனை உண்டாக்கியிருக்கிறது என்று உறுதியாகக் கூறமுடியும். அது என்னுடைய ஆன்மீக முயற்சிகளை மேலும் பலனுடைய தாக்குகின்றது. இப்பொழுது என்னுடைய கவலைகள் துன்பங்கள் அனைத்தையும் மறந்து தியானத்திற்காகவும்

பிரார்த்தனைக்காகவும் நான் அதிக நேரம் செலவழிக்கின்றேன்.

ஸ்ரீ J. பன்மான்
நியோன்
ஸ்விட்ஜர்லாந்து

*　　*　　*

திருமலையிலிருந்து நான் சென்னைக்குத் திரும்பி வந்த அன்றிரவு குருதேவர் என்னுடைய கனவில் இரண்டு முறை தோன்றினார். முதல் முறை அவர் நான் தங்கியிருக்கும் வீட்டிற்கு வந்து என்னிடம் உரையாடி வேடிக்கையாகப் பேசிவிட்டு மறைந்துவிட்டார். நான் எழுந்து கடவுளைத் தொழுதுவிட்டு படுத்துக் கொண்டேன். மறுபடியும் குருதேவர் தோன்றி ஆசி புரிந்தார். உடனே நான் மெய்சிலிர்த்து எழுந்தேன். அன்று எனக்கு ஒரு பொன்னாள். ஏனெனில் அதுமாதிரியான மெய்சிலிர்ப்பு எனக்கு அப்பொழுதுதான் முதன் முதலாக ஏற்பட்டது.

N. ஸ்ரீனிவாசன்
சென்னை

*　　*

ஸ்ரீலஸ்ரீ ஜகத்குரு.........மகோன்னதமான சேவை புரிந்து வருகிறார் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இருப்பினும் சுவாமி சிவானந்தஜி மஹராஜ் தனித்து நின்று செய்யும் சேவைக்கு முன் அது ஒன்றுமில்லை. நான் ஒவ்வொரு தடவையும் அவருடைய ஆஸ்ரமத்திற்குச் சென்று பார்க்கும் பொழுதும் முன்னைய தடவையில் பார்த்ததைவிடப் பல மடங்கு வேலை பெருகியிருப்பதைக் காண்கிறேன். ஒரு வருமான வரி

கமிஷனரும் இதே கருத்தைத்தான் தெரிவித்தார் சுவாமிஜி தினந்தோறும் ஆயிரக் கணக்கான கடிதங் களைக் கவனிக்கிறார் என்று அவர் மேலும் கூறினார். சுவாமிஜி மஹராஜ் அவர்களின் ஆஸ்ரமும், அவரு டைய அகில உலகத் தொண்டும் நாளுக்கு நாள் அல்ல மணிக்கு மணி வினாடிக்கு வினாடி அபிவிருத்தி அடைந்து வருகின்றன. இது ஈடு இணையற்ற சித் சக்தியின் வேலை என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஸ்ரீலஸ்ரீ பிரதிவாதி—பயங்கரம்
அண்ணங்கராச்சார்யஸ்வாமி
காஞ்சீபுரம்

* * *

புத்தக வடிவில் தாங்கள் பொழிந்திருக்கும் ஆசி மழைக்குத் தங்களுக்கு எவ்வாறு நன்றி தெரிவிப்பது என்றே எனக்கு விளங்கவில்லை. என்னை ஆஸ்ரமத் திற்கு வந்து ஆன்மீக கங்கையில் நீராடிச் செல்லுமாறு அன்புடன் அழைத்திருக்கும் சுவாமிஜியின் கருணை யைக்கண்டு மெய்மறந்து இருக்கின்றேன். அந்தச் சந்தர்ப்பத்தை விரைவில் அந்த நாதபிரம்மம் ஏற்படுத் தியருளுவாராக.

சங்கீதகலா சிகாமணி
பேராசிரியர் R. ஸ்ரீனிவாசன் M.A.
ரிடையர்டு பிரின்ஸிபால், திருவனந்தபுரம்
சர்வகலாசாலை
ரிடையர்டு டைரக்டர், திருவனந்தபுரம்
வானொலி
மைலாப்பூர், சென்னை.

இரண்டு நாட்களுக்குமுன் சுவாமிஜி என்னுடைய கனவில் தோன்றி என்னுடைய ஆரோக்கியத்திற்காகப் பருகுவதற்கு எதையோ கொடுத்தார்.

குருதேவ, நான் என்னுடைய வாழ்க்கையைத் தங்கள் பாதாரவிந்தங்களுக்காக அர்ப்பணிக்க விரும்புகின்றேன். தங்களை என்னுடைய எல்லாப் பிறவிகளிலும் குருவாக அடைய வேண்டுமென்பது ஒன்று தான் என்னுடைய ஆசை. அது தங்கள் கிருபையால் தான் நிறைவேறும். எனக்கு உறுதியைக் கொடுத்தருள்க.

*சிவானந்த சாந்தி, டேராடூன்*

*　*　*

"வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிபெற நிச்சயமான வழிகள்" என்ற நூலைப் படித்தேன். அது ஒரு தத்துவக் களஞ்சியம். அதை அடைந்தது என்னுடைய நல்ல அதிருஷ்டமே யாகும்.

M. W. ஆதர்டன், செஷையர், இங்கிலாந்து.

*　*

தாங்கள் அதிசயங்களுக் கெல்லாம் அதிசயம். சாசுவதப் பேரானந்தம். எங்களிடம் தாங்கள் காட்டும் கருணை எல்லையற்றது.

*கேதார் நாத் ஆனந்தா, புதுடெல்லி.*

*　*　*

உண்மையான ஆன்மீக மானிடர்களுக்கு பேரானந்த ஊற்றாகவும், தெய்வீக அன்பாகவும் திகழ்கின்ற குருதேவரிடமிருந்து வரும் உள்ளத்தைத் தொடுகின்ற

ஊக்குவிக்கும் ஒரு செய்தி என்னுடைய வாழ்நாள் முழுவதும் சிலிர்ப்பை ஏற்படுத்தி விடும்.

என்னுடைய ஐந்து விலா எலும்புகளை அறுத்து எடுக்க வேண்டியிருந்த பிளாஸ்டிக் ஆபரேஷன் சமயத்தில் ஆழ்ந்த குரு பக்தியுடன் குரு கிருபையை வேண்டி நின்றேன். அதன் பயனாக குருதேவருடைய கருணை என்னை ஆபத்திலிருந்து காப்பாற்றியது.

ஆகவே குருதேவ் மஹராஜ் அவர்களை மனப்பூர்வமாக வேண்டிக் கொள்வதெல்லாம் அன்புகூர்ந்து ஆசிகளுடன் வழிகாட்டும் வகையில் ஒரு ஊக்குவிக்கும் செய்தியை அனுப்பி வைக்கவேண்டும் என்பதுதான். அதை நான் மதிக்கமுடியாத செல்வக் களஞ்சியமாகக் கருதுகின்றேன். அல்லல் படுவோருக்கு நான் இனி செய்யப்போகும் உண்மையான சேவைக்கு அதிலிருந்து என்னால் வற்றாத ஊக்கத்தைப் பெற்றுக் கொண்டிருக்க முடியும்.

ஸ்ரீ P. D. நாராயணசாமி, பெருந்துரை.

* * *

குருதேவருடைய கடிதம் கிடைத்த பிறகு எனக்கு ஏற்பட்டிருக்கும் மன அமைதியை என்னென்றுரைப்பேன்! அதை என்னால் ஒரு கடிதத்தில் விவரித்துவிட முடியாது. உண்மையில், நான் என்னுடைய கஷ்டங்களைக் குறிப்பிட்டு சுவாமி வெங்கடேசானந்தாவிற்கு எழுதிய அந்த கணத்திலேயே குருதேவருடைய காட்சி ஏற்பட்டது. உடனே மின்னல் வேகத்தில் என்னுடைய மயக்கமும் மறைந்தது. குருதேவருடைய கருணை இருக்கும்வரை எந்தவிதத் தீமைகளும் என்னை அணுக முடியாது. எனக்கு விரோதமாக ஏதோ சூழ்ச்சி நடக்கிறது என்று தெரியவந்த காரணத்தினால் சற்று அதிக கவனத்துடன் முன்னெச்சரிக்கை

யாக இருப்பதற்காகத்தான் சுவாமி வெங்கடேசானந்தாவிற்கு எழுதினேன்.

குருதேவருடைய ஆசிகளுடன் எனக்கு "சிவானந்த உபநிஷத்", "சிவானந்தர் இப்படிக் கூறுகின்ருர்" என்ற விலை மதிக்க முடியாத இரு புத்தகங்கள் கிடைத்தன. பின்னல் கூறப்பட்ட புத்தகத்தை நான் அடிக்கடி பார்த்துக் கொள்வதற்காக ஜேபியிலேயே வைத்திருக்கிறேன். குருதேவரை என்னுடைய இதயத்தில் பிரதிஷ்டை செய்து வைத்திருக்கிறேன் என்று கூறுவது மிகையாகாது. இரவு பகல் 24மணி நேரமும் நான் குருதேவரைத் தவிர வேறு யாரையும் காண்பதில்லை. குருதேவர் நல்ல ஆரோக்கியத்துடன் இன்னும் நூருண்டு காலம் வாழவேண்டும் என்பது ஒன்று தான் என்னுடைய பிரார்த்தனை.

M. ஸ்ரீனிவாசன், சென்னை.

* * *

ஆஸ்ரமத்தை விட்டு வரும்போது ஏற்படுகின்ற வேதனை ஒருவன் தன்னுடைய சொந்த வீட்டை விட்டுச் செல்லும்போது ஏற்படுகின்ற வேதனையைப் போல் இருக்கிறது.

தங்களுடைய சத்சங்கத்தில் இருந்த ஒவ்வொரு நிமிடத்தையும் நான் நன்கு அனுபவித்தேன். தங்களுடைய அற்புத மாணிக்கங்களைச் சந்தித்துப் பேசுவது ஒரு பேரானந்தமாகும்.

பியர்ஸ் கெர்விஸ் தன்னுடைய சமீபத்தில் வெளியிட்ட புத்தகத்தில் ஆஸ்ரமத்தைப் பற்றி ஒரு நல்ல அத்தியாயம் எழுதியிருக்கின்ருர். அதைப் படிப்பதற்கு மிகவும் நன்ருக இருக்கிறது.

மேஜர் ஜெனரல் A. N. சர்மா, டெல்லி.

தங்களைத் தரிசனம் செய்துவிட்டு வந்ததனால் என்னுடைய உடல்நிலையும் மனநிலையும் மிகவும் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அது தங்கள் மகிமை என்றே எண்ணுகின்றேன்.

தாங்கள் அங்கு மிக மாபெரும் வேலைகளைச் செய்து வருகின்றீர்கள். தங்கள் கருணையாகிய வலைக்குள் அகப்படுபவர்கள் அனைவரையும் பரமபதத்திற்கு அனுப்புவதற்குச் சொர்க்கவாயிலைத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

V. *பாஷ்யம் ஐயங்கார், கீழ்ப்பாக்கம்,* சென்னை-10.

* * *

தங்களுடன் தொடர்பு கொண்டதிலிருந்து என்னிடமிருந்த பல தீய குணங்கள் அழிந்துபட்டுவிட்டன. தங்களிடமிருந்து எனக்குக் கிடைத்துவரும் உற்சாகம் என்னை மெய்சிலிர்க்க வைக்கிறது.

V. K. *நாயர்,* பம்பாய்.

* *

அந்தரங்கத்திலே எழுகின்ற ஒரு தெய்வீக உணர்ச்சியின் வேகம் காரணமாக நான் என்னையறியாமலேயே தங்கள் முன்னிலைக்கு ஈர்க்கப்படுகின்றேன். அது இன்றி நான் வாழ்வின் ஒளியையே இழந்தவனாக உணருகின்றேன்.

G. N. S. *மூர்த்தி* M. A., கரக்பூர்.

* *

சுவாமி சிவானந்தர் அனுபூதி யடைந்த அகில உலக தீர்க்கதரிசி என்பது என்னுடைய திடமான

நம்பிக்கையாகும். தற்காலத்தில் அவருக்கு இணையானவர் யாரும் இல்லை.

மேஜர் ஜெனரல் A. N. சர்மா, நாங்கால பள்ளத்தாக்கு.

*　　　*

என்னுடைய நண்பர் ஸ்ரீ G. K. மேனன் அவர்கள் ஸ்ரீ குருதேவர் அவர்களிடம் வைத்த நம்பிக்கை காரணமாகவும் மஹா மிருத்யுஞ்ஜய ஜெபத்தாலும் நல்ல அபிவிருத்தி அடைந்திருக்கிறார். அவர் தன்னுடைய பணிவான வணக்கத்தைத் தெரிவிக்கும்படி என்னிடம் கூறினார். நடப்பதற்குரிய பலம் பெற்றதும் ஸ்ரீ குருதேவருக்கு அவர் எழுதுவார். அவருக்கு திடீரென்று ஏற்பட்ட நோயும் அதிலிருந்து விரைவில் நிவாரணம் பெறுவதும் ஸ்ரீ சற்குரு மஹராஜ் அவர்களின் மற்றொரு அதிசயம்தான்.

சிவானந்த நீலகண்டன், கல்கத்தா.

*　　　*

இந்த அற்ப ஜீவனுக்கும் குருதேவர் காட்டும் அன்பிற்கும் ஆதரவிற்கும் காரணம் அவர் "அன்பும் கருணையும்நிறைந்த பரமேசனாக" இருப்பதுதான். அவருடைய புனித பாத கமலங்களே எனது புகலிடம். அவரே எனது ஒளியும் மோக்ஷமும் ஆவார். அவருடைய கருணை என்னை மேலே தூக்கி விடும். இல்லாவிடில் என்னுடைய பாரம் என்னையே பாதாளத்திற்குள் அழுத்தி விடும். இந்த ஜீவன்கூட அவருடைய அன்புக்குப் பாத்திரனாகி விட்டதே என்று எண்ணும்போது எனக்கு உண்மையாகவே ஆச்சரியமும் பெருமையும் ஏற்படுகின்றது. அதற்குக் காரணம்

என்னுடைய குருதேவரின் தாராள சிந்தையும் எல்லையில்லாப் பெருமையுமே யாகும்.

என்னுடைய உள்ளம் பணிவு நிரம்பியதாக இருக்குமாக. அப்பொழுதுதான் நான் அவருடைய அன்பிற்குத் தகுதியுடையவனுவேன். அவர் அன்பின் அவதாரம். ஆன்மீக வாழ்வில் அவருடைய இனிய அன்பே எனக்கு ஆனந்தமும் பாதுகாப்புமாக இருக்கும்.

R. R. ஜோஷி
சென்னை

* *

சுவாமிஜியின் உபதேசப்படி நான் மிருத்யுஞ்ஜய ஜெபம் செய்து வருவதோடு சோமவார விரதமும் முறையாக அனுஷ்டித்து வருகின்றேன். இப்பொழுது எனது கணவர் ஸ்ரீ ராம்ஜுத் பரிபூரண குணமடைந்து விட்டார் என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். மிருத்யுஞ்ஜய மந்திரத்தின் சக்தியை என்னுல் வர்ணிக்க இயலாது. அது அற்புதமானது என்றுதான் சொல்ல முடியும். என் கணவர் இவ்வளவு சீக்கிரம் குணமடைந்தது குறித்து மருத்துவர்களும் மற்றவர்களும் திகைத்து நிற்கின்றனர். நோய் மிகக் கடுமையாக இருந்தது. குரு கருணையால் தான் என் கணவர் குணமடைந்தார் என்று நான் உறுதியாகக் கூறுவேன்.

நான் ரிஷிகேசம் வந்து சுவாமிஜியை தரிசித்து சுவாமிஜியிடமிருந்து உபதேசம் பெறலாமென்று விரும்புகின்றேன்.

ஆன்மீகப் பாதையில் சுவாமிஜி எனக்கு நிச்சயம் வழிகாட்டுவார் என்று உறுதியாக நம்புகின்றேன்.

சுவாமிஜியின் பாத கமலங்களில் நான் பூரண சரணாகதி அடைகின்றேன்.

*சாரதா*

*　　　　*

"குருதேவ் சிவானந்தா" (என்ற நூல்) ஸ்வாமி சிவானந்தஜியைப் பற்றியும் அவரைச் சுற்றி வளர்ந்துள்ள பல்வேறு ஸ்தாபனங்களைப்பற்றியும் விவரித்துக் கூறும் மிகப் பொருத்தமான நூல்மட்டுமல்லாது மானிட உள்ளத்திற்குத் தெளிவாகும் தெய்வீக அம்சங்களையும் நல்ல முறையில் எடுத்து விளக்கும் நூலாகவும் விளங்குகின்றது. இந்தத் தெய்வீக அம்சங்கள் எப்பொழுது எப்படி சுவாமிஜியின் நடத்தையின் மூலமாகவும், செயல்களின் மூலமாகவும், வெளிப்படுத்தப் படுகின்றன என்பதைத் தாங்கள் விளக்கியிருக்கும் முறை அற்புதமாக இருக்கிறது. ஆன்மீகத்தைப் பற்றி அறிந்து கொள்ளவும் வாழ்க்கையில் ஆன்மீக நோக்கத்தை விருத்தி செய்து கொள்ளவும் விரும்புகின்றவர்கள் இப்புத்தகத்தை ஒரு முறை படித்தால் அது அவர்கள் உள்ளத்தில் நல்ல கருத்தை ஆழப் பதிய வைக்கும் சக்தி வாய்ந்ததாக இருக்கிறது.

சுவாமிஜி ஒரு பரம குரு. நான் அவரை உளமாற வணங்குகின்றேன். வாழ்த்துகின்றேன்.

K. A. ஹுசேன், புதுடில்லி

*　　　　*

நான் இப்பொழுதுதான் "குருதேவ் சிவானந்தா" வைப் படித்து முடித்தேன். உடனே இந்த அருமையான புத்தகத்திற்கு ஏற்கனவே வந்திருக்கும் பல புகழ்மாலைகளுடன் என்னுடையதையும் சேர்த்துவிட

வேண்டும் என்கின்ற உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. குருதேவருடைய வாழ்க்கையைப்பற்றி இவ்வளவு கவர்ச்சிகரமான முறையில் அமைந்த புத்தகம் எதையும் இதுவரை நான் படித்ததில்லை. நடையிலே கவர்ச்சி, விஷயத்திலே கவர்ச்சி, ஆசிரியரிடத்திலே கவர்ச்சி. இந்தப் புத்தகத்தை நான் படிப்பதற்கு முன் எனக்குத் தெரியாத பல விஷயங்கள் இப்பொழுது தெரிய வருகின்றன. குருதேவருக்கு உதவியாக இருந்து சீர்கெட்ட நிலையில் இருக்கும் இந்த மானிட வர்க்கத்தை உய்விப்பதற் கென்றே ஆண்டவன் உங்களை இப்பூவுலகிற்கு அனுப்பியிருக்கிறார் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.

A. K. ஸின்ஹா
ஓய்வுபெறும் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்
பாட்ணா

முற்றும்

ஸ்ரீ சற்குருநாதரின் பாதார விந்தங்களில் சமர்ப்பணம்.

---

